சிவமயம்

# தமிழ் வேதம்

## தமிழ்மறை மூலங்களுடன்

---

தென் ஆப்பிரிக்கா, டர்பன்
"செந்தமிழ்ச் செல்வன்" பொது ஆசிரியன்
கோ. இராமசாமி
எழுதியது.

---

யுனைடட் அச்சுக்கூடம்
உஎ, போண்டு வீதி,
டர்பன், நெட்டால்.
விசு, ஆனி.

---

# TAMIL VEDAM

## WITH THEVARA HYMNS

BY

**G. RAMASAMY**

*General Editor, "Sentamil Selvan"*

*Publishers:*

**UNITED PRESS**

**27, BOND STREET, DURBAN,**

**NATAL.**

**1941**



---

PRINTED AT THE JUPITER PRESS, MADRAS, S. INDIA

# அட்டவணை

# பட அட்டவணை



**சிவபிரான்**

பேராற்றலும் பெருந்தொழிலும் கொண்டு ஆதியில் மனித உய்வுக்கு எழு கோடி தமிழ் வேதங்கள் செய்து அருந்தொண்டாற்றிய ஆண்டவன்.

பக் - ௫

# முன்னுரை

அன்பே சிவம்; சிவமே அன்பு. "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே" என்பது திருவாசகம்.

அன்பின் இயல்பு என்னை ? அன்பின் இயல்பாவது, பிற உயிர் துன்புறுங்கால், அதன் துன்பைப் போக்கக் கருத லும், கசிதலும், நெகிழ்தலும், விதிர் விதிர்த்தலும், விரைந்து முயலலுமாகும் என்று சுருங்கக் கூறலாம்.

அன்பாகிய சிவம் எதன் துன்பங்களைய விரைந்து முயல் கிறது? உயிரின் துன்பங் களைய அன்பாகிய சிவம் விரைந்து முயல்கிறதென்க.

உயிர் அறியாமைக் கட்டுடையது. அதனால், அது துன்புறுவதாகிறது. உயிர் அறியாமைக் கட்டினின்றும் விடுதலை யடைந்து துன்பத்தைப் போக்கிக்கொள்ள இய லாது கிடக்கிறது. உயிரின் துன்பத்தைக் கண்டு அன்பு வடிவான சிவம் வாளா கிடக்குமோ ? அன்புச் சிவம் உயிரின் மீது அருள் சுரக்கிறது; சுரந்ததும் உயிர் தனுகரண புவன போகங்களைப் பெறுகிறது. தனுகரண புவன போகப் பேற்றால் உயிரின் அறியாமை சிறிது நீங்குகிறது. உயிர், சிற்றறிவும் சிறு தொழிலும் உடையதாகிறது. சிவத்தின் அருளால் தனுகரண புவன போகங்களைப் பெற்றுச் சிறிது அறிவு விளக்கமுற்ற உயிர், சிவமாக முயலுதல் வேண்டும்.

உயிர் சிவமாதற்கு, அதுபற்றி நின்று ஒழுகும் நெறியே அன்புநெறி என்பது. அன்பு நெறிக்குப் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. அவை, சிவநெறி, திருநெறி, அரு நெறி, அருள்நெறி, சமயம், சைவம் முதலியன.

அன்புநெறி என்னும் சிவநெறி, எக்காலத்தில் தோன்றியது? அக்காலத்தை ஆராய்ச்சியாற் காணப் பல பேரறிஞர் முயன்றனர்; முயல்கின்றனர். அம்முயற்சியால் இன்னும் முழு வெற்றி விளையவில்லை. சிவநெறி தோன்றிய காலம் இன்னது என்று அறுதியிட்டுக் கூறுதல் அருமை.

சிவநெறி தொன்மையது; மிகத் தொன்மையது. சிவநெறி தொன்மை யுடையது என்று சொல்லுதற்குப் பல திறச் சான்றுகள் உள்ளன. இம் முன்னுரையில் அவைகளை விரித்துக் கூற வேண்டுவதில்லை. பால்டிக் கடலோரத்திலும், நீல நதிக்கரையிலும், யூபரெதிஸ், டைகிரிஸ் என்னும் ஆறுகளின் இடையிலும், இந்தியாவில் அணித்தே காணப் பெற்ற மகோஞ்சதாராவிலும், வேறு சில இடங்களிலும் சிவலிங்கங்கள் காணப்படுதலைச் சிவநெறியின் தொன்மைக்கு ஒரு சிறந்த சான்றாகக் கூறலாம் என்று குறிக்கும் அளவில் நின்றுவிடுகிறேன்.

தொன்மை வாய்ந்த சிவநெறி, பலவாறு வளர்ந்து வரலாயிற்று. அது கிறிஸ்து பிறப்பதற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர், 'சித்தர்' என்ற கூட்டத்தவரால் வளர்க்கப் பட்டது; பின்னே வேத முனிவரராலும், ஆகம அறிஞராலும், சங்கப்புலவராலும் ஓம்பப்பட்டது. கிறிஸ்துவுக்குப் பின்னர், சில நூற்றாண்டு கடந்து சிவநெறியில் சில குழப்பங்கள் விளைந்தன. காரணம், இயற்கை நெறிக்கு மாறுபட்ட செயற்கைச் சிறுமை நெறிகளின் தோற்றமே யாகும். இடையில் நுழைந்த சிறுமைகள் சமய குரவரால் களையப்பட்டன. அன்புநெறி என்னும் சிவநெறிக்கு ஆக்கந் தேடிய பெருமை சமய குரவர்க்கே உண்டு என்று கூறல் மிகையாகாது. இக் குரவர் வழி வழி வந்து, சிவநெறியை நன்முறையில் வளர்த்தவர் பலர். அவருள் குறிக்கத் தக்கவர் திருமூலர், சேக்கிழார், பட்டினத்தார், அருணகிரியார், தாயு

மாணூர், சிதம்பர சுவாமிகள், இராமலிங்க அடிகள் முதலி யோர்.

தொன்றுதொட்டு வாழையடி வாழையென வளர்ந்து வரூஉம் சிவநெறி, ஒரு சாதிக்கோ, ஒரு மதத்துக்கோ, ஒரு மொழிக்கோ, ஒரு நிறத்துக்கோ, ஒரு நாட்டுக்கோ உரிய தன்று. அஃது, உலகுக்குரியது; கட்டுப்பாடற்றது; பொதுமையது. சிவநெறியின் பொதுமை, அதை முறை முறையே ஓம்பி வந்த பெரியோர்களின் நன்மொழிகளால், இனிது விளங்குகிறது. அம்மொழிகளை ஈண்டு நிரலே கிளந்து கூறின் முன்னுரை பெருகும். தாலீபுலாக நியாயம் பற்றிச் சில எடுத்துக் காட்டுதல் சாலும்.

"நல்லார்கள் , . . . .
எல்லார் களும்பரவும் ஈசனை"

"பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்"

—ஞானசம்பந்தர்

"வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலும் ஏழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே"

"விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே
எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்"

—அப்பர்

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"

"ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே"

" அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரி சீசன் அருள்பெற லாமே "

—திருமூலர்

" சமய பேதத்தவர்க் கணுகொணு மெய்ப்பொருள் "
" கும்ப கோணமோ டாரூர் சிதம்பரம் . . . .
. . . . உலகெங்கு மேவிய தேவால யந்தொறு
பெருமாளே."

—அருணகிரிநாதர்

" வேறுபடு சமயமெலாம் புகுந்து பார்க்கில்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை "

—தாயுமானர்

" பெருகியபே ரருளுடையா ரம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலென் கின்றாய்
அருகர்புத்த ராதியென்பேன் அயனென்பேன் நாரா
யணனென்பே னரனென்பே னாதிசிவ னென்பேன்
பருகுசதா சிவமென்பேன் சத்திசிவ மென்பேன்
பரமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசுத்த பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ மென்பனிவை சித்துவிளை யாட்டே "

—இராமலிங்க அடிகள்

" ஓது சமயங்கள் பொருளுணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாது சமயம் பொருள் நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்ல எனும் பிணக்கதின்றி
நீதியினல் இவை யெல்லாம் ஓரிடத்தே காண
. . . . . . உ

— அருணந்திசிவம்

பொது நெறி என்று பெரியோர்களால் வளர்க்கப் பெற்று வந்த சிவநெறி, இற்றை ஞான்று எந்நிலை யுற்றுக் கிடக்கிறது? அந்தோ! அந்தோ!! சிவநெறி மீது சாதிச் சேறுகளும், மதப்புற்றுக்களும், பிற குப்பைகளும் எழும்பி மேடிட்டு நிற்கின்றன. இவைகளால் சிவநெறியின் ஒளியைப் பெரிதும் மண்பனை பெருது சவலை யடைகிறது. இடையில் நுழைந்த மாசுகளை—சிறுமைகளை—புன்மை களைக் களைந்தெறிய வேண்டுவது அறிஞர் கடமை. சாதிக் கும், மதவெறிக்கும் இரையாகுதல் சிவநெறியை ஓம்புவ தாகாது. காலதேச வர்த்தமானத்துக் கேற்ற முறையில் சிவநெறியை வளர்க்கப் புகுவதே சிறந்த சிவத்தொண் டாகும்.

பொதுமைச் சிவநெறி, உலகுக்கு ஒரு பெரும் மர மெனத் திகழ்வது. அதை உலகுக்குரிய ஒரு ஜோதி விருட்சம் என்று கூறலாம். ஜோதி விருட்சத்தின் ஆணி வேர் உலகின் எப்பகுதியில் ஊடுருவிச் சென்றுளது? அறி ஞர்களே! சரித்திர உலகத்தை நோக்குங்கள். எப்பகுதி? ஆராயுங்கள்.

சிவநெறி என்னும் ஜோதி விருட்சத்தின் ஆணிவேர் தமிழ் நாடென்று அறிஞர் கூறுப. இதுபற்றியே, மணி வாசகனார், "தென்னாடுடைய **சிவனே** போற்றி — எந் நாட்டவர்க்கும் **இறைவா** போற்றி" என்று அருளினார் போலும்.

தமிழ் நாட்டின் எல்லை ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வித வரம்புடையதாயிருந்தது என்று சரித்திர உலகங் கூறு கிறது. இக்காலத் தமிழ் நாட்டின் எல்லை எந்நிலையிலிருக் கிறது? இரங்கத் தக்கதாயிருக்கிறது. பண்டை நாளில் தமிழ் நாட்டின் எல்லை பரதகண்டத்தின் முடி வரை மண்டி யிருந்தது. இந்தியக் கடல் நிலப்பரப்பாயிருந்த ஞான்று,

அது தமிழ் நாடாகவே இருந்தது. ஆபிரிக்கா வரைத் தமிழ் நாடு தனதாக்கஞ் செலுத்தியதும் ஈண்டுக் கருதற்பாலது.

தமிழ் நாட்டவர் யாண்டுச் செல்லினும் அவரைத் தொடர்ந்து அவரது சிவநெறியுஞ் செல்லும். இந்நாளில் தமிழ் மக்கள் உலகின் பல பகுதிகளிலும் குடியேறிச் செல்கிறார்கள். அவர்களுடன் சிவ நெறியும் குடியேறுகிறது.

பழந் தமிழ் நாட்டின் ஒரு கூறு என்று சொல்லப்படும் தென்னாப்பிரிக்காவில் தமிழ் மக்களிற் சிலர் குடி புகுந்து வதிந்து வருதல் உலகறிந்த தொன்று. அவ்விடத்தே குடிபுகுந்த தமிழ் மக்கள் தாய் மொழியையும், தாய் நெறியையும் மறந்தார்களில்லை. இந்நாளில் தாய்மொழியும், தாய்நெறியும் தாம் பிறந்த நாட்டை அதிகம் வேட்கின்றனவா? தாம் குடி புகுந்த நாடுகளை அதிகம் வேட்கின்றனவா? இவ் வினாக்கட்கு எவ்வழியில் விடை யிறுப்பது? இப்பொழுது தாய் நாடு பலவழியிலும் சிறுமை யுற்றிருக்கிறது! மொழியையும் நெறியையும் கூட அலட்சியஞ் செய்யும் சிறுமை யுற்றிருக்கிறது!! ஊக்கமும் ஆக்கமுஞ் சேய்நாடுகளி லிருந்து தாய் நாட்டுக்குப் போதரல் வேண்டும் போலும்!

தாய் நாடடை இருள் சூழ்ந்துள்ள இவ்வேளையில் சேய் நாடுகளில் ஒன்றாகிய தென்னாப்பிரிக்காவில் சிவநெறி ஆக்கம் பெற்று வருதல் போற்றற்குரியது. ஆண்டுத் தாய்மொழியும் வளம் பெற்று வருதல் மகிழ்ச்சி யூட்டுகிறது. சிவநெறி வளருமிடத்தில் தமிழ்மொழி வளர்தல் இயல்பு. சிவ நெறிக்கும் தமிழ்மொழிக்கும் நெருங்கிய தொடர்புண்டு.

தென்னாப்பிரிக்காவில் சிவநெறி வளர்க்கும் அன்பர் பலருளர். அவருள் குறிக்கத் தக்கவர் சிலர். அச் சிலருள் ஒருவரைச் சென்னையில் நேரிற் காணும் பேறு எனக்குக் கிடைத்தது. அது குறித்து யான் வரம்பிலா இறும்பூ தெய்துகிறேன். அவ்வொருவர் யார்? திரு. கோ. இராம

சாமி நாயடு அவர்கள். அவரை முதன்முதல் கண்டபோது அவர்தம் சிவம் பொலியும் முகமும், தமிழ் கமழும் நாவும் என் நெஞ்சைக் கவர்ந்தன.

திரு. கோ. இராமசாமி நாயடு அவர்கள் சிவநெறியை யும், தமிழ்மொழியையும் வளர்ப்பதற்குப் பல வழியிலும் பாடுபட்டு வருகிறார்கள். "செந்தமிழ்ச் செல்வன்" என் னும் பத்திரிகை வாயிலாகவும், பல பள்ளிகள், பல கழகங் கள், பல நிலையங்கள் வாயிலாகவும், பிற அமைப்புக்கள் வாயிலாகவும் திரு. நாயடு அவர்கள் ஆற்றிவருந் தொண்டு கள் அளப்பரியன. சிவநெறிக்கும் தமிழ் மொழிக்கும் திரு. நாயடு அவர்கள் தங்கள் உடல் பொருள் ஆவி மூன் றையும் அர்ப்பணஞ் செய்து உழைத்து வருகிறார்கள் என் பது தமிழ்த் தாய்க்கு நன்கு தெரியும். திரு. நாயடு அவர் கள் வாழ்க.

திரு. கோ. இராமசாமி நாயடு அவர்கள் யாத்த "தமிழ் வேதம்" என்னும் சீரிய நூல் எனது பார்வைக்கு வந்தது. நூற்கண் நால்வர் வரலாறும், சில திருநாள் வரலாறும், மறை மொழிகளும், பிறவும் அடங்கி யிருக்கின்றன. நூலில் சிவ மணமும் தமிழ் மணமுங் கமழ்கின்றன. நூல் இனிய எளிய நடையில் எழுதப்பட்டுளது. பொருள்கள் எளிதில் புலனு கின்றன. கற்றவர்க்கும் மற்றவர்க்கும் நூல் பயன்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவ் விழுமிய நூல் தென் னுப்பிரிக்காவைப் பல வழியிலும் விழிக்கச் செய்யும் என்று உறுதியாக நம்புகிறேன். இத்தகைய நூலைப் பொதுவாகத் தமிழுலகுக்கும் சிறப்பாகத் தென்னுப்பிரிக்காவுக்கும் உதவிய உழுவலன்பரும், கெழுதகை நண்பருமாகிய திரு. கோ. இராமசாமி நாயடு அவர்கட்கு எனது நன்றி யறிதல் உரிய தாக. அவர்கட்கு நீண்ட நாளையும், நோயற்ற யாக்கையை யும், சிவத்தொண்டு வேட்கையையும், பிற நலங்களையும்

தடங்கருணைப் பெருங்கட லாகிய சிவபெருமான் அருள் வாழ்க. சிவநெறி வாழ்க; தமிழ்மொழி வெல்க.

“அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற் சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே”

—இராமலிங்க அடிகள்

“காலமொடு தேசவர்த்த மானமாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதல் மதங்க ளாகி
மதாதீதம் ஆனஅருள் மரபு வாழி
சாலமிகும் எளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தஅருள் தன்மை வாழி
ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
அகண்டிதா காரஅரு ளடியார் வாழி”

—தாயுமானார்

சிதம்பர சுவாமிகள் மடாலயம்,
திருப்போரூர்,
விஷு, வைகாசி.

திரு. வி. கலியாணசுந்தரன்.





**மதுரை சோமசுந்தரக்கடவுள் ஆலயம்**

உயரம்: அடிகள் ௧௬௨. பாண்டியன் காலத்துக் கட்டப்பட்ட பழைய ஆலயம். பிறகு கரிகாற் சோழரால் புதுப்பிக்கப்பட்டது.

# தமிழ் வேதம்

## சிறப்புரை

**தமிழ்வேதம்** என்னும் சிறந்த தமிழ்நூல் எம் பார்வைக்கு வந்தது. தமிழ்மொழியையும், தமிழ்ச் சமயத்தையும் வளர்க்க, தக்க ஆதரவு காணாது தாய்நாடு தவித்து நிற்கும் இக்காலை, சேய்நாடாகிய நெட்டாலிலிருந்து "தமிழ் வேதம்" என்ற பெயர் முழங்கித் தமிழர் கலை வளர்ச்சிக்கும், சமயவளர்ச்சிக்கும் பற்றுக்கோடாகத் திகழும் வகையில் இந்நூல் வெளிவருவது தமிழ்நாடு செய்த தவப்பயனையாம்.

இந்நூலின்கண் உலகத்தோற்றம், தமிழ்மொழித் தோற்றம், தமிழ்ச் சமயத்தோற்றம், தமிழ்மறைத் தோற்றம், நாற்பெருங்குரவர் வரலாறு, தமிழர் விழாக்கள் சிலவற்றின் வரலாறு, வசனப் பிரார்த்தனைகள், செய்யுட் பிரார்த்தனைகள், தமிழ்மறை மூலங்கள் ஆகிய எல்லாம் அடங்கியுள்ளன.

ஆலயம், பள்ளிக்கூடம், சபை முதலிய இடங்களில் கூட்டப் பிரார்த்தனைசெய்ய விரும்புவோர்க்கும், வீடு, இடுகாடு முதலிய இடங்களில் தனிப் பிரார்த்தனை செய்ய விரும்பு வோர்க்கும், நால்வர்தம் குருபூசை நடைமுறைக்கும் பேருதவியாமாறு இந்நூலை ஆசிரியர் திரு. கோ. இராமசாமி நாயடு அவர்கள் திறம்பட எழுதியுள்ளார்கள். படிக்க எளிதாயும், சுவை பயப்பதாயும், நூற்பொருள் தெளிவாய்ப் புலப்படுமாறும் இந்நூலின் உரைநடை இனிது அமைந்துள்ளது. எடுத்துக்கொண்ட பொருள்களுக் கெல்லாம், ஆங்காங்குத் தக்க ஆதாரங்களை ஆசிரியர் எடுத்துக் காட்டிப்

போதல் அவர்தம் நுண்மாண் நுழைபுலனையும், அவைகளைக் கண்ட ஆராய்ச்சித்திறனையும் நன்கு தெரிப்பதாகும். இக்கால முறைக் கேற்றவாறு இருபத்து நான்கு அழகிய படங்களைச் சேர்த்து ஆசிரியர் இந்நூலுக்குச் சிறப்பினை அளித் துள்ளமை போற்றற் குரியதாம்.

சேய்நாடு சென்றும் தாய்நாட்டுத் தனிமொழிக்கும், ஒப்பற்ற தனித் தமிழ்ச் சமயத்திற்கும் சிறந்த தொண் டாற்ற முற்பட்ட ஆசிரியர்தம் அரும்பெரும் முயற்சி தமிழ் மக்கட்குச் சிறந்தவொரு வழிகாட்டியாகும். தேவார திரு வாசகங்களை "யாம் படித்தறிந்து சிவபிரான்மீது பற்றுக் கொண்டோம். காலையும் மாலையும் வணங்கிவந்தோம். வணங்கத் தொடங்கியதிலிருந்து யாம் தொடங்கிய காரியங் கள் எல்லாம் சித்தியாய்க்கொண்டு வந்தன. இவ்விதமே மற்றவரும் சிவபிரானை வணங்கிச் சித்திகள் அடைந்து இனிது வாழ விரும்பினோம்" என்று ஆசிரியர் தம் கொள்கையையும் நோக்கத்தையும் தெளிவாக விளக்கி யுள்ளமை பொதுவாகத் தமிழ் மக்களாலும் சிறப்பாகச் சைவப் பெருமக்களாலும் பொன்னேபோற் போற்றற்குரிய தாம். ஆசிரியர் தம் உண்மை யறிவும், ஒழுக்க உயர்வும், பரந்த நோக்கமும் வியக்கற்பாலன.

இந்நூலைத் திறம்பட எழுதித் தென்னாப்பிரிக்காவி லுள்ள தமிழ்மக்களையும், தென்னாட்டுத் தமிழர்களையும் தட்டி யெழுப்பித் தொண்டாற்ற ஊக்கமளித் துள்ள ஆசிரியரவர்கள் இவ்வாறே இன்னும் பல சிறந்த நூல்கள் எழுதிப் பெருந்தொண்டாற்றிப் பெருஞ் சிறப்பெய்துமாறு எல்லாம் வல்ல தமிழ்க்கடவுள் திருவருள் புரிவாராக.

சென்னை,
௩௰-௯-௪௩. } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# நூலாக்கிய நோக்கம்

## சிவபிரானுக்கு வணக்கம்

சிவபிரான் பேராற்றலும் பெருந்தொழிலும் உடையவர். அவர் ஆதியில் அருளே உருவாய்த் தோன்றினவர். மனித உய்வுக்கு ஏழு கோடி வேதங்கள் செய்து அருந்தொண்டாற்றினவர். அவர் செய்த அற்புதங்களையும், மகிமைகளையும் நாயன்மார்கள் தேவாரத்திலும், திருவாசகத்திலும் குறிப்பிட்டுள்ளனர். அவைகளை யாம் படித்தறிந்து சிவபிரான் மீது பற்றுக்கொண்டோம். காலையும் மாலையும் வணங்கி வந்தோம். வணங்கத் தொடங்கியதிலிருந்து, யாம் தொடங்கிய காரியங்கள் எல்லாம் சித்தியாய்க்கொண்டு வந்தன.

இவ்விதமே மற்றவரும் சிவபிரானை வணங்கிச் சித்திகள் அடைந்து இனிது வாழ விரும்பினோம். பல ஆண்டுகளுக்கு முன்னே, "பிரார்த்தனைச் சுருக்கம்" "சிவபிரான் தோற்றம்" என்ற சிறு நூல்களைச் செய்தோம். அதன் பிறகு நான்கு நாயன்மார்களின் சரித்திரங்களைச் சுருக்கமாய் எழுதி "தமிழ் வேதம்" என்ற தலைப்பில் ஒரு நூல் வெளியிட முயன்றோம். அம்முயற்சி இப்போது முடிந்தது கண்டு மகிழ்ந்து சிவபிரான் திருவடிகளுக்கு வந்தனஞ் செலுத்துகிறோம்.

## கற்றதன் பயன்

உலகில நாம் பிறந்து வளர்ந்து கற்றதன் பயன் என்ன ? பிழைக்கப் பொருள் தேடுவதுமட்டுமல்ல. சமயக் கொள்கைகள் கற்று அவைகளில் பற்றுடையவர்களாக வேண்டும். கடவுளை வணங்கி வாழவேண்டும். அப்போது

இறைவன் அருள்பெற்றுக் காரியசித்திகள் அடைந்து இனிது வாழலாம். ஈற்றில் இறைவனடி சேரலாம். சமயப்பற்றும் கடவுள் நம்பிக்கையும் இல்லாது மனம் போனபடி செல்வோமானால் கெட்டவர்களாவோம். தொடங்கும் காரியங்கள் முடியாமல் துன்பத்தையே அடைவோம். கடைசியில் கற்றும் பயன் பெருதவர்களாகி அவமே மாண்டு போவோம்.

உலகில் ஒரு பகுதி மக்கள் இன்பமாய் வாழுகின்றனர். இன்னொரு பகுதி மக்கள் துன்பமாய் வாழுகின்றனர். இவ்வுலகம் பெரியது. எல்லாரும் இயங்கக்கூடிய வழிகள் அநேகம் இருக்கின்றன. அவற்றில் செல்லக்கூடிய அறிவைப் பொதுப்பட எல்லா மனிதர்களுக்கும் கடவுள் கொடுத்திருக்கின்றார். அவ்வறிவை விருத்தி செய்து நல்வழியில் சென்று ஆக்கந் தேடினவர்களுக்கு இவ்வுலகம் இன்பமாய்த் தோன்றுகிறது. கற்றும் அறிவை விருத்தியாக்கி நல்வழியில் செல்லாதவர்களுக்கு இவ்வுலகம் துன்ப மயமாய்க் காணப்படுகிறது. ஆகையால் இன்பமும் துன்பமும் மனிதர்களில் இருந்தே ஏற்படுகின்றன. இதுவே கருமம், வினை, விதி எனப்படும். விதியை மனிதரே படைக்கின்றனர்.

## மனிதர் உய்வதற்கே சமயம்

உலகில் மனிதர் சமயக் கொள்கைகள் கற்று நல்லவராகி இறைவனை வணங்கி உய்வதற்குச் சமயம் ஏற்பட்டது. அதற்காகவே சிவபிரான் ஆதியில் தமிழ் வேதங்கள் அருளினார். அவைகளை அக்கால மனிதர்கள் கற்று அவரைக் கும்பிட்டு உயர்வு அடைந்தனர். அவ்வேதங்கள் ஒரு காலத்தில் ஏற்பட்ட பெருவூழியால் அழிந்தன. அவ்வூழிக்குத் தப்பினவருள் ஒரு பகுதியினர் ஆச்ட்ரேலியா சென்றனர். ஒரு பகுதியினர் ஆப்பிரிக்கா சென்றனர்; ஒரு பகுதியினர் அமெரிக்கா

சென்றனர்; ஒரு பகுதியினர் ஐரோப்பா சென்றனர். அவர்களே உலகமெங்கும் சைவசமயத்தை நிலைநாட்டினர். ஒரு பகுதியினர் தென்னிந்தியச் சமுத்திரக்கரை அடைந்தனர். மீண்டும் பட்டினங்கள் அமைத்து, பாண்டியன் என்ற பெயரில் ஆட்சி நடத்திச் சமயத்தை வளர்த்தனர். பின் வந்த சேர, சோழர்கள் அவர்களைப் பின் பற்றினர். பல சிவாலயங்களைக் கட்டினர். சிதம்பரம், மதுரை, இராமேசுவரம் முதலியவிடங்களில் இராமாயண காலத்திற்கு முந்தியே ஆலயங்கள் கட்டப்பட்டன. அவைகளால் ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்குமுன்னேயே தமிழர் சமய அறிவிலும், சிற்பத்திறமையிலும், நாகரிகத்திலும் உயர்ந்திருந்தனர் என்பதை அறியலாம். அக்காலத்தில் தமிழர் சமயம், ஆட்சி, நாகரிகம் முதலியன குமரி முனையிலிருந்து வடக்கில் உள்ள இமயம் வரையில் பரவி இருந்தன.

இப்படித் தமிழர் எங்கும் பரவி, ஆற்றோரங்களிலும் கடற்கரை யோரங்களிலும் பட்டினங்கள் அமைத்து ஆண்டு வருகையில், ஆரியர் என்ற வகுப்பார் இமயமலை வழியாய்த் தமிழ் நாட்டில் குடி புகுந்தனர். சிந்து நதிக்கரையில் வாழும் தமிழர்களுடன் கலந்தனர். அக்காலத் தமிழர்களுக்குச் சகோதர வாஞ்சை, விருந்தோம்பல் முதலிய குணங்கள் இருந்ததால் அவர்களை வரவேற்றனர். இடம் கொடுத்தனர். நாட்டில் ஒரு குறைவுமில்லாததால் வந்தவர்கள் நிலைத்தனர்.

## சமயம், நாகரிகம் தாழ்ந்தன

ஆதியில் இமயமலை வழியாகச் சிந்து நதிக்கு வடக்கில் நிலைத்த அந்நியர்கள் நாளடைவில் பலப்பட்டார்கள். பிறகு தமிழர்களை வென்று இராச்சியங்களை அங்கு ஏற்படுத்தினர்கள். அதனால் வடக்கில், தமிழர் சமயம், நாகரிகம், ஆட்சி

முதலியன ஒடுங்கின; அழிந்தன; மண்ணில் புதைந்து மறைந்தன.

இவ்விதம் வடக்கில் வந்து நிலைத்து இராச்சியங்களையும் வேறு சமயத்தையும் உண்டாக்கின ஆரியர்கள் பூர்வ காலத்தில் பெருவூழியில் தப்பி மேனாடுகளுக்குப் போய்த் தங்கிப் பல ஆயிரம் ஆண்டுகள் சென்றுபோனவர்களின் சந்ததிகளின் ஒரு பகுதியினரே இந்தியாவுக்குத் திரும்பி வந்தனர் என்பது ஆராய்ச்சியில் புலனாகிறது. ஆனால் அந்த அந்நியர்கள் தெற்கில் வெல்ல முடியாதவர்களாகி வட நாட்டிலேயே தங்கித் தங்கள் இராச்சியங்களைப் பலப்படுத்திக்கொண்டு நிலைத்துவிட்டார்கள்.

## நாயன்மார்கள் தோற்றம்

மேலே காட்டியவண்ணம் போரில் வெல்லமுடியாத தமிழ் நாட்டை நாளடைவில் அந்நியர் மொழியாலும் சமயத்தாலும் வெல்ல முயன்றனர். அதற்காக மொழியும் சமயப் பிரசாரமும் தமிழ் நாட்டில் பெருகச்செய்தனர். ஒரு நாட்டிற்கு உயிர்நாடிகளாயிருப்பன மொழியும் சமயமும் என்பதை அறியவேண்டும். இந்த இரண்டையும் ஒடுக்கினால் தேசம் தாழ்ந்துவிடும். ஆகையினால் ஒரு தேசம் உயர வேண்டுமானால் அத்தேசத்தின் மொழியும் சமயமும் உயரவேண்டும். அவை அழிந்தால் அத்தேசமும் கண்டிப்பாக அழியும். இக்கொள்கைபற்றித் தமிழ் நாட்டில் பிற சமயப் பிரசாரம் பெருகி வந்தது.

அச்சமயத்தில் நாயன்மார்கள் தோன்றினர். அவர்கள் மொத்தம் அறுபத்து நான்கு பேர்கள். அவர்களில் திருஞானசம்பந்த சுவாமிகள், அப்பர் சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் என்ற நால்வரும் முக்கியமானவர்கள். அவர்கள் சிவபிரான்மீது பெரும்பற்

றுக்கொண்டு சிவபிரானது மகிமைகளையும் அற்புதங்களையும் தோத்திரங்களாக அருளினர். அவர்கள் சைவசமய உண்மையையும், உயர்வையும் பரவச் செய்தார்கள். அவர்கள் செய்த தோத்திரங்கள் தேவாரம், தமிழ்மறை, திருமுறை, தமிழ் வேதம் எனப் பலப் பெயரால் வழங்கப்படுகின்றன.

## சைவ சமய எழுச்சி

சமயம் தமிழ்நாடெங்கும் பரவியது. பிறசமயப் பிரசாரம் வீழ்ந்தது. மக்கள் சைவசமயத்தையே உயர்ந்ததென்று உணர்ந்தனர். நேரில் அதன் மகிமைகளை அறிந்தனர். சத்திய சமயமென்று கூறினர். பிற சமயத்தினர் சைவசமயத்தை மேற்கொண்டனர். சிவாலயங்கள் புதுப்பிக்கப் பட்டன. பல புதியனவாய்க் கட்டப்பட்டன. சமயநூல்கள் பல ஆக்கப்பட்டன. இப்படிச் சில நூற்றாண்டுகள் வரையில் சைவசமயம் எழுச்சி அடைந்திருந்தது.

நாயன்மார்களுக்குப்பிறகு அந்நியர் அதிகம் குடிபுகுந்தனர். பிறசமயப் பிரசாரம் செய்தனர். வட நாட்டிலிருந்து அரசர்கள் படை எடுத்தனர். இதனால் அடிக்கடி போர்கள் நடந்தன. ஒரு பக்கம் சண்டைகளும், ஒரு பக்கம் பிற சமயப் பிரசாரங்களும் நடந்தன. பிற சமயப் பிரசாரங்களைத் தடுத்துச் சைவ சமயத்தைப் பிரசாரம் செய்வோர் குறைந்தனர். தமிழ்மறைகள் எழுதப்பட்ட ஓலைச் சுவடிகள் பல அழிக்கப்பட்டன. அழிக்கப்பட்டவை போக எஞ்சிய சுவடிகளைச் சிவபிரான்மீது அன்புகொண்ட அடியார்கள் சிலர் சிதம்பரத்தில் உள்ள கோவில் அறை ஒன்றில் இட்டுத் தாள்போட்டு மூடிவிட்டனர்.

## திருமுறை கண்ட சோழர்

தமிழ் மறைகள் சிதம்பர ஆலயத்தில் சுமார் நூற்றைம்பது ஆண்டுகளாவது அடைபட்டிருந்திருக்கவேண்டும்.

சனங்களில் அடியார்கள் ஓதத் தெரிந்தவர்களா யிருந்தனர். மற்றவர்கள் ஓதக் கற்றுக்கொள்வதற்கு நூல்கள் கிடையா. இப்படி அடைபட்டிருந்த தமிழ் மறைகளை இராசராச சோழர் விடுதலை யாக்கினர். பின்னர் அவர் அவையிலிருந்த நம்பியாண்டார் நம்பி என்பவர் அவற்றைத் திருமுறைகளாக வகுத்தார். சமயம் மீண்டும் பரவியது.

அவருக்குப் பிறகு சேக்கிழார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அறுபத்து மூன்று நாயன்மார்கள் சரித்திரங்களையும் கூறுகின்ற, பெரிய புராணம் என்ற நூலைச் செய்தார். நாயன்மார்கள் சிவபிரானை எப்படிப் புகழ்ந்து பாடினர்களோ அதேபோல் சேக்கிழார் நாயன்மார்களைப் புகழ்ந்து பாடினர். குருபூசை செய்வோர்க்குச் சேக்கிழார் செய்த பெரிய புராணம் பெரிதும் உதவியாக இருக்கின்றது.

## பல சமயக்கொள்கை பரவியது

பிறகு சுமார் மூந்நூறாண்டுகள் சமயம் செழித்திருந்தது. சனங்களும் சுகித்திருந்தனர். அதன் பிறகு தமிழ் மன்னர்க்குள் போர் மலிந்தது. அச்சந்தர்ப்பத்தில் வடநாட்டில் உள்ள அரசர்களுக்குத் தமிழ்நாட்டில் ஆட்சி செலுத்த இன்னம் வழி ஏற்பட்டது. அவர்கள் பிரவேசித்தனர். தமிழர்களை வென்று ஆட்சியை நாட்டினர். தங்கள் சமயங்களைப்பிரசாரம் செய்தனர். தமிழர் அச்சமயங்களை மேற்கொண்டனர். பல தெய்வ வணக்கத்தை அநுசரித்தனர். நாட்டை இழந்தனர். ஆன்மசக்தி குறைந்தனர். அடிமைகளாயினர். அதிலிருந்து சமயம் தாழ்ந்திருக்கிறதென்று சொல்லவேண்டும்.

இன்று பிறசமயத்தார் உன் சமயம் எது? சமயநூலின் பெயர் என்ன? அதன்கொள்கை எது? என்று கேட்டால் நம்மவர்கள் பதில் சொல்ல முடியாதவர்களாய் இருக்கின்றனர். ஆலயம், சபை, பள்ளிக்கூடம் முதலிய விடங்களில் கடவுளை

எல்லோரும் பொதுவாக வணங்கும் ஒரு தோத்திரம் சொல்லத் தெரியாமலிருக்கின்றனர் என்றால் கடவுள் அருளும், உயர்நிலையும் அடைவது எங்ஙனம்?

## சமய அறிஞர்களின் பணி

நாயன்மார்கள், ஆன்றோர்கள், சமய அறிஞர்கள் அருளிய சமய நூல்கள், தோத்திரங்கள் செய்யுள்வடிவில் இருக்கின்றன. அவைகளை, இன்ன இன்ன சமயத்தில் செய்யவேண்டிய தோத்திரங்கள் இன்ன இன்னவென்று வகுத்து, வசனங்களும்சேர்த்து எளிய முறையில் மாணவர்களும் கற்பதற்குப் பல சமயநூல்கள் வெளியாகவில்லை. சிவாலயங்களில் நடைபெறும் முக்கியத் திருவிழாக்களின் சரித்திரங்களைத் தொகுத்து எழுதின சமயநூல்களும் வெளியாகவில்லை.

நான்கு நாயன்மார்கள் குருபூசையை நடத்தச் சரித்திரங்களும் பாட்டுகளும் அடங்கிய நூல்கள் வெளியாகவில்லை. ஆலயங்களில் வேத நூல்கள் வைக்கப்பட்டில்லை. கல்வியால், சமய நூல்களால், சமய விருத்திக்குப் பாடுபடுகிறவர்களுக்குப் போதிய உதவிகள் இல்லாமற்போவதால், மனிதர், சமயக் கொள்கைகள் தோத்திரங்கள் எளிதில் கற்றுக்கொள்ள இயலாதவர்களாயினர்.

## எளிய முறையில் தமிழ் வேதம்

தென்னாப்பிரிக்காவில் பல விடங்களில் சிவாலயங்கள், தமிழ்ப் பள்ளிக்கூடங்கள், சபைகள், குருபூசைக் கூட்டங்கள் இருக்கின்றன. அவற்றில் கல்விப்பற்றும் சமயப்பற்றும் உடையவர்கள் தேவாரம்—தமிழ்வேதம் வேண்டுமென்று கேட்டனர். அவர்கள் எளிதில் கற்றுக்கொள்ளவும், பிற சமயத்தார் கேள்விகளுக்குப் பதில் கூறவும், நாயன்மார்கள் அருளிய தமிழ்மறை மூலங்கள் சிலவற்றைச் சேர்த்து

அவர்களுடைய சரித்திரங்களையும் சுருக்கி எழுதினோம். சிவாலயங்களில் நடைபெறும் முக்கியமான திருவிழாக்களின் சரித்திரங்களையும் சுருக்கி எழுதினோம். செய்யுள் பிரார்த்தனைகளும், வசனப் பிரார்த்தனைகளும், சமயக் கொள்கைகளும் சுருக்கி எழுதிப் படங்களுடன் "தமிழ் வேதம்" என்ற தலைப்பில் இந்நூலை வெளியாக்கினோம்.

ஆகையால் ஆலயம், பள்ளிக்கூடம், சபை முதலிய விடங்களில் கூட்டப் பிரார்த்தனை செய்ய விரும்புவோரும், வீடு, இடுகாடு முதலிய விடங்களில் தனிப் பிரார்த்தனை செய்ய விரும்புவோரும், வசனப் பிரார்த்தனை வேண்டுமானாலும், செய்யுள் பிரார்த்தனை வேண்டுமானாலும், எளிதாகக் கற்றுக்கொண்டு செய்யலாம். திருவிழாக் காலங்களில் திருவிழாவின் விபரங்களையும் சொல்லலாம். குருபூசைக் கூட்டத்தார் நாயன்மார்கள் சரித்திரத்தைச் சுருக்க முறையில் சொல்லலாம். குருபூசைக் காலத்தில் அதிக நேரமாகாமலிருக்க முதல் பதிகத்தையும் கடைசிப் பதிகத்தையும் சேர்த்திருக்கிறோம். முழுப் பதிகம் வேண்டுவோர், தேவாரம், திருவாசகம் பார்த்துக் கொள்ளலாம்.

## வேதம் ஓதினவர் உயர்ந்தனர்

உலகில் உள்ள சமயங்களுக்கெல்லாம் மொழிகளும் வேதங்களு மிருக்கின்றன. அதுபோலவே நமக்குப் புராதன மொழியும் வேதங்களும் இருக்கின்றன. வேதம் என்பது இறைவனை வணங்கும் நூல். அதை அநுசரித்து ஆண்டவனை வணங்கி அவர் அருள் பெற்றவர்களின் இருதய கமலங்களில் இருந்து எழுந்த புனித உணர்ச்சியின் மொழிகள், துதிகள், தோத்திரங்கள் கூட வேதங்கள் என்று கூறப்படும். அவை ஒரு கடவுளைத் துதிப்பன. நமக்கு வேண்டிய தோத்திரங்கள் நம் வேத நூலில் இருக்கின்றன.

சிலர் ஒவ்வொரு வேண்டுதலுக்கும் ஒவ்வொரு தெய்வ வணக்கம் செய்கின்றனர். அதை நிறுத்திச் சிவ பிரானையே வணங்கவேண்டும். நோய், துன்பம், வறுமை முதலியன நீங்கவும், பிள்ளைப்பேறு முதலியவைகள் பெற வும் வேண்டிய பிரார்த்தனைகள் தமிழ்வேதத்துள் இருக் கின்றன. அக்கால மனிதர்கள் அவைகளை ஓதிக் கல்வி, செல்வம், பலம், அறிவு, ஆட்சி முதலியவைகளில் உயர் வடைந்து இனிது வாழ்ந்தனர்.

ஆதாரம்: "தொல்வினை அடையார் தோன்றுவர் வானிடைப் பொலிந்தே" என்று சம்பந்த சுவாமிகளும், "அந்தமிலதோரின்ப மணுகுமே" என்று அப்பர் சுவாமி களும், "அல்லல் களைந்துலகில் அண்ட வானுல காள் பவரே" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அருளினர்.

இந்நூலில் தற்காலத்திற்கேற்பச் சில திருத்தங்களை அநுசரித்துச் சரித்திரங்களில் வரும் பொதுவான அம்சங் களை எடுத்து நேரான முறையில் எழுதினோம். இதில் எழு திய கருத்துகள் யாவும் நாயன்மார்கள், ஆன்றோர்கள், சமய அறிஞர்கள், சரித்திரக்காரர்கள், ஆராய்ச்சிக்காரர்கள் எழு தின பல நூல்களின் ஆதாரங்களைக்கொண்டு முக்கியமாய் இளஞ் சந்ததிகள் சமய அறிவில் ஈடேற இந்நூலை எழுதினோம். கற்றவர்கள் பிழை காணின் பொருத்தருள்க!

## நன்றி செலுத்தல்

சென்னைப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தர முதலி யார் ஒரு பத்திராசிரியர். பல நூல் ஆசிரியர். அவர் இயற்றிய பல நூல்கள் தமிழ் நாட்டிலும் வெளி நாட்டிலும் போய் நம்மவர்களுக்குப் பயன்படுகின்றன. அவர் தம் வாழ்நா ளெல்லாம் தமிழுக்கும், சமயத்திற்கும், தேசத்திற்கும் தொண்டாற்றி வருகிறவர். அவர் இந்நூலுக்கு முன்னுரை

எழுதியதற்கு எமது நன்றியையும் வந்தனத்தையும் செலுத்துகிறோம்.

சென்னை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் பல ஆண்டுகளாகத் தமிழ் மொழிக்கும், சமய விருத்திக்கும் நூல்கள் எழுதியும் புதுப்பித்தும் வருகின்றனர். இச் சங்கத்தைப் பரிபாலிக்கிறவருள் முக்கியமானவரான திரு. வி. சுப்பையா பிள்ளை இந்நூல் திருத்தமுடனும் அழகுடனும் முடிவதற்கு உதவியாக இருந்தார். அவர்க்கும் அவரது கழகத்தார்க்கும் எமது நன்றியையும் வந்தனத்தையும் செலுத்துகிறோம்.

தமிழ்வேத நூல் முடிதற்குத் தென்னாப்பிரிக்கா முழுதும் பரவி இருக்கிற நம்மவர்களுள் முக்கிய மானவர்களிற் சிலர் உதவியாக இருந்தனர். யாம் சுற்றுப்பிரயாணம் செய்த போது அச்சுக்கூடத்தையும், "செந்தமிழ்ச் செல்வன்" பத்திரிகையையும் நடத்தக் கல்வி பத்திராதிபரும், கூட்டாளியும், தொழிலாளர்களும், எம்முடைய மனைவியும் குமாரர்களும் உதவியாக இருந்தனர். அவர்களுக்கெல்லாம் எமது நன்றியையும் வந்தனத்தையும் செலுத்துகிறோம். அவர்களுடைய பெயர்கள் இந்நிலவுலகில் நிலைத்திருக்க இந்நூலின் கடைசியில் அநுபந்தமாகச் சேர்த்திருக்கிறோம்.

ஆகையால் இந்நூலை எல்லோருங் கற்றுச் சிவபிரானை வணங்கி, அவரது அருள்பெற்று, இனிது வாழவேண்டுமென்பதே இந்நூலாக்கிய நோக்கம்.

டர்பன், } கரு-கூ-சக }

கோ. இராமசாமி.





**சிதம்பர சிவாலயம்**

உயரம்: அடிகள் ௧௪௦. அகலம்: அடிகள் ௯௦௦. ஆலயம் ௪௦ ஏக்கர் நிலத்தில் கட்டப்பட்டது. கி பி. ௯௦௦ ல் ஆண்ட பராந்தக சோழன் காலத்திற்குமுன் கட்டப்பட்ட சிவாலயம். பல தமிழ் மன்னர்கள் புதுப்பித்தும் பெரிதாக்கியுமிருக்கின்றனர்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தமிழ் வேதம்

---

## க. உலகம்

இவ்வுலகம் முதன் முதல் நெருப்பு மயமாக இருந்தது. இப்படி நீண்டகாலம் இருந்தபின் தீயிலிருந்து நீரும் நீரிலிருந்து காற்றும் காற்றிலிருந்து ஆகாயமும் ஆகாயத்திலிருந்து நிலமும் உண்டாயிற்று என்று பூகோள நூலார் கூறுகின்றனர்.

வானத்தில் சூரியன், சந்திரன், வெள்ளிகள் இருக்கின்றன. பூமியில் தாவரம், நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, மிருகம், மனிதர், தேவர் என எழுவகைத் தோற்றமும் எண்பத்து நான்கு லட்ச உயிர் வர்க்கங்களும் இருக்கின்றன.

இவற்றில் முதலாவது தாவரமும், இரண்டாவது நீர் வாழ்வனவும், மூன்ருவது ஊர்வனவும், நான்காவது பறப்பனவும், ஐந்தாவது மிருகங்களும், ஆருவது மனிதர்களும், ஏழாவது தேவர்களும் உற்பத்தியாயினர். இப்படி உற்பத்தியான இவ்வுலகம் ஏற்பட்டு நூறுகோடி ஆண்டுகள் ஆகின்றன என்று உலக சரித்திரக்காரர்கள் கூறுகின்றனர்.

ஆதாரம் :—“ புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய் கணங்களாய், வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்” என்று மாணிக்கவாசக சுவாமிகள் உலகிலுள்ள படைப்பின் விதி கூறினுர். அறிக.

இவ்வுலகையும் இதில் காணப்படும் உயிர் வர்க்கங்களையும் உண்டாக்கினவர் கடவுள் ஒருவரே. அவரை ஒவ்வொரு

சமயத்தாரும் தம் தம் மொழிக்கு ஏற்றவாறு பெயரிட்டிருக்கின்றனர். ஆகையால் மனிதர் வழிபடுவதெல்லாம் ஒரு கடவுளைத்தான். ஆனால் சமயங்கள் மட்டும் வேறு வேறு பெயரில் வழங்கி வருகின்றன.

இப்படி உலகில் ஏற்பட்டிருக்கும் சமயமெல்லாம் ஒரு காலத்தில் ஓரிடத்தில் உண்டாகவில்லை. ஒவ்வொரு நாட்டிலும் அந்தந்தக் காலத்தில் தோன்றிய தீர்க்கதரிசிகளால் உண்டாயின. இச் சமயங்களில் உலகில் முதன் முதல் உண்டான சமயம் சைவ சமயம்—சிவ சமயம் எனப்படும். சிவம் என்பது என்னவென்பதை அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

## சிவம் என்பது என்ன ?

கடவுளுக்குத் தமிழில் சிவம் என்று பெயர். சிவம் என்பது இயற்கைப் பொருள். எல்லா உலகங்களிலும் எல்லா உயிர்களிலும் கலந்திருப்பது. துவக்கமும் முடிவும் அற்றது. பூவில் மணம்போலும், பாலில் நெய்போலும் கலந்திருப்பது.

ஆதாரம் :—“விறகிற்றீயினன் பாலிற்படு நெய்போல், மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்” என்று அப்பர் சுவாமிகளும், “காலினில் ஊறும் கரும்பிற் கட்டியும், பாலினுள் நெய்யும் பழத்துள் ரசமும், பூவினுள் மணமும் போலுளன் எம்மிறை, காவலன் எங்கும் கலந்து நின்றானே” என்று திருமூல நாயனாரும், “பத்துத் திசையும் பரந்த கடலும் ஒத்தெங்கும் நிற்கும் சிவம்,” என்று ஔவையாரும், கூறினதால் சிவமானது எங்கும் நிறைந்த ஏக பரம்பொருள் என்பதை அறிக.

அடுத்த அத்தியாயத்தில் சிவம் அருளுருவாய்த் தோன்றியவிடம் எது என்பதை ஆராய்வோம்.

## சிவபிரான் தோன்றிய விடம்

எங்கும் நிறைந்த இயற்கைப் பொருளாகிய சிவம், அருளுருவாய் அவதாரமெடுத்து ஆன்மாக்கள் உலகில் உய்யும் பொருட்டு முதன் முதல் எந்த விடத்தில் தோன்றினர் என்பதைப் பார்ப்போம்.

உலகில் தோன்றிய உயிர் வர்க்கமெல்லாம் முதலில் ஒரு விடத்தில் உற்பத்தியாகிப் பிறகு நாளடைவில் மற்ற விடங்களுக்குப் பரவி இருக்கின்றன. இப்படி உயிர்கள் முதன் முதல் உற்பத்தியான விடம், உலகில் நடுமத்தியில் இருந்தது. எப்படி மனிதர், மிருகம், பறவை முதலியவை உடலின் நடுவில் உள்ள வயிற்றில் உற்பத்தியாகின்றனவோ அப்படியே உலகின் நடுவிலுள்ள கண்டத்தில் எல்லா உயிர் வர்க்கங்களும் தோன்றின.

இவ்விடம் தமிழில் குமரிக்கண்டம் எனப்படும். இது இருநூற்றைம்பதாயிரம் சதுர மைல் கொண்டது. கிழக்கில் அச்ட்ரேலியா, மேற்கில் மேடகாசிகா, தெற்கில் ஆபிரிக்கா, வடக்கில் இமயம் வரையில் பரவியதோர் பெரிய நிலப்பரப்பா யிருந்தது. இக் கண்டத்தில் உற்பத்தியான மனிதர்கள் தமிழர்கள். இவர்கள் மற்றக் கண்டங்களுக்குச் சென்று மனித வர்க்கத்தை உற்பத்தி செய்தனர்.

ஆதாரம் :—குமரிக்கண்டம் இந் நிலவுலக முழுவதற்கும் நடுவிற் கிடந்த பெரும்பரப்பாகலான் இறைவனாற் படைக்கப்பட்ட மக்கள் முதன் முதல் இந் நிலத்திருந்த பின் நாற்றிசையிலும் பிரிந்து வேறுபட்டனர் என்று மொழி நூல் கூறுகிறது.

'திராவிட இந்தியா' என்ற நூல் ஆதியில் இலமூரியா என்ற கண்டம் மேடகாசிகாவிலிருந்து மெலேய் வரையிலும் இந்தியா ஆபிரிக்கா அச்ட்ரேலியாவுடனும் சம்பந்தப்பட்டிருந்தது என்று கூறுகிறது.

சர் இவன்சு என்பவர் தென்னிந்தியா மனித வகுப்புக்குத் தொட்டில் என்று கூறுகிறார்.

சர் வால்ட்டர் ரேலி பிரளயத்தின் பிறகு தென்னிந்தியா மனித உற்பத்தி பெற்ற தேசம் என்று கூறுகிறார்.

மார்ச்டன், பி.ஏ. அவர்கள் குறிப்பதாவது:—திராவிடர் தெற்கிலிருந்தாவது தென்னிந்தியாவுடன் சம்பந்தப்பட்டு இப்போது கண்ணுக்குத் தெரியாது கடலில் மூழ்கிப்போன பெரிய நாட்டிலிருந்தாவது வந்தவர்களாவர்.

இதனால் மனிதர் உற்பத்தியான விடம் குமரிக்கண்டம் என்பதும், வேறு சில சரித்திரக்காரர்கள் குறிப்பிடுதல் போல் தமிழர் அந்நிய நாட்டிலிருந்து வந்தவர்களல்லர் என்பதும் அறிக. இனி அடுத்த அத்தியாயத்தில் சிவபிரானது தோற்றத்தை ஆராய்வோம்.

## சிவபிரான் தோற்றம்

குமரிக்கண்டத்தில் உற்பத்தியானமனிதர்களுக்குக்கல்வி, சமயம், ஆசாரம், ஆளுகை, கட்டுப்பாடு முதலிய அறிவுகள் உலக உய்வுக்கு வேண்டியிருந்தன. ஆகையால் அவர்கள் அறிவுகள் அடைந்து உலகில் இனிது வாழ சிவம் அருளுருவாய் கிரேதாயுக துவக்கத்தில் சித்திரை மாதத்தில் திங்கட்கிழமையில் பௌர்ணமியில் தோன்றினார். அவர் பிரகாசமும் பேரழகும் உடையவராயிருந்ததால் சோம சுந்தரர் எனப்பட்டார். அவர் கல்வி, சமயம், ஆளுகை, ராணுவம் முதலிய சகல அறிவுகளிலும் திறம்பெற்றிருந்தார். அவர் குமரிக்கண்டத்திலுள்ள காடுகளைத் திருத்தி நாடாக்கி சோமசுந்தர பாண்டியன் என்ற பெயருடன் ஆளுகை நடத்தினார். இதனாலன்றோ 'பாண்டியனாகி' என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறி அருளினார்.

மனிதர்கள் விளக்கம் பெற்று ஞானம் அடைதற்குத் தமிழ்க்கலை உண்டாக்கினர். இது உலகில் முதன் முதல் ஏற்பட்ட மொழியாகும். பிறகு சோமசுந்தரர் தடாதகை-சிவகாமியாரை மணந்து மனிதர்க்கு இல்லற நெறி நடத்திக் காட்டினர். அப்போது இவருக்கு உக்கிரகுமாரர் அவதரித்தார். இவர் உக்கிர பாண்டியன் என்றும், சுப்பிரமணியர் என்றும் கூறப்படுவார். இதன் விபரம் திருவிளையாடற் புராணம் படித்து அறிக.

ஆதாரம் :—'அம் முதற் சிவம் அம்மைக்கும் சேய்க்கும் உயிர்கள் ஞானத்துவந்தாங் கொளிர' என்று பேரிசை சூத்திரம் கூறுகிறது.

மாணிக்கவாசக சுவாமிகள் 'தமிழன் கண்டாய்' என்று கூறினர்.

கனம் டி. குட்சி என்பவர், உலகில் மனிதர்களால் முதன் முதல் பேசப்பட்ட மொழி தமிழ் என்று கூறுகின்றார்.

இதனால் சிவபிரான் தோற்றத்தின் காலமும் அவர் செய்த தமிழ் மொழியின் பழமையும் அறிக. அடுத்த பத்தியில் சிவபிரான் செய்த அற்புதச் செயல்களை ஆராய்வோம்.

## சிவபிரான் செய்த அற்புதச் செயல்கள்

சிவபிரான் எண்வகை சித்துக்கள் செய்தார். நோயாளிகளைக் குணப்படுத்தினர். மனிதர் உணவில்லாது வருந்திய போது உணவு கிடைக்கச் செய்தார். கொடிய சீவன்களைத் தன்வசமாக்கினர். மழை இல்லாதபோது மழை பெய்யச் செய்தார். நஞ்சை உண்டார். செத்தவரை எழுப்பினர். தமிழ் வேதங்கள் எழுகோடி செய்தார். இதுபோன்ற அற்புதங்கள் அறுபத்து நான்கும் செய்தார். இவற்றின் விரிவு திருவிளையாடற் புராணம் படித்தறிக.

அவரது பேராற்றலையும் பெருந்தொழிலையும் அவருக்கு முன் எவருமே செய்யக்கண்டிராத தமிழர்கள் ஆச்சரியப் பட்டார்கள். அவரைப் புகழ்ந்தார்கள். போற்றினார்கள். அவரையே பிதாவாகவும், குருவாகவும் கொண்டார்கள். பிறகு அவரது மகிமை தெரிந்ததும் கட்புலக்கடவுள் என்று கொண்டு அவர் போதனையைக்கேட்டு நடந்தார்கள். அதனால் அவர்கள் உலக அறிவுகளில் மேனிலை அடைந்தார்கள். அவர்கள் மேனிலை அடைந்ததைக் கண்ட சோமசுந்தரக் கடவுள் இனி அவர்களே உயர்நிலை எய்தக்கூடு மென்பதை அறிந்து சித்து வல்லமையால் மறைந்தார்.

அவரது மறைவைக்கண்ட மனிதர்கள் அவரது அற்புதச்செயலைக் குறித்தும் மகிமையைக் குறித்தும் எழுதினார்கள். ஆலயங்கள் கட்டி அவரது திருமேனியை வைத்து வழிபட்டார்கள். இவ்விதம் அக்காலத் தமிழர்கள் கும்பிட்டுவந்த கடவுள் சிவபிரானென ஆராய்ச்சிக்காரர்கள் கூறுகின்றனர்.

**ஆதாரம்** :—குறிஞ்சி யென்பது சிவ வடிவமாதலின் முதன் முதல் கடவுள் வணக்கமுண்டாயது குறிஞ்சியில். பழைய சிவாலயங்கள் குறிஞ்சியில் கட்டப்பட்டுள்ளன. குறிஞ்சி நிலத்தில் வரும் தெய்வமும் சிவபிரானே என்று மொழிநூல் கூறுகிறது.

டாக்டர் இச்டிவின்சனும் ரோகின்சனும், திராவிடர் பூர்வத்தில் சிவ வணக்கம் செய்தனர் என்று கூறினார்கள்.

இதனால் சிவபிரான் மனிதர் உய்வுக்கு உழைத்ததும் அவர் பேராற்றலும் பெருந்தொழிலும் உடையவர் என்பதும் அறிக. அடுத்த அத்தியாயத்தில் அவர் இயற்றிய தமிழ் வேதத்தைப்பற்றி ஆராய்வோம்.

## சிவபிரான் அருளிய தமிழ் வேதங்கள்

இந்த அத்தியாயம் மிகவும் உபயோகமானது. வாசகர்களைக் கவனமுடன் படிக்கும்படிக் கோருகிறோம். உலகில் எல்லா நாட்டாரும் சமய போதனைகள் பெற்றதும் மற்ற உலக ஏற்றத்துக்கான அறிவு நிலைகளைப் பெற்றதும் அந்தந்த நாட்டில் முதன் முதல் தோன்றி ஆன்மாக்களுக்கு உழைத்தவர்களால்தான். அவர்கள் போதித்தவை சமயங்களாகவும், அவையே அவர்களின் திருநாமங்களாகவும், உலகில் வழங்கி வருகின்றன. அதுபோலவே சோமசுந்தரர் ஆதியில் சிவத்தைப்பற்றி எழுகோடி வேதங்கள் போதித்ததால் அவர் சிவபிரான் எனவும் அவர் போதித்த சமயம் சிவசமயம் எனவும் வழங்கப்படுகிறது என்பதை அறிக.

ஆதாரம் :—"வேத முதல்வன்" என்று சம்பந்த சுவாமிகள் அருளினர். "வேதம் ஓதிய வேதியன்" என்று அப்பர் சுவாமிகள் அருளினர். "மாமறை எழுகோடி எற்றிக்கிடக்குமென்ன கண்டாய்" என்று பட்டினத்து அடிகள் அருளினர். "மந்திரங்கள் எழுகோடி ஆதலின் மன்னுமவர்" என்று நம்பியாண்டார் அருளினர். "எண்ணிலி கோடி தொகுத்திடுமாயினும்" என்று திருமூல நாயனர் அருளினர்.

தமிழறிஞர் கா. சுப்பிரமணியம் பிள்ளை, எம். ஏ., எம். எல்., அவர்கள் 'ஒவ்வொரு நாட்டிலுள்ளவர்களுக்கும் அவரவர்களுக்குள்ள மொழியிலே அவரவர்கள் சமய நூல்கள் இருக்கக் காண்கிறோம். அதுபோலத் தமிழ் மக்கட்கும் தமிழிலேயே கடவுளருளால், சமய நூல்கள் ஏற்பட்டிருந்தன. தேவாரம் திருவாசகங்கட்கு முன்னரேயே தமிழில் வேதங்களிருந்தன வென்று சிவரகசியம் கூறுவதாகத் திரு சுவாமிநாத பண்டிதர் தம்முடைய தேவாரப்பதிப்புரையில் இயம்பினர். அறம், பொருள், இன்பம், வீடு என்னும்

நான்கினையும் கூறும் நான்மறைகள் பண்டைத் தமிழிலிருந் தன வென்பது தொல்காப்பியப்பாயிரம் முதலியவற்றால் அறியக் கிடக்கின்றது. திருவிளையாடற் புராணமும் ஆதியி லிருந்த மறைகள் கடல்வாய்ப் பட்டழிந்தன என்றியம்புகின் றன' என்று கூறுகின்றார்.

இந்த ஆதாரங்களால் ஆதியில் சிவபிரானால் அருளப் பட்ட தமிழ் வேதங்கள் இருந்ததென்பது உறுதியாகிறது. இதெல்லாம் ஆராய்ந்தறியாதவர்கள் தமிழில் வேதமிருந்த தில்லை என்றும், வட மொழியில் உள்ள வேதங்கள் தமிழர்க் குரிய தென்றும் கூறுவது பொருந்தாக்கூற்று என்பதை அறிக.

## தமிழர் மாண்பு நிலை

சிவபிரான் அருளினாலும் அவர் ஆதியில் கற்பித்த நெறிகளினாலும் தமிழர்கள் உயர்ந்த நாகரீகத்தை அடைந் திருந்தனர். அப்போது குமரிக்கண்டத்தில் தமிழர் தவிர வேறு எவருமில்லை. தமிழ்க்கலை தவிர வேறு கலை இல்லை. சிவசமயம் தவிர வேறு சமயமில்லை. சிவபிரான் அருளிய ஏழுகோடி வேதங்கள் தவிர வேறு வேதமில்லை. சிவபிரான் தவிர வேறு கடவுள் இல்லை.

ஆகையால் எல்லாரும் பிளவு பாடின்றி ஒன்று சேர்ந்து இனிது வாழ்ந்து வந்தனர். வைத்தியம், சிற்பம், சோதிடம், வாணிகம் முதலிய உலக ஏற்றத்துக்கான அறிவு நூல்களும் உலகில் எல்லாக் காரியங்களையும் சாதிக்கச் சித்துக் கலைகளும் இருந்தன. இக் கலையின் பகுதி ஒன்றால் செத்தவரையும் எழுப்பலாமென்றால் மற்றப் பகுதிகளின் ஆற்றல் எழுதி மாளா. அத் தமிழர்கள் சுத்தத் தமிழ் நூல்களைப் பயின்று வந்ததாலும் சிவபிரானையே வழிபட்டு வந்ததாலும் திறமையானவர்களாயும் திருத்தமான ஆசார முடையவர்க

ளாயும் இருந்தார்கள். கப்பல் கட்டிக்கொண்டு பிறகண்டங் களுக்குப் போய் வாணிகம் நடத்தி வந்தனர்.

டாக்டர் சிமித் திராவிடர் சமுத்திர வாசிகள் என்று கூறுகிறார்.

ஆணும் பெண்ணும் தக்க வயதில் கூடிக் காதல் மணம் புரிந்து வந்தனர். காதல் மணம் என்பது நல்ல வாலிப பருவத்தில் இயற்கையாகவே ஏற்படும் அன்பால் தலைவனும் தலைவியும் மனம் ஒத்து மனைவியும் கணவனுமாதல். இம் மணம் பிறர் உதவியும் முயற்சியும் இல்லாமல் இயற்கையாய் ஏற்படுவதால் இது தெய்வீகம் பொருந்திய மணம். இதுவே ஆதித் தமிழர் மணம். மற்ற எண்வகை மணம் அந்நியர் குடியேறின பிறகு மிகவும் பிற்காலத்தில் ஏற்படுத்தப்பட்டது.

**ஆதாரம் :**—"இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தின் எய்துழி முயற்சியின்றி முடிவதாகும்" என்று தமிழர் மணமுறையை ஆன்றோர் கூறினர்.

இதனால் ஆதியில் இருந்த தமிழர் உயர்நிலையும் திருத்தமான பழக்கங்களையும் உடையவர்கள் என்பதையும் அறிக. அடுத்த பத்தியில் தமிழர் மற்ற நாடுகளுக்குப் பரவியதை ஆராய்வோம்.

## தமிழர் உலகில் பரவியது

தமிழர் அறிவுகளிலும், நாகரீகத்திலும், உயர்ந்து குமரிக்கண்டத்தில் வாழ்ந்து வருகையில் உலகில் பல கண்டங்களுக்குச் சென்று மனிதர்களை உற்பத்தி செய்து பிறகு அவ்விடங்களில் இராசதானிகளையும் உண்டாக்கினார்கள். இப்படி அவர்கள் சென்று குடியேறிய விடங்கள் எகிப்து, மெடிட்டரேனியன், மெசோபொடாமியா, பாபிலோனியா, அச்ட்ரேலியா, அமெரிக்கா, ஆபிரிக்கா முதலியன.

கண்டம் ஒரு காலத்தில் அமிழ்ந்து ஆழ்ந்து போயிற்று என்று மொழி நூல் கூறுகிறது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள"

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்"

என்று கலித்தொகை என்ற நூல் கூறுகிறது.

"சக்கரக்கோ முன்னின்று சாற்றும் பெருவூழி
அக்கரக்கோ நாமஞ்சுவாம்"

என்று செங்கோன்தரைச்செலவென்னும் நூல் கூறுகிறது.

"முற்காலத்தில் தற்போதுள்ள தென்னிந்திய மகா சமுத்திரம் ஒரு பெரு நிலப்பரப்பா யிருந்தது. அங்குப் பஃறுளி என்னுமோர் ஆறு ஓடிற்று. அவ்வாற்றங்கரைப் பட்டணத்தில் பாண்டிய மன்னர் அரசு செலுத்தினர்" என்று ஆதியில் தமிழர் வசித்திருந்த பட்டினத்தைப்பற்றி சுவாமி வேதாசலம் அவர்கள் பண்டைத் தமிழர் கட்டுரையில் கூறுகின்றார்.

இந்நாளைய இந்து மகாசமுத்திரம் கீழ் ஆபிரிக்கா கரையோரத்தில் இருந்து ஆசியாவின் கரையிலுள்ள சுண்டா தீவுவரை நன்னுடாக இருந்ததெனச் சுவாமி அற்புதானந்தர் தமிழர்களும் தமிழும் என்ற கட்டுரையில் குறிக்கின்றார்.

இந்து சமுத்திரத்தில் ஒரு சமயம் நிலைத்து, தென்னிந்தியாவுடன் சேர்ந்திருந்த நிலக்கண்டம் பெருவெள்ளத்தில் மூழ்கிற்று என்று மோரச், கீன் கூறுகின்றனர் என்று திராவிடர் இந்தியா என்ற நூல் குறிக்கிறது.

இவ்விதம் தமிழ் சரித்திரக்காரர்களும் ஆங்கில சரித்திரக்காரர்களும் பூர்வகாலத் தமிழர் வசித்திருந்த நாடுகளும்

அவர்கள் கையாண்ட பொருள்களும் தமிழ் வேதம் முதலிய பண்டைய நூல்களும் கடலில் மூழ்கி அழிந்துபோயின வென்பது வலியுறுத்தப்படுகிறது அறிக. இப்படி அழிந்து போனதாலன்றோ தற்போதுள்ள தமிழர்கள் தமிழில் புராதன வேதங்களிருந்ததென்பதைக் கூறவும் ஆதாரமற்றவர்களாக இருக்கின்றனர்.

ஆகையால் இதுகாறும் கூறிவந்தவைகளாலும் காண்பித்த ஆதாரங்களாலும் உலகமும், அதில் உயிர்கள் உற்பத்தியானதும், சிவபிரான் தோன்றிய விடமும், அவர் செய்த அற்புத வேலைகளும், தமிழ் வேதமிருந்ததும், தமிழர் மாண்பு நிலையும், தமிழர் உலகில் பரவியதும், தமிழர் வசித்த பூர்வ கண்டம் அழிந்துபோன விபரங்களும் அறிக.



# உ. இராசராச சோழர் வரலாறு

தற்காலத்தில் நம்மவர்கள், நம்மில் மன்னர் மன்னர்களும், வீராதி வீரர்களும், தேர்ந்த ராணுவ முறை தெரிந்தவர்களும் முன் காலத்தில் இருந்தார்கள் என்ற சரித்திரத் தெளிவே யில்லாதவர்களாய்விட்டனர். உலகத்திலே முதன் முதல் போர் இன்னதென்று தெரியாத காலத்திலேயே தமிழர் பெரும் போர் நடத்தி யிருக்கின்றனர் என்பது ஆராய்ச்சியில் தெரிகிறது.

தமிழர்கள் சிங்கம், யானை, குதிரை, காலாட் படை, கடற்படை எனப் பல படைகளை வைத்துக்கொண்டு எதிர்த்த நாடுகளை அழித்து வந்ததாகவும் தெரிகிறது. இதெல்லாம் தமிழ் நாட்டில் பிற நாட்டார் குடி புகுந்து அவர்களுடைய நாகரீகத்தைப் பரவச் செய்ததிலிருந்து தமிழர் பிறர் நாகரீகத்தை மேற்கொண்ட பிறகு அபிமானம், ஆண்மை எழுச்சி முதலியவைகளில் குறைந்தவர்களானார்கள். போர்த் தொழில் பழகு என்பதற்குப் பதிலாக போர்த்தொழில் புரியேல் என்றும் கற்பிக்கப்பட் டிருக்கிறது. மற்ற நாட்டார் போர்த்தொழிலைப் பழகி வருகையில் நாம் மட்டும் போர்த் தொழில் புரியேல் என்றால் நமது நாட்டின் போதனைகள் நமக்கு எவ்வளவு வீரத் தன்மையும் சுதந்தரத் தன்மையும் போதிக்கின்றன என்பதை வாசகர்கள் அறியலாம்.

இக் காலத்தில் நமக்குள்ள பாட புத்தகங்கள் முதல் சரித்திரங்கள் வரையில் நம் முன்னோர்களின் உண்மை நிலைகளைத் தெரிந்துக்கொள்ளக் கூடியதாயில்லை. ஆகையினால்தான் நம்மவர்கள் தற்காலம் தங்கள் முன்னோர்களின் உண்மைச் சரித்திரங்களை அறியக்கூடாதவர்களா யிருக்கிறார்கள். இதனால் மற்ற நாட்டாரைப்போல் உயர்நிலைக்கு



**இராசராசசோழர்**

திருமுறைகண்ட சோழர். சிதம்பர ஆலயத்தில்
அடைபட்டிருந்த தமிழ் வேத தேவாரத்தைக்
கண்டு விடுதலை செய்தவர். வீராதி வீரர்;
மன்னர் மன்னன். தஞ்சாவூர் தலைநகர்.
கி. பி. கூஅரு-ல் ஆட்சி புரிந்தவர்.

வரும்வழி தெரியாதவர்களாய் கிடக்கின்றனர். இன்னமும் இப்படியே இருந்துகொண்டு போனால் நம் நாட்டார் இப்போதுள்ள தாழ் நிலைமையை விட இன்னம் தாழ் நிலைக்குப் போவார்கள் என்பதில் தடையில்லை.

இந் நிலையை உயர்த்துவதற்கு நம்மில் படித்தவர்கள் முன் வந்து நம் பழந்தமிழர் உண்மைச் சரித்திரங்களை வெளியிடுவார்களானால் மிகுந்த நன்மை விளையும். இந் நோக்கம் பற்றியே ஆராய்ச்சியில் அகப்பட்ட வரையில் இராசராச சோழர் சரித்திரத்தை எழுதுகிறோம்.

தமிழரசரில் இராச ராச சோழர் சக்கரவர்த்தியா யிருந்தவர். இவர் தென்னிந்தியாவிலுள்ள தஞ்சாவூர் நகரைத் தலைநகராகக்கொண்டு ஆண்டவர்.

இவர் கல்வி, செல்வம், கடவுள் பக்தி, வீரம், ஆண்மை, ஆளுகை முதலியவைகளில் சிறந்தவர். இவர் வட இந்தியா, பர்மா, இலங்கை முதலிய நாடுகளையெல்லாம் வென்று அங்காங்குத் தம் ஆணையின் கீழ் ஆளும் அரசர்களை ஏற்பாடு செய்து ஆண்டவர். இவர் ஆளுகைக்கு வந்த பிறகு சுமார் ஏழு வருடம் வரையில் இராச்சியத்தையும் இராணுவத்தையும் சீர்படுத்துவதிலேயே இருந்தார். இவருக்குத் தரைப்படை, கடற்படை முதலிய தேர்ந்த ராணுவப் படைகள் இருந்தன. இவர் ஒரு பக்கமும், இவரது குமாரன் இராசேந்திர சோழர் ஒரு பக்கமுமாகப் போய்ப் போர் செய்து செயித்து வந்தனர். சேரர்களுடன் பெரும் போர் செய்து அவர்கள் கப்பல் தங்கும் துறைமுகத்தை யெல்லாம் அழித்தவர் இராசராச சோழர். தமிழரை ஏளனஞ் செய்த ஆரிய அரசர்மீது போர் தொடுத்து அவர்களை முறிய அடித்து, அரசனைச் சிறைப்பிடித்து கழுதை மேலேற்றிக் கொண்டு வந்த சோழ மன்னர் இவரே! இவரது காலத்தில் இவரை வெல்லக்கூடிய வேந்தர் எவருமேயில்லை யென்

ருல் இவரது பராக்கிரமத்தைப் பற்றி அதிகம் சொல்லத் தேவை யில்லை.

இவரது ஆளுகையில் கிரேக்கர், பேர்சியர், சைனர், பௌத்தர் முதலிய பலவகை சமயத்தினர்களும் இருந்திருக்கின்றனர். அவர்களிடம் வித்தியாசம் பாராட்டாமல் நடுநிலை வழுவாது நடந்துகொண்டார். அவரது ஆளுகையில் எல்லாரும் திருப்தி அடைந்ததால்தான் அவர் தொடர்ந்த போர்கள் எல்லாம் வெற்றி யடைந்திருக்கின்றன. வியாபார விருத்திக்கோ சொல்லத் தேவையில்லை. பல நாட்டு மனிதர்கள் அவரது ஆளுகையில் இருந்திருப்பதால் அந் நாட்டு மக்கள் வியாபார நிமித்தம் இருந்தனர் என்பது தெரிகிறது. அவர் சிவபிரான்மீது பெரும் பற்றுக்கொண்டிருந்தார். சிவபிரானுடைய பராக்கிரமும் அருளும் அவருக்கும் இருந்ததென்று அவரது செய்கைகளினால் அறியலாம். அவர் சிவபிரான்மீதுள்ள பெரும் பற்றுக்காகவும் சமய விருத்திக்காகவும் சுமார் ஐம்பது சமயாச்சாரிகளைத் தன் சபையில் வைத்திருந்தார். அவர்களைக் கொண்டு நாயன்மார்கள் சிவபிரான் மீது அருளிய தேவாரங்கள் ஓதக் கேட்டு வந்தார். இந்தச் சமயாச்சாரிகளுக்குத் தலைவர் இருந்தார். அவர் பெயர் நம்பியாண்டார் நம்பி. ஒருநாள் அரசர் அவரை நாயன்மார்கள் அருளிய தேவாரத் திருப்பதிகங்களைத் திரட்டி நூல் வடிவாக்கிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

## நம்பியாண்டார் நம்பி வரலாறு

நம்பியாண்டார் நம்பி தென்னிந்தியாவில் திருநாரையூர் என்னும் இடத்தில் பிறந்தவர். இவர் தமிழ்க் கலையிலும் சிவ ஞானத்திலும் சிறந்தவர். இதைத் தெரிந்தே, இராசராச சோழர் இவரைத் தமது சபைக்குத் தலைவராக்கி யிருந்தார்.



**நம்பியாண்டார் நம்பி**

திருமுறைகண்ட சோழ மன்னருடன் யானை மீதேறிச் சிதம்பர ஆலயத்துக்குத் திருமுறை காணப்போதல்.

[பக் - கரு

அவர் அரசருக்கும் மந்திரிமார்களுக்கும் சிக்கலான சில சங்கதிகளுக்கு மட்டும் தெளிவும் யூகமும் சொல்லி வந்தார்.

அவர் நாயன்மார்கள் வரலாறுகளையும் தேவாரங்கள் அடைக்கப்பட்டிருக்கும் இடம் சிதம்பரம் என்பதையும் அவருடைய வழிபடு கடவுள் மூலம் தெரிந்துகொண்டார். உடனே சிதம்பரத்திற்குச் சென்றார். அரசனும் அடியாரும் தொடர்ந்தனர்.

## சிதம்பரம்

சிதம்பரம் தென்னிந்தியாவிலுள்ள ஒரு பழைய தலம். இங்கு ஒரு பெரிய சிவாலயம் இருக்கிறது. இதில் கோவில் கொண்டிருக்கும் சுவாமியின் பெயர் நடராசர். இது பாடல் பெற்ற பழைய தலம். இதைத் தமிழரசர்கள் பலர் கட்டியிருக்கிறார்கள். இராசராச சோழர் மகன் இராசேந்திர சோழர் இந்த ஆலயத்திற்குப் பொன் ஓடு வேய்ந்திருக்கிறார் என்று சரித்திரம் கூறுகின்றது.

ஒரு நாள் ஏற்பாட்டின்படி சோழ மகாராசர் நம்பியாண்டார் நம்பியை யானை மீது ஏற்றிக்கொண்டு சிதம்பர ஆலயத்திற்குப் போனார். அங்குள்ள புரோகிதர்கள் மன்னனையும் புலவரையும் வரவேற்று உபசரித்தார்கள். பிறகு அவர்களைத் தமிழ் மறைகள் அடைக்கப்பட்டிருக்கும் இடம் கேட்டார்கள். அவர்கள் பணிவுடன் அழைத்துப் போய் ஆலயத்துள் சாத்தப்பட்டிருக்கும் ஓர் அறையைக் காண்பித்தார்கள். அரசர் அறைக் கதவைப் பார்த்தபோது மூவர் கையெழுத்திடப்பட்டுப் பூட்டப்பட்டுள்ள பூட்டைக் கண்டார். உடனே அங்குள்ளவர் அதிசயிக்கும்படி திருக்காப்பைத் திறந்து உள்ளே சென்று ஆவலுடன் பார்த்தார். அங்கு மண் குவியலாக இருக்கக் கண்டு, அதைத் தள்ளிப் பார்த்தார்.

அப்போது அங்கு இருந்த ஓலைச்சுவடிகள் செல்லுகளால் மூடப்பட்டிருந்தன. அதைப் பார்த்து மன்னர் மன்னன் மனம் நொந்து செல்லுகள் உதிர எண்ணெயை ஊற்றித் திருவேடெல்லாம் எடுப்பித்தார். ஏடுகள் பல செல்லால் அழிக்கப்பட்டிருந்தன. அதைக் கண்டு மனம் தளர்ந்து கண்ணீர் சொரியக் கலங்கி நின்றார்.

அப்போது நம்பியாண்டார் நம்பி,வேந்தே! அழிந்தவை போக எஞ்சிநின்ற ஏடுகள் இறைவனருள் என்று மனந் தேறுக! என்றார். அதைக் கேட்டு மன்னன் மனம் தேறினார். அதன்பின் அவர்கள் ஏடுகளை யெல்லாம் திரட்டிக் கொண்டு தமது நாட்டுக்குத் திரும்பினார்கள். அரசர் அறையில் திருப்பதிக ஏடுகள் அழிக்கப்பட் டிருப்பதைக் கண்டு என்ன மனநிலையில் இருந்தார் என்பதை நம்பியாண்டார் அவரருகிலிருந்து பார்த்தபடியால் அப்படியே அவரது கவியில் கூறுகின்றார் :—

## திருமுறை கண்ட புராணம்

ஐயர்நட மாடுமம் பலத்தின்மேல்பால்
அருள்பெற்ற மூவர்தம தருள்சேர்செய்ய
கையதுவே யிலச்சனையா யிருந்தக்காப்பைக்
கண்டவர்க ளதிசயிக்கக் கடவாய்நீக்கிப்
பொய்யுடையோ ரறிவுதனைப் புலன்கண்மூடும்
பொற்பதுபோற் போதமிகும் பாடறன்னை
நொய்யசிறு வன்மீக மூடக்கண்டு
நொடிப்பளவி னிற்சிந்தை நொந்தவேந்தன்.

பார்த்ததனைப் புறத்துய்ப்ப வுரைத்துமேலே
படிந்திருந்த மண்மலையைச் சேரத்தள்ளிச்
சீர்த்ததில தைலமிகு கும்பங்கொண்டு
செல்லுநனை யச்சொரிந்து திருவேடெல்லாம்

ஆர்த்தவரு ளதனாலே யெடுத்துநோக்க
வலகிலா வேடுபழு தாகக்கண்டு
சீர்த்தமுடிக் கணிபரனே பரனேஎன்னச்
சிந்தைதளர்ந் திருகணீர் சோரநின்றான்.

## தேவாரம் வகுத்தல்

நம்பியாண்டார் கொண்டுவந்த ஏடுகளை யெல்லாம் புதுப்பித்தார். சம்பந்தர் பாடியவைகளை மூன்று திருமுறைகளாகவும், அப்பர் அருளியவைகளை மூன்று திருமுறைகளாகவும், சுந்தரர் அருளியவைகளை ஒரு திருமுறையாகவும் பிரித்து ஏழு திருமுறைகளாகச் செய்தார். இவ்விதம் ஏன்ஏழாகச் செய்தார் என்று யூகஞ்செய்து பார்த்ததில் ஆதியில் சிவபிரான் ஏழு கோடி வேதங்கள் செய்தார். ஏழு வகைத் தோற்றங்கள் என்று கூறுகின்றனர். ஏழ்நிலை மாடங்கள் ஆதியில் அமைத்தனர். வாரத்தில் ஏழு நாட்கள் இருக்கின்றன. ஏழுகடல் என்றும், ஏழு லோகங்கள் என்றும் வழங்கி வருகிறதால் நம்பியாண்டாரும் ஏழு திருமுறையாக வகுத்திருக்கின்றார் என்பதை அறிகிறோம்.

## தேவாரம் அரங்கேற்றல்

நம்பியாண்டார் நம்பி வகுத்த திருமுறைகளைப் பற்றி ஆராய்வோம். அவர் வகுத்த ஏழு திருமுறைகளையும் மன்னன் சபையில் கொண்டுபோய்ச் சேர்த்தார். இராசராச சோழர் அச் சுவடிகளில் ஒன்றை இரு கையாலும் ஆவலுடன் எடுத்துப் பார்த்து மகிழ்ந்தார். சபையில் அவரைப் புகழ்ந்தார்; மற்றவர்களும புகழ்ந்தார்கள். பிறகு, அரசர் சன்மானமும் கொடுத்தார். அதன் பின் தமிழ்நாடெங்கும் தெரிவித்துத் தேவாரத்தையும் நம்பியாண்டார் நம்பியையும் யானைமீதேற்றிச் சிதம்பரத்துக்குப் போய் அங்கு எல்லாரும் கொண்டாட இனிது அரங்கேற்றினார். அவர் அரங்

கேற்றிய காலம் நூல்களில் தெளிவுபடக் காணவில்லை. நுணுகிப் பார்ப்போமானால் அரசர்குமாரன் இராசேந்திரன் பட்டத்துக்கு வந்த இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் அரங்கேறியிருக்கவேண்டும் என்று அறியலாம். பிறகு, அரசரது சமயப்பற்றையும், வீரத்தன்மையையும் பாராட்டிப் புலவர்களும் புரோகிதர்களும் மக்களும் புகழ்ந்து அரசருக்கு இராசராச தேவர் என்னும் சிறப்புப் பட்டம் சூட்டினார்கள்.

## இராசராச சோழர் தஞ்சாவூரில் கட்டின சிவாலயம்

இராசராச சோழரது ஆளுகை ஒருவராலும் அசைக்க முடியாத உயர்நிலையி லிருந்தது. அவர் சிவபிரான்மீது பெரும் பற்றுக்கொண்டிருந்தார். இவற்றிற்கு அடையாளமாகத் தலைநகராகிய தஞ்சாவூரில் பெரும் பொருள் செலவிட்டு எண்ணூறடி நீளமும் நானூற்றுப் பதினைந்து அடி அகலமும் இருநூற்றுப் பதினறடி உயரமுமான சிவாலயத்தைக் கட்டியுள்ளார். அந்த ஆலயச் சுவரில் யானைப் படை வெற்றி முதலியவைகளைப் பற்றியும் பொறிக்கச் செய்துள்ளார். பிறகு தன் குமாரன் இராசேந்திர சோழனுக்குப் பட்டங் கட்டி இராச்சியத்தைக் கொடுத்துவிட்டுக் கடைசியில் சிவபதவி யடைந்தார். அவர் முப்பது ஆண்டுகள் வரையில் அரசு புரிந்தவர்.

ஆகையால் தமிழர் மன்னர் மன்னனாகிய இராசராச சோழர் வீராதிவீரராகவிருந்து நாடுகள் பிடித்து நீதியுடன் ஆண்டு தமிழ் தேவாரத் திருமறைகளைக் கண்டு, வெளிப்படுத்தித், தமிழர் சிறப்படையச் செய்ததால், தமிழர் எக்காலத்திலும் சோழ மகாராசரைப் போற்றிவரவேண்டும். குருபூசை காலத்திலும் இவ்வரசரைக் கொண்டாடி வரவேண்டும்.



தஞ்சாவூரில் இராசராசசோழர் கட்டின சிவாலயம்

உயரம்: அடிகள் உகரு. அகலம்: அடிகள் சகரு.

நீளம்: அடிகள் அ00'

[பக் - உக

திருச்சிற்றம்பலம்

## சிவபிரான் வணக்கம்

உலகெ லாம்உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

## நாயன்மார்கள் பிறப்பு

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன் றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

## நாயன்மார்கள் வயது

அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டினிற் றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

திருச்சிற்றம்பலம்



## ௩. திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு

காழிநகர்ச் சிவபாத விருதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதி யூட்டு
மேழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியநித் திலச்சிவிகை யிசைய வேறி
வாழும்முய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருகற் றீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே.

சோழமண்டலத்தைச் சேர்ந்த சீர்காழி என்னும் ஊரில் சிவபாதவிருதயர் என்பவர் இருந்தார். அவர் மனைவியார் பெயர் பகவதியார். இருவரும் கல்வியும் நல்லொழுக்கமும் கடவுள் பக்தியும் உள்ளவர்கள். இவர்கள் நெடுங்காலம் பிள்ளையில்லாதிருந்ததால் சிவபிரானைக் குறித்து ஒரு நல்ல மகன் வேண்டுமென்று வணங்கி வந்தனர். "எண்ணிய நான் எண்ணியவாறு எனக்கருளும் தெய்வம்" என்று இராமலிங்க சுவாமிகள் கூறினதுபோல், அவர்கள் விரும்பியவிதமே ஓர் அழகிய ஆண்மகவு வைகாசி மாதம் மூலநட்சத்திரத்தில் கி. பி. ௬௩௦ல் பிறந்தது. குழந்தையைக் கண்டு பெற்றோர்கள் அகமகிழ்ந்து சம்பந்தன் எனப் பெயரிட்டு அருமையாய் வளர்த்து வந்தனர்.

தினந்தோறும் சிவபாதவிருதயர் குளத்துக்குப் போய்க் குளித்துவிட்டு ஆலயதரிசனம் செய்துவருவது வழக்கம். ஒருநாள் தன் குமாரன் சம்பந்தனை அழைத்துக்கொண்டு போய்க் குளக்கரையில் உட்காரவைத்துவிட்டு, குளத்தில் மூழ்கிக் குளித்தார். தந்தையின் பிரிவைத் தனயன் ஆற்றாது




**திருஞானசம்பந்தசுவாமிகள்**

ஊர் சீர்காழி. பிறப்பு கி. பி. ௬௩௦. முத்தி அடைந்தது
வயது ௧௬-ல். சுவாமிகள் பதிகங்கள் பல
அருளி பல அற்புதங்களைச் செய்தவர்.
சிவபிரான் அருள பெற்றவர்.

[பக் - ௨௫

அம்மா! அப்பா!! என்று அழுதான். சிறுவன், சிவபிரான் அருளால் பிறந்தவனாதலால், அவனைச் சிவபிரான் வருந்த விடுவரோ! உடனே சிவபிரான் தோன்றி ஒரு கிண்ணம் நிறையப் பாலைக் கொடுத்துக் குடிக்கச் சொல்லி அழாதிருக்கும்படி தேறுதல் கூறி ஆசீர்வதித்து மறைந்தார்.

## சம்பந்தர் சிவஞானம் பெறுதல்

வெண்ணீறு பூசிய விமலன்—சிவபிரான் வந்து தந்த அப் பாலை யுண்டதும் சம்பந்தர் அழுகை ஒழிந்தார்; ஆனந்த மானார். சிவபிரான் கொடுத்தது ஞானப்பால். பாலை உண்டதும் சம்பந்தருக்குச் சிவஞானம் உண்டாயிற்று. தந்தை குளித்துக் கரையேறி வந்தார். குமாரன், கையில் பால் கிண்ணம் வைத்து விளையாடிக்கொண் டிருப்பதைப் பார்த்தார். குழந்தாய்! இக் கிண்ணம் ஏது? இதில் உள்ள பாலைக் குடித்திருக்கிறாயே! பாலும் கிண்ணமும் கொடுத்தது யார்? அறியாதவர் கொடுத்ததை நீ எப்படி வாங்கி அருந்தலாம்? என்று மிரட்டிக் கேட்டார்.

அப்பா, நெற்றியில் வெண்ணீறு பூசிய ஒருவர் வந்து பால் நிறைந்த கிண்ணத்தைக் கொடுத்துக் குடிக்கச் செய்து என்னை அழாதிருக்கும்படி சொன்னார். அவர் சொன்னபடி குடித்து அழுகை ஒழிந்தேன். ஆனந்தமானேன் என்று கூறி,

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை

ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே.

திருச்சிற்றம்பலம்

என்று முதற் பதிகத்தைப் பிரமபுரத்தில் பாடினார். இதைக் கண்டு தந்தையாரும் மற்றவர்களும் ஆச்சரியம் அடைந்தார்கள். சிறுவன் சிவபிரானது இலக்கணங்களைப் பாடுகிறானே என்று புகழ்ந்தார்கள். அவர்கள் அங்குள்ள பிரமபுர ஆலயத்துக்கு அழைத்துப்போய் சுவாமி தரிசனம் செய்வித்துச் சிறுவனுக்குத் திருஞானசம்பந்தன் என்று பெயரிட்டனர்.

## திருஞானசம்பந்தர் அற்புதச் செயல்கள்

திருஞானசம்பந்தர் சிவஞானம் அடைந்திருந்ததைத் தந்தையார் அறிந்து பல சிவாலயங்களுக்குப்போய் சுவாமி தரிசனம் செய்விக்க விரும்பினார். பிறகு தந்தையும் தனயனும் திருநனிபள்ளிக்குப் போனார்கள். அவ்வூர், விளையாத பாலை நிலமாக இருந்தது. அப்போது சம்பந்தர்,

திருச்சிற்றம்பலம்

காரைகள்கூகைமுல்லை களவாகையீகை
படர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்மு சுடுகாடமர்ந்த
சிவன்மேயசோலைநகர்தான்
தேரைகளாரைசாய மிதிகொள்ளவாளை
குதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வாரி வயன்மேதிவைகு
நனிபள்ளிபோலுநமர்காள்.

கடல்வரையோதமல்கு கழிகானல்பானல்
கமழ்காழியென்றுகருதப்

படுபொருளாறுநாலு முளதாகவைத்த
பதியானஞானமுனிவன்
இடுபறையொன்றவத்தர் பியன்மேலிருந்தி
னிசையாலுரைத்தபனுவல்
நடுவிருளாடுமெந்தை நனிபள்ளியுள்க
வினைகெடுதலாணைநமதே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகத்தைத் திருநனிபள்ளியில் பாடி பாலைநிலமா யிருந்ததை எல்லாம் விளையும் நெய்தல் நிலமாக்கினர். அதுகண்டு எல்லாரும் வியந்தார்கள். அங்கிருந்து திருநெல் வாயிலுக்குப் புறப்பட்டார்கள். இவர்கள் வருகையை அறிந்த அவ்வூர் வாசிகள் இறைவனால் அனுப்பப்பட்ட முத்துச் சிவிகை கொண்டுவந்து உபசரித்து அதில் ஏற்றிக்கொண்டு அவ்வூர் சிவாலயத்தை அடைந்தனர். அங்குச் சுவாமி தரிசனம் செய்து எம்பெருமானே! தங்கள் அருளாலன்றோ முத்துச் சிவிகை பெற்றேம் என்று போற்றி,

திருச்சிற்றம்பலம்

எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புன னிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயி லரத்துறை யடிகடம் மருளே.

கறையி னாற்பொழில் சூழ்ந்த காழியுண் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த வரத்துறை யடிகடம் அருளை
முறைமை யாற்சொன்ன பாடன் மொழியு மாந்தர்தம் வினைபோய்ப்
பறையு மையுற வில்லைப் பாட்டிவை பத்தும்வல் லார்க்கே.

திருச்சிற்றம்பலம்

என்ற திருப்பதிகம் பாடினார். இதைப் பார்த்து அடி யார்கள் எல்லாரும் ஆனந்தம் கொண்டாடிச் [சம்பந்தரைப்

புகழ்ந்தார்கள். அங்கு அடியார் ஒருவர் எல்லா மந்திரங் களுக்கும் மூல மந்திரம் எதுவென்று கேட்க, அப்போது சுவாமிகள்,

திருச்சிற்றம்பலம்

துஞ்சலுந் துஞ்ச லிலாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன வஞ்செ ழுத்துமே.

நற்றமிழ் ஞானசம் பந்த னுன்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே.

திருச்சிற்றம்பலம்

என்ற திருப்பதிகம் பாடினதை அடியார்கள் கேட்டு ஆனந்தம் அடைந்தனர். அடியார்கள் அனைவரும் திருப்பாச்சி லாச்சிரமத்திற்குப் புறப்பட்டார்கள்.

## முயலகன் நோய் தீர்த்தல்

திருஞானசம்பந்த சுவாமிகள் அடியார் கூட்டங்களுடன் திருப்பாச்சிலாச்சிரமத்திற்கு வருவதை அறிந்த அவ்வூர்த் தலைவன் கொல்லிமழவன் என்பவன் சுவாமிகளையும் அடியார் களையும் எதிர்கொண்டழைத்து உபசரித்தான். தன்னுடைய மகள் நீண்டகாலமாய் முயலகன் என்ற வியாதியால் வருந்து கிறாள் என்றும், அதை எவரும் தீர்க்க முடியவில்லை என் றும், சுவாமிகள் கிருபை கூர்ந்து அந் நோயைத் தீர்த்தருள வேண்டுமென்றும் பிரார்த்தித்தான். அதைக் கேட்டு சுவா மிகள் சிவனருளால் தீர்த்தருளுவோம் என்று அவன் மக ளைக் கூப்பிட்டுத் திருநீற்றைத் தூவி நெற்றியில் இட்டு அப் பெண்ணின்நோய் தீர்த்தருளும்படி சிவபிரானைத் துதித்து,

திருச்சிற்றம்பலம்

துணிவளர்திங்க டுளங்கிவிளங்கச்
சுடர்ச்சடை சுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையார் பாரிடஞ்சூழ
வாரிடமும் பலிதேர்வர்
அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி
லாச்சிரா மத்துறைகின்ற
மணிவளர்கண்டரோ மங்கையைவாட
மயல்செய்வதோ விவர்மாண்பே.

அகமலியன்பொடு தொண்டர்வணங்க
வாச்சிரா மத்துறைகின்ற
புகைமலிமாலை புனைந்தழகாய
புனிதர்கொ லாமிவரென்ன
நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி
நற்றமிழ் ஞானசம்பந்தன்
றகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச்
சாரகி லாவினைதானே.

திருச்சிற்றம்பலம்

என்ற திருப்பதிகம் பாடினதும் சூரியனைக் கண்ட பனி போல் முயலகன் நோய் தீர்ந்து கொல்லிமழவன் மகள் குணமானாள். இவ்வற்புதத்தை எல்லாரும் கண்டு சுவாமி களைக் கொண்டாடினார்கள். பிறகு சுவாமிகளும் அடியார் களும் திருநீலகண்டத்துக்குப் பிரயாணமானார்கள். அங்கு அடியார் பலர் சுரநோய்ப்பட்டனர். அங்குச் சிவபிரான்மீது பதிகம் பாடி சுரநோய் தீர்த்தருளினார்.

## திருநீலகண்ட யாழ்ப்பாணர் நேயராதல்

திருத்தருமபுரத்துக்குச் சுவாமிகள் அடியார்களுடன் போனார். அங்குள்ள ஆலய தரிசனம் செய்து பதிகம் பாடி

ஞர். அதன்பின் அங்குள்ள திருநீலகண்ட யாழ்ப்பாணர்க்கு நேயராஞர். திருப்பாணர் யாழ் வாசிப்பதில் வல்லவர். சுவாமிகள் பாடும் பதிகங்களை யாழில் வாசித்து வந்தார். ஒரு நாள் பாணர் யாழில் வாசிக்க முடியாத ஒரு பதிகம் பாடும் படி கேட்டுக்கொண்டார். சுவாமிகள் அதற்கிசைந்து சிவ பிரானைத் துதித்து,

திருச்சிற்றம்பலம்

மாதர்ம டப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடைந் நெடு முடியதோர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னைதயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றருமபு ரம்பதியே.

பொன்னெடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலி
பொரூஉ புன றிரூஉ வமர் புகலியென் றுலகில்
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஃ
துசெந் தமிழ்த் தடங் கடற் றருமபுரம் பதியைப்
பின்னெடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை
யவன் பிணை துணை கழல் கள்பேணுத லுரியார்
இன்னொடு நன்னுலகெய் துவ ரெய்திய போகமும்
முறு வர்கள் ளிடர் பிணி துயரணைவ் விலரே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடிஞர். திருப்பாணர் தன் யாழில் வாசிக்க எவ்வளவோ முயன்ருர். வாசிக்க முடியவில்லை. பிறகு பாணர், இறைவன் அருள்பெற்றவர் எல்லாஞ் செய்ய வல்லவர் என்று புகழ்ந்து பணிந்தார். பிறகு சுவாமிகள்

அடியாருடன் சிதம்பரத்துக்கு வந்து சுவாமி தரிசனம் செய்கையில் நடராசர் தனது நிச வுருவம் காண்பித்தருளினார். அதைக் கண்டு சுவாமிகள் பதிகம் பாடினார்.

## செத்தவரை எழுப்புதல்

சுவாமிகளும், அடியார்களும் திருமருகலூருக்குப் போய் ஆலய தரிசனம் செய்தார்கள். அப்போது அங்குள்ள மடத்தில் ஒரு வணிகனும் அவனது மனைவியும் தங்கி இருக்கையில், வணிகன் அரவம் கடித்து இறந்தான். வணிகன் மனைவி மிக்க துயரம் கொண்டு அலறினாள். சுவாமிகளின் அற்புதச் செயலைக் கேட்டு அவரிடம் வந்து அடிபணிந்து, அடியேன் கணவனை எழுப்பித் தரவேண்டும் என்று வேண்டினாள். அடியார்கள் பிறர் துயரம் பாராதவர்களான தால், சிவபிரானை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ விவளுண் மெலிவே.

வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபாட வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடி விபூதியை மேலே தூவியதும் வணிகன் தூங்கி விழித்தவன்போல் எழுந்தான். இதைக் கண்டு வணிகன் மனைவி பெருமகிழ்வு அடைந்தாள். இருவரும் சுவாமிகளைப் பணிந்தனர். சுவாமிகள் அவர்களை வாழ்த்தினார். ஆனந்தங் கொண்டார்கள்.

## மாநகர் மதுரைக்குப் போதல்

மாநகர் மதுரையைக் கூன்பாண்டியன் அரசாண்டிருந்தான். அவன் சைவசமயத்தை விட்டுச் சமண சமயத்தினர் சொற்கேட்டு மதிமயங்கி யிருந்தான். இதையறிந்த மன்னன் மனைவி மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறை நாயனாரும் அரசன் சைவ சமயத்தின் மாண்பறியாமல் தடுமாறுகிறதைத் தடுக்கவேண்டி திருஞானசம்பந்த சுவாமிகளை மதுரைக்கு அழைத்தனர். அப்போது சுவாமிகள் அப்பர் சுவாமிகளுடன் திருமறைக்காட்டில் இருந்தார்.

மதுரையிலிருந்து வந்த தூதர் அழைப்பு ஓலையைச் சுவாமிகளிடம் கொடுத்தனர். சுவாமிகள் படித்து அப்பர் சுவாமிகளுக்கும் அறிவித்தார். அப்பர் இப்போது கெட்ட காலமாயிருப்பதால் போகவேண்டாம்; சமணர்களை வெல்ல நல்ல நேரம் பார்த்துப் போகவேண்டும் என்றார். சுவாமிகள் திருநீறணிந்த திருமேனியன் அடியார்க்கு எல்லாக் காலமும் நல்ல காலமாகும். அவன் காப்பதால் எல்லா இடர்களும் தீரும். ஆகையால் யான் போய்வருகிறேன் என்று அப்பர் சுவாமிகளிடம் விடைபெற்றுக்கொண்டு, யாதொரு இடுக்கணும் வராமல் காக்கும்படி சிவபிரானைத் துதித்து,

திருச்சிற்றம்பலம்

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஞாயிறுதிங்கள்செவ்வாய் புதன்வியாழம்வெள்ளி
சனிபாம்பிரண்டுமுடனே
ஆசறுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெறுன்னி
வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞானஞானமுனிவன்
தானுறுகோளுநாளு மடியாரைவந்து
நலியாதவண்ணமுறைசெய்
ஆனசொன்மாலையோது மடியார்கள்வானி
லரசாள்வராணைநமதே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடிப் போற்றி மதுரைக்கு அடியார்களுடன் எழுந்தருளினார்.

சம்பந்த சுவாமிகள் மதுரையை அடைந்ததும் கூன் பாண்டியன் மனைவியாரும் மந்திரியாரும் சுவாமிகளை உபசரித்து சோமசுந்தரர் ஆலயத்துக்கு அழைத்துப் போனார்கள். சுவாமிகள் சோமசுந்தரக் கடவுளை வணங்கிப் பதிகம் பாடினார். அதன்பின் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாரும் கொண்டிருக்கிற சிவபத்தியைக் கண்டு அவர்களைக் குறித்துப் பதிகம் பாடினார்.

## கூன்பாண்டியன் சுரநோய் அடைதல்

திருஞானசம்பந்த சுவாமிகளும் அடியார்களும் மதுரை ஆலயத்தருகில் உள்ள மடத்தில் இருந்தனர். சுவாமிகளிடத்தில் அரசியும் மந்திரியாரும் பற்றுக்கொண்டிருப்பதைச் சமணர்கள் அறிந்தனர். இரவில் சுவாமிகளும் அடியார்களும் தங்கி இருக்கிற இடத்துக்குத் தீயிட்டழிக்க முயன்றார்கள். சுவாமிகள் இவர்கள் தீய செயலினை முன்னமே அறிந்தனர். இத் தீய செயலுக்கு அரசன் காரணனாதலால் எங்கட்குத் தீயிட நினைந்த அரசனை அழல் பற்றுக என்று சுவாமிகள் அரம்வைத்து,

திருச்சிற்றம்பலம்

செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே.

அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடினார். அரசன் நல்வழிப்படவேண்டி புத்திகற்பிக்க 'பையவே சென்று' என்று பாடினதால் அரசனைத் தீ பிடிக்காமல் சுரம் பிடித்தது.

பாண்டியன் சுரத்தின் கடுமை தாங்கமுடியாமல் துடித்தான். வைத்தியர்களும் சமண முனிவர்களும் குணப்படுத்த முயன்றும் முடியவில்லை. அடியார்களால் வந்தது அடியார்களாலல்லவோ தீரவேண்டும். நாள் போகப்போக அரசன் நோய் அதிகமாய் வந்தது. அரசன் வருந்தினான். அரசியாரும் மந்திரியாரும் பொய்க்கொள்கை போதிக்கும் சமணர்களால் தங்கள் நோய் தீரவில்லை. மெய்ச்சமயமாகிய சைவ சமயத்தை அநுசரிக்கும் அடியாராகிய சம்பந்தசுவாமிகள் மதுரை மடத்தில் இருக்கின்றார். அவரை அழைத்து வர அநுமதிக்கவேண்டும் என்று கேட்டனர். அரசன் எப்படியாவது என் நோய் தீரச் செய்யுங்கள் என்றான். நோய்கள் மூன்று விதத்தில் தீரும். முதலாவது, கடவுள் பிரார்த்தனையால் தீரும். இரண்டாவது, மருந்தால் தீரும். மூன்றாவது, கத்தியால் அறுப்பதால் தீரும்.

குலச்சிறைநாயனரும் அரசன் மனைவி மங்கையர்க் கரசியாரும் உடனே மடத்துக்குச் சென்று விபரங்களைச் சொல்லி சுவாமிகளையும் அடியார்களையும் அரண்மனைக்கு அழைத்தார்கள். அரசி சுவாமிகளுக்கு அபாயம் நேருமோ என்று அஞ்சினர். சுவாமிகள் எம்பெருமான் திருவருள் இருப்பதால் எப்பொழுதும் ஒன்றும் நேராது என்று இறை வனை வணங்கி அரண்மனைக்குப் புறப்பட்டார்.

கூன்பாண்டியன் சுவாமிகளைச் சபையில் வரவேற்று உபசரித்தான். பிறகு சுவாமிகளுடைய வரலாற்றைக் கேட் டான். சுவாமிகள் தம்முடைய வரலாற்றைக் கூறினர். அதன் பிறகு பாண்டியன் சபையில் உள்ள சமணர்கள் அடியார்கள் முதலானவர்களைப் பார்த்து “ நமக்கு இடையில் அமர்ந்திருக் கும் சுவாமிகள் என்னுடைய நோயைத் தீர்ப்பதற்காக அழைக்கப்பட்டிருக்கிறார். அவர் தீர்ப்பாராயின் அவர் சம யத்தையே நான் மேற்கொள்வேன். இதற்கு ஏதேனும் தடையிருந்தால் கூறலாம் ” என்றான். உடனே சமணர்கள் மூன்று வாதங்கள் சமர்ப்பித்தனர்.

க. திருஞானசம்பந்தர் பாண்டியன் பாதி தேகத் தில் உள்ள சுர நோயைத் தீர்த்தல் வேண் டும். மற்றொரு பாதியைச் சமணர் தீர்த் தல் வேண்டும்.

உ. சமயக்கொள்கை எழுதின திருவோலையைத் தீயில் போடல் வேண்டும்.

ங. சமயக்கொள்கை எழுதின ஏட்டை ஆற்றில் இடல் வேண்டும்.

இவ்வாதங்களில் வெற்றி பெற்றாருடைய சமயம் உண் மைச் சமயமாம்.

இம்மூன்று வாதங்களையும் சுவாமிகள் அப்படியே ஒப் புக்கொண்டனர். சமணர்கள் தங்கள் சமயத்தில் உள்ள

மந்திரங்களைச் சொல்லி அரசன் பாதி உடலை மயிர்ப்பீலியால் தடவினார்கள். நோய் தீரவில்லை. அரசன் நோயால் பின்னும் வருந்தினான். சம்பந்தசுவாமிகள் அரசனுடைய மற்றொரு பாதி உடலில் திருநீறு பூசி சிவபிரானைத் துதித்து,

திருச்சிற்றம்பலம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் றிருநீறே.

ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே.

திருச்சிற்றம்பலம்

என்னும் மந்திரமொழிப் பதிகம் பாடினார். பாண்டியன் உடலின் ஒரு பக்கம் சுரநோய் தீர்ந்தது. பின்னர் சமணரால் தீராத மற்றொரு பாதியில் இருந்த நோயையும் தீர்த்தருளினார்.

இரண்டாம் வாதம் சமயப்பாடல் எழுதின ஏட்டைத் தீயில் இடுதல். சமணர்கள் தங்கள் ஏட்டைத் தீயில் இட்டனர். ஏடு வெந்து சாம்பலாயிற்று. சம்பந்தசுவாமிகள் கருணாநிதியாகிய சிவபிரானை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

போகமார்த்த பூண்முலையா ளன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.



**மதுரை கூன்பாண்டியன் மாளிகை**

கூன்பாண்டியன் சுரநோயைத் திருஞானசம்பந்தர்
பதிகம்பாடிக் குணமாக்குதல்.

[பக் - ௩௫

தண்புனலும் வெண்பிறையும் தாங்கிய தாழ்சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்துமி வைவல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகிலு றைவாறே.

திருச்சிற்றம்பலம்

என்ற பாட்டை எழுதி, ஏட்டைத் தீயிலிட்டார். ஏடு வேக வில்லை. அதைக் கண்டு அனைவரும் மூன்றும் வாதம் எப்படி முடியுமென்பதைப் பார்க்க ஆவலாயிருந்தனர்.

மூன்றும் வாதத்துக்குச் சமணர்கள் தங்கள் சமயக் கொள்கை அடங்கிய மந்திரத்தை ஏட்டில் எழுதி ஆற்றில் விட்டனர். ஏடு ஆற்றில் அடித்துக்கொண்டு போய்விட்டது. பிறகு அனைவரும் சுவாமிகளைப் பார்த்தார்கள். சுவாமிகள், சிவபிரானே! உன்னுடைய அடியார்களைக் காப்பது உன் கடமையன்றோ! என்று கூறி,

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்த னல்ல
எல்லார் களும்பரவு மீசனை ஏத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரம் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே.

திருச்சிற்றம்பலம்

என்ற திருப்பதிகத்தை எழுதி ஏட்டை ஆற்றில்விடவே ஏடு ஆற்றை எதிர்நோக்கிச் சென்றது.

## சம்பந்தசுவாமிகள் வெற்றி

திருஞானசம்பந்தசுவாமிகள் மீண்டும் சிவபிரானைத் துதித்து ஏடு நிற்கப் பதிகம் பாடினார்; ஏடு நின்றது. இவ்வற்புதச் செயலை எல்லோரும் கண்டு சுவாமிகளைப் போற்றிப் புகழ்ந்தார்கள். சுவாமிகள் 'வேந்தனுமோங்குக' என்று பதிகத்துள் பாடியதால் பாண்டிய அரசன் கூன் நிமிர்ந்தது. இவ்வதிசயத்தை அரசனும் அரசியும் அமைச்சர்களும் கண்டு ஆனந்தம் அடைந்து சுவாமிகளை வணங்கினார்கள். அரசன் தன் சொந்த சமயத்தின் உண்மையை நேரில் அறிந்தான். அரசனும் சமணர்கள் பலரும் சைவ சமயத்தை மேற்கொண்டார்கள். எல்லோரும் " சம்பந்தசுவாமிகளுக்கும் சைவசமயத்திற்கும் வெற்றி" என்று முழக்கம் செய்தார்கள்.

சுவாமிகள் அடியார், அரசர் முதலானவர்களுடன் ஆலவாயிலில் முதன்முதல் சோமசுந்தரக்கடவுளாய்த் தோன்றித் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிவபிரானைத் தரிசித்து,

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தனல்ல பண்பினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயி லண்ணலைத்
தீயதீர வெண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடி சிவபிரானது ஆற்றலையும் மகிமையையும் போற்றிப் புகழ்ந்தார். பிறகு பாண்டியனால் சில



**மயிலை கபாலீசுவர ஆலயம்**

குடத்திலிருந்த எலும்பு திருஞானசம்பந்தசுவாமிகள் பாடப்
பெண் உருவம் பெறல்.

[பக் - ௬௭

நாள் உபசரிக்கப்பட்டு அதன்பின் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு போதிமங்கைக்கு வந்து சுவாமி தரிசனம் செய்து அங்கு சைவசமயத்தைப் பெருக்கினர். பிறகு சுவாமிகள் அடியார்களுடன் திருக்கொள்ளம்பூதூர் போனார். போகும் வழியில் ஆறு குறுக்கிட்டிருந்ததால் அங்குள்ள படகில் ஏறிக்கொண்டு சிவனருளால் படகு அக்கரை போகவேண்டுமென்று தோத்திரம் பாடினர். படகு அக்கரை போயிற்று. அங்குள்ள ஆலயத்தைத் தரிசனம் செய்துகொண்டு திருவோத்தூருக்குச் சென்று பதிகம் பாடி சுவாமிதரிசனம் செய்து அங்குள்ள காயாதிருந்த பனைமரங்களைக் காய்க்கும்படி செய்தார்.

அதன்பின் சுவாமிகள் அடியார்களுடன் திருமயிலைக்குப்போய் கபாலீசுவர சுவாமியைத் தரிசித்தார். அங்குள்ள சிவநேசர் என்ற வணிகர் மகள் பாம்பு கடித்து இறந்தாள். அப்பெண் சம்பந்தர் பேருக்கு விடப்பட்டிருந்ததால் அவ்வணிகன் அவளைத் தகனஞ்செய்து எலும்பை எடுத்து பானையில் இட்டு மயிலாப்பூரில் உள்ள கபாலீசுவரர் ஆலயத்தண்டையில் உள்ள ஒரு புன்னைமரத்தடியில் வைத்துப் பூசை செய்துவந்தான். சுவாமிகள் ஆலயத்துக்கு வந்து சுவாமி தரிசனம்செய்த பிறகு வணிகன் அவரிடம் அச் செய்தியைக் கூறி விண்ணப்பித்துக்கொண்டான். சுவாமி சிவனடியார்களுக்கு இடுக்கண் நேரலாமோ சிவபிரானே! பூம்பாவை உருவமும் உயிரும் பெற்றெழ கிருபை புரியும் என்று கூறி,

திருச்சிற்றம்பலம்

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணதே போதியோ பூம்பாவாய்.

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடினதும் பானை உடைந்து சோதிப் பிழம்பிலிருந்து தோன்றும் வடிவம்போல் பூம்பாவை என்ற அவ்வழகிய பெண் தோன்றினாள். பெண்ணின் தந்தையும் பெண்ணும் அடியார்களும் இவ்வற்புதச் செயலைக் கண்டு சுவாமிகளைப் பணிந்தார்கள். அங்கிருந்து திருநெல்லூருக்கு வந்து சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடித் திருத்தொண்டு செய்துகொண்டு வந்தார்.

## சுவாமிகள் அந்தியகாலம்

பிறகு பல தலங்களையும் வணங்கிவிட்டு தன் சொந்த ஊராகிய சீர்காழிக்கு வந்துசேர்ந்தார். அப்போது அவருக்கு வயது பதினாறு. அவருடைய தந்தையார் அவருக்கு மணம் செய்விக்க விரும்பினார். ஞானசம்பந்தர் முதலில் மறுத்தார். பின்னர் ஒருவாறு ஒப்புக்கொண்டார். திருநாரையூர் நம்பியார் என்பவர் தன் பெண்ணைக் கொடுக்க இசைந்தார். திருநாரையூரில் மணம் நடைபெற ஏற்பாடாயிற்று. அடியார் பலர் வந்தனர். குறிப்பிட்ட நாளில் மணம் நடைபெற்றது. மணவினை முடிந்தது. சம்பந்தர் கோயிலுக்குச் சென்று இறைவனைக் காண எண்ணங் கொண்டார். மணக்கோலத்துடன் சென்றார். இறைவனை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில

சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே.

நறும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்
பெரும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பொழி பாவ மவல மிலரே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடினார். அப்போது அங்கே ஒரு சோதி உண்டாயிற்று. அதைத் தரிசித்துத் தன்னுடன் வந்த அடியார்களை முதலில் புகச்செய்தார். அவர்களெல்லாரும் புகுந்தபின் திருஞானசம்பந்தப் பெருமான், தம் காதலி கையைப்பற்றிக்கொண்டு,

திருச்சிற்றம்பலம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே.

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே.

திருச்சிற்றம்பலம்

என்னும் முத்திப் பதிகம் பாடி இறைவன் திருவருளால் தோன்றிய சோதியை வலம் வந்து, அதனுள் புகுந்து இரண்டறக் கலந்தார். திருஞானசம்பந்தசுவாமிகள் சிவ பிரானைத் துதித்துப் பாடிய பாடல்கள் மொத்தம் பதினாறு யிரம். அவைகளில் அழிந்தவை போக எஞ்சிய பதிகங்கள் முந்நூற்று நாற்பதெட்டு.

---

## ௪. அப்பர்சுவாமிகள் வரலாறு

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழ ஞர்பான்
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றியமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரரு டரவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

வந்துதமக் கையரருளால் நீறு சாத்தி
வண்டமிழால் நோய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலங் கொடிஇடபம் விளங்கச் சாத்தி
அந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
அருட்காசு பெற்றுமறை அடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றில் கயிலை கண்டு
பூம்புகலூர் அரன்பாதம் பொருந்தி னாரே.

தென்னிந்தியாவில் திருவாமூரில் கல்வி யறிவும் ஈசுர பக்தியும் கொண்ட புகழனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மனைவி பெயர் மாதினியார். இவர்கள் செல்வர்கள். இவர்களுக்குச் சித்திரைத் திங்கள் சதய நட்சத்திரத்தில் ஓர் ஆண்மகவு (கி. பி. ௬௦௦ல்) பிறந்தது. அதற்கு மருணீக்கியார் என்று பெயரிட்டு அருமையாக வளர்த்து வந்தனர். மருணீக்கியாரின் இளமையிலேயே பெற்றோர்கள் பரகதி அடைந்தனர். மருணீக்கியாருக்குத் திலகவதியார் என்ற ஒரு தமக்கையார் இருந்தார். தமக்கையார் தம்பியைப் பள்ளிக்கு அனுப்பிவந்தார். பெற்றோர் விட்ட செல்வங்களை



**அப்பர்சுவாமிகள்**

ஊர் திருவதிகை. பிறப்பு கி.பி. ௬00. முத்தி அடைந்தது வயது ௮௧-ல் சுவாமிகள் பதிகங்கள் பாடிப் பல அற்புதங்களைச் செய்தவர். சிவபிரான் அருள் பெற்றவர்.

[பக் - ச்க

அறவழியில் செலவிட்டு வந்தார். தம்பி, கல்வி கேள்விகளில் வல்லவரானார். ஆனால் தன் சொந்த சமயக் கொள்கைகளை அதிகம் விரும்பிக் கற்காதவரானார். அதனால் சைவசமயத்தின் மாண்பு அவருக்குத் தெரியவில்லை.

அச்சமயத்தில் பாடலிபுரம் என்னும் இடத்தில் பிற சமயமாகிய சமணசமயத்தைச் சமண முனிவர்கள் கற்பித்தும் பிரசாரம் செய்தும் வந்தார்கள். மருணீக்கியார் அங்குச் சென்று அவர்களுடைய கொள்கைகளையும் சமயத்தையும் கற்றுத் தேர்ந்தார். அதைக் கண்ட சமணர்கள் அவருக்குத் தருமசேனர் என்று பெயர் கொடுத்து அவரைச் சமணர்களுக்குத் தலைவராக்கினார்கள். இக்காலத்தில் தமிழர் சிலர் கிறித்துவமதத்தில் புகுந்து அச்சமயநூல்களைக் கற்றுப் பாதிரிமார்களாகத் தலைமை வகிப்பதுபோல் மருணீக்கியார் சமணசமயத்தார்களுக்குத் தலைவராய் விளங்கினார்.

திருவாமூரில் வாழ்ந்துவந்த திலகவதியார், கலிப்பகையார் என்ற ஒரு சேனைத் தலைவரை மணக்க நிச்சயம் செய்திருந்தார். கலிப்பகையார் அப்போது வட இந்தியாவில் நடந்து கொண்டிருந்த போருக்குச் சென்றிருந்தார். அப்போரில் அவர் இறந்தார். அச்செய்தி திலகவதியாருக்குத் தெரிந்தது. இனி எவரையும் மணப்பதில்லை என்று சிவபிரான் மீது பக்திகொண்டு அறவொழுக்கத்தை மேற்கொண்டார். அடிக்கடி சிவபிரானைத் துதித்துச் சமண சமயத்தில் பிரவேசித்திருக்கிற தம்பி, மீண்டுவந்து சைவ சமயத்தில் சேர திருவருள் புரிய வேண்டுமென்று வேண்டி வந்தார். கடவுளை வணங்கினவர் கைவிடப்படுவரோ!

## நோய் காணல்

பாடலிபுரத்தில் சமணசமயத்திற்குத் தலைவரா யிருந்த தருமசேனர்க்கு வயிற்றுவலி கண்டது. சமணசமய

மந்திரத்தாலும், மருந்தாலும் குணமாக்கச் சமணர்கள் முயன்றார்கள். அவர்களால் குணமாக்க முடியவில்லை. அவர்க்கு நோய் பெருகிக்கொண்டு வந்தது. அவரால் நோய் தாளமுடியவில்லை. பகைமையாலோ வேறு காரணத்தாலோ சுற்றத்தாரை விட்டு நீங்கினோர் நோயுற்றபோது சுற்றத்தைத் தேடி வருவது அநுபவம். அதுபோல் மருணீக்கியார் ஒருநாள் சமண சமயச் சின்னங்களை அகற்றிவிட்டுத் தன் தமக்கையார் இருக்கிற விடத்திற்குவந்து அவர் காலில் விழுந்து வணங்கித் தன்னை மன்னிக்கும்படியும், தன் நோய் தீரச் சிகிச்சை செய்யும்படியும் வேண்டிக்கொண்டார்.

திலகவதியார் தன் தம்பி திரும்பத் தன்னிடம்வந்து சேர்ந்தது சிவனருள் என்று எண்ணி, தம்பியை அழைத்துக்கொண்டு திருவீரட்டான ஆலயத்துக்குட் சென்று சுவாமியைத் தரிசித்து தன்னுடைய தம்பியின் வயிற்று வலி தீரவேண்டி வணங்கித் திருநீற்றை அவர் நெற்றியிற் பூசி, வயிற்றிலுந் தடவினார்.

## அப்பர்சுவாமிகள் சிவனருள் பெறல்

திருவீரட்டானேசுவரர் ஆலய சந்நிதியில் மருணீக்கியார் வந்து நின்று, தன் தமக்கையார் சிவபிரானைத் துதித்து விபூதி பூசியதும் அவர்க்குச் சிவனருள் உண்டாயிற்று. தன் நோய் தீரத் திருவருளை நினைந்து,

திருச்சிற்றம்பலம்

கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்றா யடிக்கே இரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்

தோற்று தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

போர்த்தா யங்கோ ரானையினீ ருரிதோல்
புறங்கா டரங்கா நடமாட வல்லாய்
ஆர்த்தா னரக்கன் றனைமால் வரைக்கீ
ழடர்த்திட் டருள்செய் தவது கருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தா
லென்வே தனையா னவிலக் கியிடாய்
ஆர்த்தார் புனல்சூ ழதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார். சமயத்தின் உயர்வை அறிந்தார். சிவபிரானது மகிமையையும் அருளையும் புகழ்ந்து அங்கிருந்து இல்லம் புகுந்து தெய்வப்பணியே பெரும் பணியாகச் செய்து வந்தார். இதைக்கண்டு பலர் அடியார் களாகச் சேர்ந்துகொண்டனர்.

சமண முனிவர்கள் இச்செய்தியை அறிந்தனர். அப் போது பாடலிபுரத்தைப் பல்லவ அரசன் ஆண்டுவந்தான். அவன் சமணசமயத்தை மேற்கொண்டிருந்தான். சமண முனிவர்கள் அரசனிடம் போய் "நம் சமயத்திலிருந்த தருமசேனர் அதைப் புறக்கணித்துவிட்டுத் தன் சொந்த சமயமாகிய சைவசமயத்தில் சேர்ந்துகொண்டார். இது அரச சமூகத்துக்கு அபகீர்த்தியாகும். அவரைத் திரும்ப நமது சமயத்திற் சேர்க்க வற்புறுத்தல் வேண்டும். மறுத் தால் தண்டிக்கவேண்டும்" என்றனர்.

அக்காலத்தில் மதக்குருக்கள் கூறுகிறபடி அரசர்கள் கேட்பது வழக்கமானதால் பல்லவ அரசன் தூதர்களிடம்

ஓலை கொடுத்து உடனே தருமசேனரை அழைத்து வரும் படிக் கட்டளை இட்டான். தூதர்கள் சென்று ஓலை கொடுத்துச் சுவாமிகளை உடன் வரும்படி அழைத்தனர். சுவாமிகள் யான் சிவபிரானுக்கு மட்டும் அடியவன், மற்றவர்க்கல்லன் என்று கூறி,

திருச்சிற்றம்பலம்

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.

நாவார நம்பனையே பாடப் பெற்றோம்
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
ஆவாவென் றெமையாள்வா னமரர் நாத
னயனொடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் றென்றிசைக்கோன் றானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
குணமாகக் கொள்ளோமெண் குணத்து ளோமே

திருச்சிற்றம்பலம்

என்னும் திருத்தாண்டகத்தைப் பாடினார். பிறகு தான் போகாவிட்டால் அரசன், தூதர்களுக்குத் துன்பம்செய்வான் என்று நினைந்து எதுவந்தாலும் சிவபிரான் திருவருள் முன் னிற்கும் என்ற எண்ணத்துடன் சிவபிரானைத் துதித்துக் கொண்டே அரசனிடம் போனார்.

## அப்பர்சுவாமிகளுக்குத் தண்டனை

அப்பர்சுவாமிகள் அரசன் அவைக்களத்துக்குச் சென்றதும் அரசன் சினந்து தன் சமயத்தைவிட்டு சைவசமயத்தை மேற்கொண்டது குற்றம் என்று சுவாமிகளை நீற்றறையில் இட்டுச் சாத்தும்படி தூதர்களுக்குக் கட்டளை இட்டான். உடனே தூதர்கள் சுவாமிகளை நீற்றறையில் இட்டனர். அப்போது சுவாமிகள் இரு கைகளையும் கூப்பிக் கொண்டு இறைவனை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை இணையடி நீழலே.

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகத்தைப் பாடினார். நீற்றறை குளிர்ந்திருந்தது. சுவாமிகள் நீற்றறையில் வேகவில்லை. தூதர்கள் சற்று பொறுத்து அறையைத் திறந்து பார்த்தபோது சுவாமிகள் களிப்புடன் இருப்பதைக் கண்டு அரசனிடம் தெரிவித்தனர். பின்னர் அவன் கட்டளைப்படி நஞ்சு கலந்த சோற்றைச் சுவாமிகளுக்குக் கொடுத்தனர். சுவாமிகள் அதையும் உண்டு சுகித்திருந்தார். சிவபிரான் ஆதியில் ஆலகால நஞ்சு உண்டு சுகித்திருந்ததுபோலவே அவர் அடியாராகிய சுவாமிகளும் நஞ்சுண்டு சுகித்திருந்தார்.

இச்செய்தியைத் தூதர்கள் பல்லவ அரசனுக்கு அறிவித்தனர். அரசன் தன் கட்டளை உபயோகமற்றது கண்டு பின்னும் அதிக சினங்கொண்டான். உடனே மதயானையை ஏவி மிதித்துக்கொல்லக் கட்டளையிட்டான். பாகர்கள் யானையைக் கொண்டுவந்து சுவாமியை மிதித்துக்கொல்ல ஏவினர். இதையறிந்த சுவாமிகள் இரு கைகளையும் கூப்பி என்னைக் காத்தருளும் சிவபிரானே என்று கூறி,

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரன்முர ணேறு மகலம் வளாய வரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை.

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னொன்பது மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினர். யானை சுவாமிகளை மிதிப்பதைவிட்டு வலம்வந்து மண்டியிட்டு வணங்கிவிட்டு, தன்மீதிருந்த பாகர்களைத் தள்ளி மிதித்துக்கொன்று மற்றும் அங்கிருந்தவர்களையும் கொன்றது. "பிறருக்குக் கேடு செய்யின் அக்கேடு தனக்கே வரும்" என்ற நீதிபோல் அரசன் சுவாமிகளுக்குச் செய்த தீங்கு அவனுக்கே விளைந்தது. அதைக் கண்டு அரசன் இன்னும் கோபமடைந்தான். கோபம் பாவமறியாது என்பதற்கிணங்க, சுவாமிகளைக் கல்லிற்கட்டிக் கடலில்போடும்படி மீண்டும் உத்தரவுசெய்தான்.



## தி ரு வ தி கை

தம்மை மிதிக்கவந்த யானையைப் பார்த்து
அப்பர் சுவாமிகள் பதிகங்கள் பாடினதும்
யானை வணங்குதல்.

[பக் - ௪௮

தூதர்கள் படகில் சுவாமிகளை ஏற்றிக்கொண்டுபோய்க் கல்லிற் கட்டிக் கடலிற் போட்டனர். சிவனடியார்கள் வானமிடிந்து வீழினும் வையகத்திலுள்ள தண்டனைகள் திரண்டு வந்தாலும் தயங்குவரோ! சுவாமிகளைக் கடலிற் போட்ட போது "சிவபிரானே! என்னைக் கரைசேர்த்தருளும்" என்று வேண்டி,

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நன்றுணை யாவது நமச்சி வாயவே.

மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினர். கல் தோணியாக மிதந்து சுவாமிகளைக் கரை சேர்த்தது. சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூர் என்னுமிடத்தில் கரை ஏறினர். இவ்வற்புதச் செயல்கள் நாடெங்கும் பரவிற்று. அநேகர் சுவாமிகளிடம் வந்து சிவனடியாரானார்கள்.

## சுவாமிகளின் அற்புதச் செயல்கள்

பல்லவ மன்னன் படையினர் சுவாமிகளைக் கல்லிற் கட்டி கடலிற்போட்ட செய்தியை அரசனுக்கு அறிவித்தனர். அரசன் கடைசியாகச் சுவாமிகளுக்குக் கொடுத்த தண்டனையை அவர் அடைந்தார் என்று களித்தான். பிறகு

சுவாமிகள் கரையேறி அநேக அடியார்களுடன் தெய்வத் திருப்பணி செய்கிறார் என்று கேள்வியுற்றான். சுவாமிகளின் ஆற்றலையும் அற்புதங்களையும் சிவபக்தியையும் அறிந்து கொண்டு அவனும் உண்மைச் சமயமாகிய சைவசமயத்தை மேற்கொண்டு மற்றவர்களையும் அநுசரிக்கும்படி செய்தான்.

அப்பர்சுவாமிகள் அடியார்களுடன் பல ஆலயங்களுக்குச் சென்று பதிகங்கள் பாடிக்கொண்டு திருத்தூங்கானைமாடத்திற்குச் சென்றனர். அங்குச் சுவாமி தரிசனம் செய்து சிவபெருமானது திரிசூல முத்திரையையும் மழவிடைக் கொடியையும் தனது இரு தோளிலும் பொறிக்கும்படி வேண்டிக்கொண்டு,

திருச்சிற்றம்பலம்

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி செய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடபம் பொறித்தென்னை ஏன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுள் தூங்கானை மாடத்தெந் தத்துவனே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார். உடனே அவர், தம்முடைய இரு தோளிலும் திரிசூலமும் சினவிடையும் பொறிக்கப்பட்டதைக் கண்டு மகிழ்ந்தார். பிறகு சுவாமிகள் பல தலங்களையும் தரிசித்துப் பதிகம் பாடிக்கொண்டு சிதம்பரத்துக்குவந்தார்.

சிதம்பரம் ஒரு புராதன கால தலம். அங்குள்ள ஆலயம் ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்குமுன் கட்டப்பட்டது.

அவ்வாலயத்தில் நடராசர் எழுந்தருளியபடியாகி இருக்கின்றார். அவரைத் தரிசனம் செய்து,

திருச்சிற்றம்பலம்

பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ
எத்தினாற் பத்திசெய்கே னென்னைநீ இகழவேண்டா
முத்தனே முதல்வாதில்லை அம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் னாடல்காண்பா னடியனேன் வந்தவாறே.

மண்ணுண்ட மாலவனு மலர்மிசை மன்னினானும்
விண்ணுண்ட திருவுருவம் விரும்பினார் காணமாட்டார்
திண்ணுண்ட திருவேமிக்க தில்லைச்சிற் றம்பலத்தே
பண்ணுண்ட பாடலோடும் பரமநீ யாடுமாறே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினார். தில்லைவாழ் நடராசர் பக்தன் விண்ணப்பத்துக்கு இரங்கி நிசவுருவம் காண்பித்தருளினார். சுவாமிகள் அதைக் கண்டு ஆனந்தங் கொண்டார். அப்போது சீர்காழியில் திருஞானசம்பந்தர் அடியார்களுடன் சைவசமயப் பணி செய்தலைக் கேள்விப்பட்டு அங்கே சென்று அவரைக் காண அடியார்களுடன் புறப்பட்டார். அப்பர்சுவாமிகள் வருவதைச் சம்பந்தசுவாமிகள் கேட்டார். அடியார்களுடன் வழியில் வந்து உபசரித்து அழைத்துச் சென்றார். அங்குப் பலநாள் இருவரும் சமயத்திருப்பணி பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர்.

## அப்பர்சுவாமிகள் செத்தவரை எழுப்புதல்

பிறகு அப்பர்சுவாமிகள் சோழநாட்டில் பல தலங்களையும் தரிசிக்க விரும்பி திருஞானசம்பந்தசுவாமிகளிடம்

விடை பெற்றுக்கொண்டு பல தலங்களையும் தரிசித்துப் பதிகங்கள் பாடிக்கொண்டு திங்களூருக்கு வந்தார். அவ்வூரில் அப்பூதி நாயனூர் என்பவர் இருந்தார். அவர், அப்பர் சுவாமிகள் ஆற்றலையும் மகிமையையும் கேட்டு, அவர் பெயர் விளங்கத் தன் குமாரனுக்கும்; தோட்டங்கள், குளங்கள், சத்திரங்கள் முதலியன ஏற்படுத்தி அவைகளுக்கும் அவர் பெயரிட்டு வழங்கச்செய்து வந்தார். அப்பர்சுவாமிகள் அங்கே சென்றதும் அவரை அழைத்துப்போய் அவைகளையெல்லாம் காண்பித்து உபசரித்துத் தன்னுடைய இல்லத்தில் விருந்துண்ணும்படி கேட்டுக்கொண்டார்.

சுவாமிகள் இசைந்தார். அப்பூதிநாயனூர் திருநாவுக்கரசு என்ற தன் மகனைக் கூப்பிட்டு வாழையிலை அறுத்து வரும்படி கூறினூர். சிறுவன் வாழையிலை அறுத்துக்கொண்டு திரும்புகையில் அவனைப் பாம்பு கடித்துவிட்டது. வாழை இலையை அன்னையிடம் கொடுத்துத் தன்னைப் பாம்பு கடித்தது என்று கூறிக் கீழே சாய்ந்து உயிர்விட்டான்.

தாய் மனங்கலங்கினூள். அடியார்களுக்கு அமுதிடல் முதல் வேலை என்று உடனே மைந்தனை எடுத்து ஒருபுறம் கிடத்திவிட்டு, சுவாமிகளுக்கு இலைபோட்டு அறுசுவையுடன் அன்னம் பரிமாறினூள். சுவாமிகள் திருநாவுக்கரசைப் பார்க்கவேண்டுமென்று விரும்பினூர். பெற்றோர் நடந்த செய்தியைக் கூறினர். அப்போது சுவாமிகள் செத்த சிறுவன் உயிர்பெற்றெழவேண்டிச் சிவபிரானைத் துதித்து,

திருச்சிற்றம்பலம்

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே.



**திங்களூர் அப்பூதியடிகளும் அவர் மனைவி மக்களும்**

அப்பூதியடிகளின் இறந்த மகனை அப்பர்சுவாமிகள் எழுப்பித்தரல்.

[பக் - ௫௦

பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுங்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி படுத்திருந்த சிறுவன்மீது விபூதியைத் தூவினார். உடனே சிறுவன் தூங்கி விழித்தவன்போல் எழுந்தான். அதை அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும் அடியார்களும் கண்டு ஆனந்தங்கொண்டனர். பிறகு சுவாமிகள் அமுதுண்டார். சுவாமிகளும், அடியார்களும் அப்பூதியடிகள் வேண்டுகோளுக் கிணங்கிச் சிலநாள் அங்குத்தங்கியிருந்து அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு திருவாரூரை அடைந்து சுவாமிதரிசனம் செய்து திருப்பதிகம் பாடினார். அங்கு நமிநந்தியடிகள் என்ற ஒருவர் இருந்தார். அவர் ஒரு சிவபக்தர். அவர் நீரில் விளக்கெரியச் செய்த மகிமையைக் குறித்து,

திருச்சிற்றம்பலம்

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

பிரமன்றன் சிரமரிந்த பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி
கரநான்கு முக்கண்ணு முடையோய் போற்றி
காதலிப்பார்க் காற்ற வெளியாய் போற்றி
அருமந்த தேவர்க் கரசே போற்றி
யன்றரக்க னைஞ்ஞான்கு தோளுந் தாளும்
சிரநெரித்த சேவடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம்பாடி, அங்கிருந்து பல தலங்களையும் சுற்றிக்கொண்டு திருப்புகலூரில் முருக நாயனார் மடத்தில் தங்கியிருக்கும் சம்பந்தசுவாமிகளுடன் வந்து கூடினார். பிறகு இருவரும் அடியார் கூட்டங்களுடன் பல தலங்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனம் செய்து பதிகங்கள் பாடி வந்தனர்.

## பஞ்சம் தீரப் படிக்காசு பெற்றது

அப்பர்சுவாமிகளும் திருஞானசம்பந்த சுவாமிகளும் அடியார்களுடன் திருவீழிமிழலை வந்து ஆலயதரிசனம் செய்து தங்கினார்கள். அப்போது மழையில்லாது அங்குப் பஞ்சமாயிருந்தது. மனிதர்கள் பஞ்சத்தால் உணவின்றி வருந்தினர். பிறகு சுவாமிகள் இருவரும் சிவபிரானை வணங்கிப்பஞ்சந்தீரப் படிக்காசு தந்தருளும்படி விண்ணப்பஞ் செய்தனர். அப்படியே சிவபிரான் திருவீழிமிழலை ஆலயத்தில், ஒரு புறத்தில் கிடைக்கிற படிக் காசைத் தினம் எடுத்து அடியார்களுக்கும் மற்றவர்களுக்கும் பஞ்சம் தீரக் கொடுங்கள் என்று கூறி அருளினார்.

இப்படியே சுவாமிகள் இருவரும் தினம் ஆலயதரிசனம் செய்துகொண்டு அங்குக் கிடைக்கிற படிக்காசைக்

கொண்டுவந்து அடியார்களுக்கும் மற்றவர்களுக்கும் அமுது கொடுத்துத் துன்பத்தை நீக்கினர். பிறகு சிலகாலத்துக்குள் மழைபெய்து நாடு நன்கு விளைந்து செழிப்புற்றது. மனிதர் சுகத்தை அடைந்தனர். அங்குள்ளவர் அனைவரும் சுவாமிகள் அங்கு வந்திருந்து எல்லோர்க்கும் உதவியதனுலும் கடவுளை வணங்கி வந்ததாலும் சீக்கிரம் மழை வந்து பஞ்சம் நீங்கினது என்று வாழ்த்தினர்கள். பிறகு சுவாமிகள் அங்கிருந்து வேதாரணியத்துக்கு வந்தனர். அவ்வாலயம் பூசை செய்வார் இன்றிப் பல நாளாகச் சாத்திக்கிடந்தது. அப்பர்சுவாமிகள் ஆலயக்கதவு திறக்க,

திருச்சிற்றம்பலம்

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி ஞர்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னுலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினர். பாடினதும் கதவு திறந்தது. சுவாமிகளும் அடியார்களும் சுவாமியை வணங்கினர். அதன் பிறகு எப்போதும் திறக்கவுஞ் சாத்தவுமாக இருக்க வேண்டுமென்று அக்கதவுகள் மூடிக்கொள்ள திருஞான சம்பந்தசுவாமிகள் பதிகம் பாடினர். அப்படியே பூட்டிக் கொண்டது. பிறகு வேதாரணியத்தில் சிலநாள் தங்கி இருக்கையில் மதுரைக்குச் சம்பந்தசுவாமிகள் வரவேண்டுமென்று பாண்டியன் மந்திரி குலச்சிறைநாயனர் அழைப்பு

அனுப்பவே அப்பர்சுவாமிகளிடம் சம்பந்தசுவாமிகள் தனது அடியார்களுடன் விடைபெற்றுக்கொண்டு போய் விட்டார்.

## அப்பர்சுவாமிகள் பசி தீர்த்தல்

அப்பர்சுவாமிகள் வேதாரணியத்திலிருந்து புறப்பட்டு வேறுபல தலங்களைச் சுற்றி, சுவாமிதரிசனம் செய்து கொண்டு திருப்பைஞ்ஞீலி தலத்துக்குப் போனார். போகும் வழியில் தாகத்தாலும் பசியாலும் வருந்தினார். களைப்பினால் ஒரு சோலையை அடைந்தனர். அங்கொரு வயோதிகர் கட்டுச்சோற்று மூட்டையுடன் வந்தார். அவர் அப்பர்சுவாமி களைப் பார்த்து "நீங்கள் பசியாயிருக்கிறீர்கள். இந்தக் கட்டுச் சோற்றை உண்டு இளைப்பாறுங்கள்" என்று கொடுத்தார்

அப்பர்சுவாமிகள் சாப்பிட்டு இளைப்பாறிக்கொண்டு பிறகு விருத்தருடன் திருப்பைஞ்ஞீலிக்குப் புறப்பட்டார். ஊர் சமீபித்ததும்| கூடவந்த வயோதிகர் மறைந்துபோனார். இதைச் சுவாமிகள் அறிந்து கட்டுச்சோறு கொடுத்துக் களைப்பாறச் செய்தவர், கூடவந்து மறைந்தவர், சிவபிரான் என்றறிந்து அவருடைய பெருங் கருணையைப் பெரிதும் வியந்து மகிழ்ந்து திருப்பைஞ்ஞீலி ஆலயத்துக்குட் சென்று,

திருச்சிற்றம்பலம்

உடையார் கோவண மொன்றுங் குறைவிலர்
படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
சடையிற் கங்கை தரித்த சதுரரை
அடைய வல்லார்க் கில்லை யவலமே.

தருக்கிச் சென்று தடவரை பற்றலும்
நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே
அரக்கன் பாட வருளுமெம் மானிடம்
இருக்கை ஞீலியென் பார்க்கிட ரில்லையே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம்பாடி அங்கு ஆலயதரிசனம் செய்து விட்டுப் பிறகு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு வந்தார்.

## சுவாமிகளுக்கு அங்கம் வளர்ந்தது

அப்பர்சுவாமிகளுக்கு வயது முதிரமுதிர சிவபிரான் மீது பக்தியும் அதிகரித்து வந்தது. பிறகு சுவாமிகளுக்குத் திருக்கைலாயத்தில் கோவில்கொண்டிருக்கும் சிவபிரானைத் தரிசிக்க அவா அதிகரித்து வந்தது. திருக்கைலாயம் தரிசிக்க நடந்து நடந்து களைத்தார். பிறகு நடக்க முடியாமல் அங்கப் பிரதட்சணம் செய்துகொண்டு போனார். (அங்கப் பிரதட்சணம் என்பது பூமியில் படுத்து உருண்டுகொண்டு ஆலயம் சுற்றல்) அங்கப் பிரதட்சணத்தால் சுவாமிகளின் உடல் உறுப்புகள் எல்லாம் தேய்ந்தன. தேய்ந்தும் சுவாமிகளுக்கு ஆண்டவன் சிவபிரான் மீதிருந்த பக்தியினால் மேலும் மேலும் தனது உடல் உறுப்புகள் தேய்வதையும் பொருட்படுத்தாமல் போய்க்கொண்டிருந்தார். சுவாமிகளின் மனத் திடம் கண்ட சிவபெருமான் தேய்ந்த உறுப்புகளை முன்போலாக்கினார். அங்குள்ள ஒரு குளத்தில் மூழ்கச் செய்தார். மூழ்கிய அப்பர்சுவாமிகள் திருவையாற்றிலுள்ள திருக்குளத்தில் கரையேறினார். அங்கு இறைவன் அவருக்குத் திருக்கைலாய காட்சியைக் காட்டியருளினார். அதைக் கண்டு சுவாமிகள் அளவிலா ஆனந்தங்கொண்டு,

திருச்சிற்றம்பலம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்.

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்
அளவு படாததொ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடிப் பரமனை வணங்கினார்.

பிறகு அப்பர்சுவாமிகள் பல தலங்களையும் தரிசித்துப் பதிகங்கள் பாடிக்கொண்டு திருப்பூந்துருத்திக்கு அடியார்களுடன் வந்துசேர்ந்து சுவாமிதரிசனம் செய்தார். அங்கு மடமொன்று கட்டிச் சிலநாள் தங்கியிருந்தார். அப்போது சம்பந்தசுவாமிகள் மதுரையில் சமணர்களை வாதில் வென்று திருப்பூந்துருத்தியில் அப்பர்சுவாமிகள் தங்கியிருப்பதை அறிந்து அங்கு வந்து சேர்ந்தார். அப்பர் சுவாமிகள் சம்பந்தசுவாமிகளை வரவேற்று உபசரித்தார். சம்பந்தசுவாமிகள் மதுரையில் நடந்த செய்திகளையெல்லாம் சொன்னார். அப்பர்சுவாமிகள் அவற்றைக் கேட்டு ஆனந்தங்கொண்டார். அங்கு இருவரும் சிலநாள் தங்கியிருந்தனர். பிறகு அப்பர்சுவாமிகள் பாண்டி நாடாகிய மதுரைக்கு அடியார்களுடன் புறப்பட்டார்.

## சுவாமிகள் அந்தியகாலம்

அப்பர்சுவாமிகளும் அடியார்களும் வழியில் உள்ள பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு மதுரைக்கு வந்தனர். சுவாமிகள் வருவதை அரசன் அறிந்து சுவாமிகளையும் அடியார்களையும் வரவேற்று உபசரித்தான். அங்குப் பலநாள் அரசனால் உபசரிக்கப்பட்டு வருகையில் சுவாமிகள் தினம் சோமசுந்தரக் கடவுளைத் தரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி

வந்தார். பிறகு அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு திருப்புகலூர்க்கு வந்து சுவாமிதரிசனம் செய்து அங்கேயே தங்கியிருந்தார். தினம் கோவில்நிலத்தி லிருக்கும் புல்லைத் தன் கையிலிருக்கிற உழவாரத்தால் களைந்து திருத்தொண்டுகள் செய்துவந்தார். பிறகு சுவாமிகளுக்கு அந்தியகாலம் சமீபித்ததறிந்து, சிவபிரானே! இனி உனது திருவடியிற் சேர்த்துக்கொள்ளும் என்று வேண்டி,

திருச்சிற்றம்பலம்

எண்ணுகே னென்சொல்லி யெண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே யெண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
கழலடியே கைதொழுது காணி னல்லால்
ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

ஒருவனையு மல்லா துணரா துள்ள
முணர்ச்சி தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி
இல்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்
கருவரைசூழ் கான லிலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

திருச்சிற்றம்பலம்

என்னும் முத்திப்பதிகம் பாடி அங்கு அப்போது உண்டான அருட்சோதியில் மூழ்கி இறைவன் திருவடிநீழல்

அடைந்தார். இதைக் கண்டு அடியார்கள் எல்லோரும் துயரில் மூழ்கிச் சிவபிரானைத் துதித்தார்கள். அப்பர்சுவாமிகள் தனது அந்திய காலத்தை முன்னே அறிந்தார். அக்காலத்தில் சிவனடியார் எல்லோரும் தங்கள் அந்திய காலத்தை முன்னறிந்து சிவசோதியில் கலக்கவோ அல்லது கல்லறையில் சமாதியாகவோ வேண்டிய ஏற்பாடுகளைச்செய்துகொண்டனர். அப்படியே நமது அப்பர்சுவாமிகளும் செய்து கொண்டார்.

அப்பர்சுவாமிகள் முத்தி அடையும்போது வயது எண்பத்தொன்று. அவர் அருளிய பதிகங்கள் நாற்பத்தாறாயிரம். அழிந்தவை போக எஞ்சியவை ௩௧௨.

திருச்சிற்றம்பலம்





**சுந்தரமூர்த்திசுவாமிகள்**

ஊர் திருநாவலூர். பிறப்பு கி. பி. ௮௦௭. முத்தி அடைந்தது வயது ௧௮-ல். சுவாமிகள் பல பதிகங்கள் பாடிப் பல அற்புதங்களைச் செய்தவர். சிவபிரான் அருள் பெற்றவர்.

[பக் - ௫௮

## ரு. சுந்தரமூர்த்திசுவாமிகள் வரலாறு

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனய னாராய்
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோள் நயந்து வைகித்
திண்குலவு விறன்மிண்டர் திறங்கண் டேத்தும்
திருத்தொண்டத் தொகை யருளாற் செப்பி னாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து
தப்பில்முது குன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பில்தனித் தூதுவந்தா னூடு தீறி
உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி அருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி னாரே.

தென்னிந்தியாவில் திருநாவலூரில் சடையனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார் பெயர் இசைஞானியார். இருவரும் இல்வாழ்க்கை இனிது நடத்துகையில் ஒரு புத்திரன் ஆடி மாதம் சுவாதி நட்சத்திரம் (கி. பி. அ௦எ-ல்) பிறந்தான். அவனுக்கு நம்பியாரூரன் எனப் பெயரிட்டு உரியவயதில் பள்ளிக்கு அனுப்பிக் கல்வி கற்பித்து வந்தார்கள். சிறுவன் கல்வி கற்றுத் திறமடைந்தான். அவன்

விளையாடும்போதும் உயர்தர விளையாட்டுகள் பல விளையாடி வருவான்.

அச்சமயம் அந்நாட்டை நரசிங்கமுனையார் என்ற ஒரு சிற்றரசர் ஆண்டார். அவர் ஒருநாள் வீதியில் போகையில் ஆரூரன் தேர் உருட்டல் விளையாட்டு விளையாடிக்கொண்டிருந்தான். நரசிங்கமுனையார் அவனைக் கண்டார். அச்சிறுவன் உயர்நிலைக்கு வரக்கூடியவனைப்போல் காணப்பட்டான். உடனே விசாரித்து அவனுக்குக் கல்வி முதலிய பயிற்சிகள் யாவும் தனது செலவில் செய்துவந்தார். ஆரூரன் கல்வி கேள்விகளில் திறம்பெற்று மிக்க அழகுடையவனாய்த் திகழ்ந்தான். ஆரூரன் அழகனாயிருந்ததால் அவனுக்குச் சுந்தரன் என்று சிறப்புப் பெயர் கொடுத்தனர்.

## சுந்தரர் மணம்

சுந்தரர்க்குப் பெற்றோர் மணம் செய்யத் தீர்மானித்தனர். புத்தூரில் சிவாசாரியார் என்ற ஒருவர் இருந்தார். அவர் மகளைச் சுந்தரர்க்கு மணமுடிக்கப் புத்தூரிலேயே ஏற்பாடு செய்தனர். (இதிலிருந்து பெண் வீட்டுக்குப் பிள்ளை போய் மணக்கும் முறை இருந்தது என்று தெரிகின்றது.) உறவினர், நேயர் சூழ சுந்தரர் மணக்கோலத்துடன் பெண் வீட்டுக்குப் போயினர். அங்கு எல்லாம் ஆயத்தம் செய்யப்பட்டிருந்த அழகிய மணப்பந்தலில் அனைவரும் இருந்தனர். அப்போது அங்கொரு விருத்தர் வந்து சுந்தரரைப் பார்த்து உனக்கும் எனக்கும் பெருவழக்கிருக்கின்றது. அதைத் தீர்த்துவிட்டு மணம் புரிந்துகொள் என்றார். அதைக் கேட்டு எல்லோரும் விருத்தரைக் கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

சுந்தரர் திகைத்து விழித்தார். என்ன, உமக்கும் எனக்கும் வழக்கா? தங்களை யான் எப்போதும் அறியேனே.

தாங்கள் எங்கிருந்தோவந்து பித்துக்கொண்டவர்போல் பிதற்றுகின்றீரே. நம் இருவர்க்கும் வழக்கிருக்கிறதென்று கூறுகிறீர். அதற்கு ஆதாரம் என்ன ? அப்படி யிருப்பதற்கு ஏதாவது பத்திரம் உண்டா ? என்று கேட்டார். அதற்கு விருத்தர் யான் திருவெண்ணெய் நல்லூரில் இருப்பவன், யான் பித்தனல்லன். எனக்கும் உமக்கும் வழக்கிருக்கிற தென்பதற்கு ஆதாரமான வழக்குப்பத்திரம் இதோ, பார், என்று பனை ஏட்டில் எழுதப்பட்ட ஓலையை நீட்டிக் காண்பித்தார்.

சுந்தரர் அவ்வோலையை வாங்கிப் படித்துப் பார்த்தார். அதில் சுந்தரர் அவ்விருத்தருக்குப் பரம்பரை அடிமை என்று எழுதப்பட்டிருந்தது. சுந்தரர் திகைத்தார். பந்தலில் இருப்பவர்கள் எல்லாரும் ஆச்சரியப்பட்டனர். வழக்குப் பத்திரம் திருவெண்ணெய் நல்லூரில் எழுதப்பட்ட தால், வழக்கு அங்கேதான் நடக்கவேண்டும். அங்குப் போய் வழக்கை முடித்துக்கொண்டு, பிறகு மணம் முடித்துக்கொள் வோம் என்று பந்தலில் உள்ள உறவினர்களும் மற்றவர் களும் கூறினர். ஆனால் சுந்தரர்க்குமட்டும் வழக் குப் புதுமையாகவே இருந்தது. எதற்கும் முடிவைப் பார்ப்போமென்று சுந்தரர் சிலருடன் விருத்தர்கூட திரு வெண்ணெய் நல்லூருக்குப் புறப்பட்டார்.

## ஆண்டவன் ஆண்டருளல்

திருவெண்ணெய் நல்லூருக்கு விருத்தர் முன்னேயும் மற்றவர் பின்னேயும் போயினர். ஊர் சென்றதும் அங்குள்ள ஆலயத்தில் விருத்தர் புகுந்தார். சுந்தரரும் மற்றவரும் பின்னால் புகுந்தனர். அப்போது விருத்தர், சுந்தரா! உன்னை உலக பந்தத்திலிருந்து நீக்க வந்து தடுத்தாட்கொண்டோம். இதிலிருந்து இனி நீ உய்வாயாக! என்று சொல்லி மறைந்தார்.

விருத்தர் சொன்ன திருவார்த்தைகளைக் கேட்டதும் சுந்தரர்க்கு மெய்ஞ்ஞானம் உண்டாய்விட்டது. உடலம் புளகங்கொண்டு கண்களில் ஆனந்த அருவி பொழிய தாயைப் பிரிந்த குழந்தைபோல் தன்னைவிட்டு மறைந்துபோனவரைக் காணாது அழுதார்; தொழுதார்; அலறினார்; கூப்பிட்டார்.

சுந்தரர் பித்தங் கொண்டவர்போலவும், பெரும்பொருள் இழந்தவர் போலவும், பசுவை இழந்த கன்று போலவும் ஆலயம் முழுதும் சுற்றிச் சுற்றித் தேடினார். பெரியார் தென் படவில்லை. தன்னை வந்து தடுத்தாட்கொண்டவர் சிவ பிரானே என்று அறிந்தார். "எம்பிரானே! தங்கள் பேராற் றலையும், பெருங் கருணையையும் அறியாது தங்களைப் பித்தா என்றேனே! பேதையேன் அறியாது பிதற்றிய புன்மொழி களைப் பொறுத்தருளுக" என்று இருகையும் சிரமேற் கூப்பி, வணங்கினார்.

சிவபெருமான் "சுந்தரா என்னைப் பித்தாவென்று அழைத்தாயல்லவா. அதைத் தொடக்கமாக வைத்தே இன்றுமுதல் என் மேற் பாட்டுகள் பாடிக்கொண்டு வருவா யாக" என்று திருவாய் மலர்ந்தருளினார். சுந்தரருக்கு ஒரு வித உணர்ச்சி உண்டாயிற்று; பாட ஆரம்பித்தார்.

திருச்சிற்றம்பலம்

பித்தாபிறை சூடீபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புகழ் எய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே.

திருச்சிற்றம்பலம்



**புத்தூரில் சுந்தரமூர்த்திசுவாமிகள்**

மணப்பந்தரில் பரமன் விருத்த வடிவமாய் வந்து
தடுத்தாட் கொள்ளல்.

[பக் - கூ௨

என்னும் இப்பதிகத்தைப் பாடினார். கூட இருந்தவர்கள் சுந்தரர் இறைவன் திருவருள் சுரந்து பாடுவதைக் கண்டு ஆனந்தங் கொண்டனர்.

## முடிமேல் திருவடி சூட்டல்

சிவஞானம் பிறந்ததும் சுந்தரர் சிவாலயங்கள் முழுதும் யாத்திரை செய்து தரிசிக்க விரும்புவதாய் மற்றவரிடம் விடை பெற்றுக்கொண்டார். கூட சில அடியார்களாக இருக்க விரும்பினவர்களை அழைத்துக்கொண்டு அப்பர்சுவாமிகள் இருந்த திருவதிகைக்குப் போனார். அங்குச் சுவாமிதரிசனம் செய்துவிட்டு அப்பர்மடத்தில் இரவு தங்கினார். சுந்தரர் தூங்குகையில், மடத்தில் படுத்திருந்த ஒரு வயோதிகர் கால் சுந்தரர் தலையிற் பட்டது. சுந்தரர் விழித்து யாரோ சிவனடியார் ஆழ்ந்த நித்திரையில் அறியாது கால் நீட்டியதால் பட்டது என்று வேறொரு பக்கம் தலை வைத்துக் கொண்டு படுத்துக்கொண்டார்.

சிவனடியார் கால் மீண்டும் சுந்தரர் தலையில் பட்டது. சுந்தரர் தூக்க மயக்கத்தில் எழுந்து என் தலையில் இரண்டாம் முறையும் கால்படும்படி தூங்குகிறவர் நீர் யார்? என்று கடிந்து கேட்டார். அதற்குச் சிவனடியார் "என்னை நீ அறியாயோ?" என்று கூறி மறைந்து போனார். அப்போதுதான் சுந்தரர் தன்னை மிதித்தவர் சிவபிரானே என்று தெரிந்து கொண்டார். உள்ளம் உருகி,

திருச்சிற்றம்பலம்

தம்மானை யறியாத சாதியா ருளரே
    சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
    லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்

தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே.

என்பினையே கலனாக வணிந்தானை யெங்க
ளெருதேறும் பெருமானை யிசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயனாவ லூர்க்கோன்
வன்றொண்ட னாரூரன் மதியாது சொன்ன
அன்பனை யாவர்க்கு மறிவரிய வத்தர்
பெருமானை யதிகைமா நகருள்வாழ் பவனை
என்பொன்னை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார்.

பிறகு திருவாரூருக்குச் சென்றார். அடியார்களுடன் அங்குச் சுவாமிதரிசனம் செய்துவிட்டுச்|சிவபிரானே! அடியார்கள் அனைவரையும் பாட அருள்புரிய வேண்டும் என்று கைகூப்பி நின்றார். சிவபெருமான் 'தில்லைவா ழந்தணர்' என்று அடியெடுத்துக் கொடுத்தார். அதுகொண்டு அடியார்களைப் பாடிப் புகழ்ந்தார்.

திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
றிருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனு யுலகாண்ட செங்கணுர்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனுர்க் கடியேன்
என்னவனு மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனு மாரூர னடிமைகேட் டுவப்பா
ராரூரி லம்மானுக் கன்பரா வாரே.

திருச்சிற்றம்பலம்

பின்னர் சுந்தரமூர்த்திசுவாமிகள் அடியார்களுடன் குண்டையூர்ப் போனுர். அங்கு ஆலய தரிசனம் செய்தார். அங்குச் சிவனடியார் ஒருவர் சுவாமிகளை வரவேற்றுபசரித்து நெற் குவியல் கொடுத்தார். அக்குவியல்கள் திருவாரூருக்குச் சேரவேண்டுமென்று 'நீளநினைந் தடியேன்' என்ற பதிகம் பாடினுர். குவியல்கள் ஆரூரை அடைந்தன. அங்கிருந்து திருப்புகலூருக்குப் போய்ச் சுவாமிதரிசனம் செய்து 'தம் மையேபுகழ்ந் திச்சைபேசினும்' என்னும் பதிகம் பாடி விட்டுத் திருமழபாடிக்குச் சென்றுர். சென்று ஆலயதரிசனம் செய்து,

திருச்சிற்றம்பலம்

பொன்னுர்மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னுர்செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னேமாமணியே மழபாடியுண் மாணிக்கமே
அன்னேயுன்னையல்லா லினியாரை நினைக்கேனே.

ஏரார்முப்புரமு மெரியச்சிலை தொட்டவனை
வாரார்கொங்கையுடன் மழபாடியுண் மேயவனைச்
சீரார்நாவலர்கோ னூரூர னுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி சுவாமிதரிசனம் செய்துகொண்டு கூடலையாற்றூருக்குப் புறப்பட்டார்.

## வழியில் வந்து வழி காட்டுதல்

சுந்தரமூர்த்திசுவாமிகள் அடியார்களுடன் கூடலையாற்றூருக்குப் போய் சுவாமிதரிசனம் செய்ய விரும்பினார். போகும் வழி தெரியாமல் திருமுதுகுன்றத்துக்குப் போகும் வழியே போனார். ஆண்டவன் அடியார்களை வருந்தவிடுவாரா? வழியிலே சிவபெருமான் கிழவராய் நின்றுகொண்டிருந்தார். அவரைச் சுந்தரர் பார்த்துக் கூடலையாற்றூருக்குப் போகும்வழி எதுவென்று கேட்டார். இதோ இவ்வழியே போனால் நேராய்க் கூடலையாற்றூருக்குப் போகலாம் என்று வழிகாட்டி மறைந்தருளினார் அவ்வயோதிகர். சுந்தரர் பிசகிய வழிச்சென்று வருந்தாமல் தம்மீது இரக்கம்வைத்துச் சரியான வழி காட்டினவர் சிவபெருமானே என்று தெரிந்து,

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுவேந்தி மதகரியுரி போர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடும்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே.

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆடலு கந்தானை யதிசய மிதுவென்று
நாடிய வின்றமிழா லுவல வூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடிச் சிவபிரானை வணங்கினர். அங்கிருந்து திருமுதுகுன்றூரை அடைந்தார். அங்கு இறைவன் சுந்தரருக்குப் பன்னீராயிரம் பொன் கொடுத்தார். சுந்தரர்

இறைவன் அருளைக்கண்டு மகிழ்ந்து வாழ்த்தினார். பின்னர் சிவபெருமான் கட்டளைப்படியே அப்பொன்னை அவ்வூர் மணிமுத்தாநதியில் போட்டுவிட்டு, திருவாரூர் சென்றபோது,

திருச்சிற்றம்பலம்

பொன்செய்தமேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலும் மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள் பரவையிவடன் முகப்பே
என்செய்தவாறடிகே ளடியேனிட் டளங்கெடவே.

பிறையாருஞ்சடையெம் பெருமானரு ளாயென்று
முறையால்வந்தமரர் வணங்கும்முது குன்றர்தம்மை
மறையார்தங்குரிசில் வயல்நாவலா ரூரன்சொன்ன
இறையார்பாடல்வல்லார்க் கெளிதாஞ்சிவ லோகமதே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடி அவ்வூர்க் குளத்தில் பெற்றுக்கொண்டார். பிறகு திருக்கடவூருக்குப் போய் ஆலயதரிசனம் செய்து 'மருவார்கொன்றை என்ற' பதிகம் பாடிவிட்டுத் திருக்குருகாவூருக்குப் போய்ச் சுவாமி தரிசனம்செய்ய விரும்பினார். அது நெடுந்தூரமாயிருந்ததால், போகும் வழியில் சுந்தரரும் அடியார்களும் பசியால் வருந்தினர். பக்தர்களின் பசியைப் பரமன் தணிக்காமல் வாளா இருப்பரோ! சுந்தரர் வரும்வழியில் சிவபெருமான் ஒரு வயோதிகராய் வந்து பந்தல் போட்டுக்கொண்டு பசியால் யாத்திரை செய்வோருக்குச் சோறுபோடக் காத்துக்கொண்டிருந்தார். சுவாமிகளும் அடியார்களும் அங்குப் போனதும் எல்லார்க்கும் உணவளித்து அன்புடன் உபசரித்தார். அனைவரும் உண்டு களைப்பாறியிருக்கையில் உணவு அளித்து உபசரித்தவர் மாயமானார். ஈசனே இதுவும் உனது திருவுளம் என்று போற்றி,

திருச்சிற்றம்பலம்

இத்தனையா மாற்றை யறிந்திலே னெம்பெருமான்
பித்தரே என்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

வளங்கனி பொழில்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
இளங்கிளை யாரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி இறைவனது பேராற்றலை வியந்து வணங்கினார். அங்கிருந்து திருக்காந்தளிக்குப் போனார். அடியவரும் தொடர்ந்தனர். அங்கு இறைவனை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

நெய்யும்பாலும் தயிருங்கொண்டு நித்தல்பூசனை செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணமில்லைக் கழலடிதொழு துய்யினல்லால்
ஐவர்கொண்டிங் காட்டவாடி யாழ்குழிப்பட் டழுந்துவேற்கு
உய்யுமாறென் றருளிச்செய்யீ ரோணகாந்தன் றளியுளீரே.

ஓவணமே லெருதொன்றேறு மோணகாந்தன் றளியுளார்தாம்
ஆவணஞ்செய் தாளுங்கொண்டு வரைதுகிலொடு பட்டுவீக்கிக்
கோவணமேற் கொண்டவேடங் கோவையாக வாரூரன்சொன்ன
பாவணத்தமிழ் பத்தும்வல்லார் பறையுந்தாஞ்செய்த பாவந்தானே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடினார். அங்கிருந்து புறப்பட்டு வேறு பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருக்கச்சூரை அடைந்தார். அடைந்து கோயிலுக்குட் சென்றார். இறைவனை

வணங்கினார். வணங்கிவிட்டு வெளியே வந்தார். சாப்பாட்டு வேளை, பசி அதிகமாயிருந்தது. ஒரு புறத்தில் களைப்புடன் அமர்ந்தார். அப்போது சிவபெருமான் ஒரு வயோதிகராய் வந்தார். சுந்தரரைக் கண்டார். "பசித்தீர் போலும். சோறு இரந்து கொண்டுவருகிறேன்." என்று கூறிப் புறப்பட்டார். சோறுங் கறியும் இரந்துவந்தார். சுந்தரருக்குக் கொடுத்தார். சுந்தரரும் மகிழ்ந்து உண்டார். வயோதிகரும் மறைந்தார். வந்தவர் இறைவன் என்பதறிந்தார் சுந்தரர். அவர் திரு வருளை நினைந்து வியந்தார். வியந்து,

திருச்சிற்றம்பலம்

முதுவாயோரி கதறமுதுகாட் டெரிகொண்டாடன் முயல்வானே
மதுவார்கொன்றைப் புதுவீசூடும் மலையான்மகடன் மணவாளா
கதுவாய்த்தலையிற் பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரே
அதுவேயாமா றிதுவோகச்சூ ராலக்கோயி லம்மானே.

அன்னமன்னும் வயல்சூழ்கச்சூ ராலக்கோயி லம்மானை
உன்னமுன்னு மனத்தாரூர னாரூரன்பேர் முடிவைத்த
மன்னுபுலவன் வயனாவலர்கோன் செஞ்சொன்னாவன வனரெண்டன
பன்னுதமிழ்நூன் மாலைவல்லா ரவரெந்தலைமேற் பயில்வாரே.

திருச்சிற்றம்பலம்

என்ற பதிகம் பாடி அதினின்றும் புறப்பட்டுத் திருக் கேதாரம் என்ற திருப்பதிக்குச் சென்றார். சென்று அங்கு இறைவனை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்மின்றடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதாரமெ னீரே.

நாவின்மிசை யரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்றிருக் கேதாரத்தை யூரன்னுரை செய்த
பாவின்றமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி வாழ்க்கையின் அநித்தியத்தை மனிதர் அறியச் செய்தார்.

## சத்தியந்தவறின் தண்டிக்கப்படுவோம்

பிறகு பலதலங்களையும் வணங்கி விட்டுத் திருவொற்றியூரை அடைந்தார். அங்கு சங்கிலியார் என்ற பெண்ணிடம் காதல்கொண்டார். இறைவன் முன்னிலையில் 'உன்னைப் பிரியேன்' என்று ஆணை கூறி அவரை மணந்தார். சில நாட்கள் அங்குத் தங்கியிருந்தார். மறுபடியும் பலதலங்கள் சென்று இறைவனைக் கண்டு வணங்கவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. தான்செய்த சபதம் மறந்தார். அவ்வூரைவிட்டுப் புறப்பட்டார். எல்லையைத் தாண்டினார். ஆணை தவறியதால இருகண்களும் பார்வை இழந்தன. சபதம் தவறியதால் இத்துன்பம் உண்டானது என்று அறிந்தார். அறிந்தும் இறைவன் திருவருள் துணைகொண்டு பல தலங்களையும் வணங்கப் புறப்பட்டார். பலதலங்களையும் வணங்கி வழிபட்டுத் திருவெண்பாக்கம் வந்தார். கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேயென்ன
உழையுடையா னுள்ளிருந்து ளோம்போகீ ரென்றானே.

ஏராரும் பொழினிலவு வெண்பாக்க மிடங்கொண்ட
காராரு மிடற்றானைக் காதலித்திட் டன்பினொடும்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் றமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி ஊன்றுகோல் அருளப்பெற்றார். அங்கிருந்து திருவேகம்பம் போய்ச் சுவாமிதரிசனம் செய்து 'ஆலந்தானுகந்தமுது' என்னும் திருப்பதிகம் பாடி இடக்கண் பெற்றார். பெறவே சுவாமிகளுக்கு இறைவனிடம் மேலும் மேலும் எல்லையில்லா அன்பு உண்டாயிற்று. பிறகு, திருவாவடுதுறை ஆலயத்துக்குப்போய் எம்பிரானே! ஏழைக்கிரங்கும் ஈசனே! யான் உனக்கு அடிமை; என் பிழை பொறுத்து எனக்கு வலக்கண் பார்வையும் தந்தருளும் என்று வேண்டி,

திருச்சிற்றம்பலம்

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே.

காரூர் கண்டத் தெண்டோண் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே யடிப்பே ராரூரன்
பாரூ ரறிய வென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி வலக்கண் பார்வையும் பெற்றுச் சிவபெருமானது அருளை அறிந்து ஆனந்தமடைந்தார்.

## சிவனருளால் செல்வங்கள் பெறல்

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமங்கலத்துக்குப்போய்ச் சுவாமிதரிசனம் செய்து அவ்வூரில் வசிக்கிற கலிக்காமநாயனாரால் உபசரிக்கப்பட்டிருந்தார். கலிக்காமநாயனாருக்குக் குடல் நோய் இருந்து துன்புறுத்தி வந்தது. அதைச் சுந்தரரிடம் கூறி முறையிட்டார். "நோய் தீர வேண்டும் அதற்காவன செய்தருள்க" என்று வேண்டிக்கொண்டார். சுவாமிகள் சிவபிரான் அருளால் நோய் தீர்ப்போம் என்று சிவபிரானைத் துதித்து விபூதியை வயிற்றில் தடவினார். உடனே குடல்நோய் நீங்கியது. அதன் பிறகு சேர, சோழ, பாண்டியர்களுக்கு நேயராகி அங்குள்ள சிவாலயங்களை யெல்லாம் தரிசித்துப் பதிகம் பாடிவருகையில் சேரமான் பெருமான் நாயனாருக்கு நண்பரானார். அவரிடம் சிலநாள் தங்கியிருந்து விடைபெற்றுக்கொண்டு அவர்களால் கொடுக்கப்பட்ட பலவித பரிசுகளுடன், பிரமபுரத்துக்கு வந்து சுவாமி தரிசனம் செய்து,

திருச்சிற்றம்பலம்

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறுடித் திரிவீர்
செத்தார்தம் மெலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தார மிலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும்
கடனைகைக் காரோண மேவியிருந் தீரே.

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த உமக்கடியேன் குறைதீர்க்க வேண்டு
மொளிமுத்தம் பூணார மொண்பட்டும் பூவும்

கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டும்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரென்
றண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
வருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம்பாடிப் பொன்மணி, உடைவாள் முதலிய பொருள்கள் பெற்றார். அப்பொருள்கள் எல்லாம் இறைவனருளால் கிடைத்தவென்று மேலும் மேலும் அவரது பெருங்கருணையை நினைந்து நினைந்து ஆனந்தமடைந்தார்.

சுவாமிகள் பிறகு திருவையாற்றுக்குப் போய் அங்குள்ள ஆலயதரிசனம் செய்ய விரும்பி அடியார்களுடன் போனார். போகையில் காவேரி யாறு குறுக்கிட்டு வெள்ளம் நிறைய போய்க்கொண்டிருந்தது. அப்போது சிவபிரானை தங்கள் தரிசனத்துக்கு வந்துகொண்டிருந்த எங்களுக்கு இத் தடை நேரலாமோ! ஆற்று வெள்ளம் பிரிந்து எங்களுக்கு வழிவிட எங்களை அக்கரையில் சேர்ப்பது தங்கள் கடமையன்றோ என்று கூறி,

திருச்சிற்றம்பலம்

பரவும்பரிசொன் றறியேனான் பண்டேயும்மைப் பயிலாதேன்
இரவும்பகலும் நினைந்தாலு மெய்தநினைய மாட்டேனான்
கரவிலருவி கமுகுண்ணத் தெங்கங்குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ.

கூடியடியா ரிருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப்பிலீர்
ஊடியிருந்து முணர்கிலே னும்மைத்தொண்ட னூரனேன்
தேடியெங்குங் காண்கிலேன் திருவாரூரே சிந்திப்பன்
ஆடுந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினர். உடனே ஆற்று வெள்ளம் இரண்டாகப் பிரிந்து வழிவிட்டது எல்லோரும் அக்கரை சென்றனர். பிறகு ஆலயத்துக்குப் போய் அங்குள்ள சுவாமியைத் தரிசித்துக்கொண்டு அங்கிருந்து திருவஞ்சைக்களத்துக்குப் போனார்கள்.

## கழறிற்றறிவாரிடம் கனநிதிபெறுதல்

திருவஞ்சையில் கழறிற்றறிவார் நாயனர் என்ற ஒருவர் இருந்தார். அவர் ஒரு சிவபக்தர். அவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அற்புதங்களையும் மகிமைகளையும் கேட்டிருந்தார். அவர் திருவஞ்சைக்கு வருவது அறிந்து சுவாமிகளையும் அடியார்களையும் அழைத்துவந்து நன்கு உபசரித்தார். சுவாமிகள் அங்குத் தங்கி யிருக்கையில் திருவஞ்சை ஆலயத்துக்குச் சென்று சுவாமிதரிசனம் செய்து திருப்பதிகம் பாடிவந்தார். பிறகு சுவாமிகளுக்குத் திருவாரூர் நினைவு தோன்றிற்று. செல்ல விடைதரும்படி கழறிற்றறிவார் நாயனரைக் கேட்டார். கழறிற்றறிவார்நாயனர் சுவாமிகளைப் பணிந்து சுவாமிகளை உபசரித்ததால் யானும் எனது இல்லமும் புனிதமானேம் என்று புகழ்ந்து சுவாமிக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்து வழிகூட்டி யனுப்பினர்.

சுவாமிகள் விடை பெற்றுக்கொண்டு அடியார்களுடன் திருமுருகன்பூண்டிக்குக் காட்டு வழியாய் வருகையில் கள்வர்கள் வந்து அடியார்களிடமுள்ள திரவியங்களைப் பறிக்க முயன்றனர். அப்போது நாங்கள் சிவனடியார்கள்; எங்களிடமுள்ள பொருள் எல்லாம் ஒரு சிவனடியாரால் திருப்பணிக்காகக் கொடுக்கப்பட்டவை. அவைகளைநீங்கள் பறித்துக்கொள்வது நீதியாகாது என்று கூறினர். அவர்கள் மேலும் துன்புறுத்தி அவைகளைக் கைக் கொண்டனர். சுவாமிகள் சிவபிரானே இக்கள்வர்கள் நல்லவர்களாகவும்

காங்கள் இழந்த செல்வங்களைத் திரும்பப் பெறவும் இக் கள்வர்களிடமிருந்து தப்பவும் கிருபை புரிய வேண்டும் என்று வேண்டிக்கொண்டு,

திருச்சிற்றம்பலம்

கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர்
விரவலாமை சொல்லித்
திருகுமொட்டெனக் குத்திக்கூறைகொண்
டாறலைக் குமிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ்
முருகன்பூண்டிமா நகர்வாய்
இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடு
மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே.

முந்திவானவர் தாந்தொழு
முருகன்பூண்டிமா நகர்வாய்ப்
பந்தணைவிரற் பாவைதன்னையோர்
பாகம்வைத் தவனைச்
சிந்தையிற்சிவ தொண்டனூர
னுரைத்தனபத் துங்கொண்
டெந்தம்மடிகளை ஏத்துவாரிட
ரொன்றுந்தா மிலரே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினார். கள்வர்கள் கொடுவெண்ணம் நீங்கி இளமனது அடைந்து பறித்த பொருள்களையெல்லாம் திருப்பிக்கொடுத்துச் சுவாமிகளைப் பணிந்து போனார்கள்.

## முதலையுண்ட பாலனை அழைத்தது

சுந்தரமூர்த்திசுவாமிகள் சிவபிரான் கிருபையால் கள்வர் கூட்டத்திலிருந்து தப்பினோம் என்று நினைந்து அவரும் அவ

ருடைய அடியார்களும் அவிநாசி என்ற ஊருக்கு வந்து அங்குள்ள ஆலயதரிசனம் செய்யப்போகுமுன் குளத்துக்குக் குளிக்கப்போனார்கள். அப்போது குளத்தில் நீராடும் ஒரு சிறுவனை முதலை பிடித்துக்கொண்டது. அவன் பெற்றோர் விடுவிக்க முடியாமல் அலறினர், அழுதனர். அவர்கள் சுவாமிகளிடம் வந்து தன் மகனைக் காப்பாற்றிக்கொடுக்கும்படி பணிந்து கேட்டனர்.

ஆபத்து என்றவர்களைக் காக்கும் அடியார்கள் இன்னலைக் கேட்டு இடர் நீக்காது சும்மாயிருப்பார்களா? சுந்தரமூர்த்தி சுவாமிகள் உடனே அடியார்களைக் காத்துவரும் ஆண்டவனே! இடர்போக்கும் எம்பிரானே!! முதலை புண்ட சிறுவனைக் காத்தருளும் என்று,

திருச்சிற்றம்பலம்

எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே யுள்குகின் றேனுணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே.

நீரேற வேறு நிமிர்புன்சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டனா ரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினதும் முதலையானது சிறுவனைவிட்டு நீரில் மூழ்கிப்போயிற்று. சுவாமிகள் சிறுவனைக் கரையேற்றிப் பெற்றோரிடம் ஒப்பித்தனர். பெற்றோர்கள் அடிகளில் வீழ்ந்து பணிந்து சுவாமிகளிடம் விடைபெற்றுப் போனார்கள்.



அவிநாசி குளம்

முதலையுண்ட பாலனைச் சுந்தரமூர்த்திசுவாமிகள்
பதிகம் பாடி வரவழைத்தல்.

[பக் - எசு

## சுவாமிகளின் அந்திய காலம்

சுந்தரமூர்த்திசுவாமிகள் அடியார்களுடன் திருவாரூருக்கு வந்து; கொண்டுவந்த பொருள்களை யெல்லாம் திருப்பணிக்குச் செலவிட்டு வந்தார். சுவாமிகளுக்கு அந்திய காலம் சமீபித்தது. சுவாமிகள் அதை யறிந்து சிவபிரானைத் துதித்து, இனி உனது திருக்கழலடிகளில் சேர்த்துக்கொள் என்று வணங்கி,

திருச்சிற்றம்பலம்

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனைவந் தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தா னொடித்தான்மலை யுத்தமனே.

ஊழிதொ றூழிமுற்று முயர்பொன்னொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா வஞ்சையப்பர்க் கறிவிப்பதே.

திருச்சிற்றம்பலம்

என்னும் முத்திப் பதிகத்தைப் பாடிக்கொண்டு தனக்கென்று வளர்க்கப்பட்ட தீயில் இறங்கிப் பெருஞ்சோதியில் மறைந்தார். சுவாமிகள் முத்தி அடையும்போது வயது கஅ. அவர் அருளிய தேவாரப் பதிகங்கள் மொத்தம் ௩அ000. அழிந்தவை போக எஞ்சியுள்ளவை நூறு பதிகங்கள். சுவாமிகள் ஆடி மாதம்சுவாதி நட்சத்திரத்தில் சிவனடி சேர்ந்தார்.

---

## ௬. மாணிக்கவாசகசுவாமிகள் வரலாறு

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

செய்யதிரு வாதவூர் வந்தருளி யமைச்சரெனச் சிறந்து நீடு
வையமிசை வழுதிநிதி கொண்டரனைக் குருந்தடியில் வணங்கி ஞால
முய்யவருட் பணியாற்றி நரிபரியாச் செய்துநதி யுடைப்பி லெங்க
ளையன்முடி மிசையுவந்து மண்சுமக்க வன்பினுரு வாயி னாரே.

எங்குமா கியவழகன் மேனிபிரம் படிதாங்க வேங்கிப் புத்தர்
மங்கவா ரருள்செய்து மூகைபே சிடவழங்கி மணிமன் றூடு
மெங்களை யகன்கரத்தா லேடுமெழுத் தாணியுங்கொண் டெழுதப் பாடி
யங்கண்மே வியசோதி தன்னிலிரண் டறக்கூடி யமர்ந்திட் டாரே.

பாண்டிநாட்டில் திருவாதவூரில் கல்வி யறிவும் கடவுள் பக்தியும் நல்லொழுக்கமும் உடையவர் ஒருவர் இருந்தார். அவர்போலவே அவர் மனைவியும் நற்குணமும் நன்னடக்கையும் உடையவராயிருந்தார். இருவரும் அன்புகொண்டு இல்வாழ்க்கை நடத்தி வருகையில் அவர்களுக்கு ஆனிமாதம் மக நட்சத்திரத்தில் கி. பி. அ௬௨-ல் ஆண்குழந்தை யொன்று பிறந்தது. அக்குழந்தைக்குத் திருவாதவூரார் என்று பெயரிட்டு அன்புடன் வளர்த்து வந்தனர். திருவாதவூரர்க்குத் தக்க வயது வந்ததும் கல்வி கற்றுச் சமயம், அரசு முதலிய அறிவுகளில் திறம்பெற்றார். திருவாதவூரர் பெயர்மட்டும் தெரிகிறதே தவிர அவர் பெற்றோர் பெயர் தெரியவில்லை. அவர் பாடின பாடல்களெல்லாம் மாணிக்கம்போல் மதிக்கப் பட்டதால் மாணிக்கவாசகர் எனப்பட்டனர்.



**மாணிக்கவாசகசுவாமிகள்**

ஊர் திருவாதவூர். பிறப்பு கி. பி. ௮௬௨. முத்தியடைந்தது வயது ௬௨-ல். சுவாமிகள் பல பதிகங்கள் பாடிப் பல அற்புதங்களைச் செய்தவர். சிவபிரான் அருள் பெற்றவர்.

[பக் - ௭௬

அப்போது பாண்டிநாட்டில் அரிமர்த்தன பாண்டியன் என்பவன் ஆண்டுவந்தான். அவன் மாணிக்கவாசகர் திறத்தை அறிந்து தனது அவைக்களத்து மந்திரிகளுள் ஒருவராக்கினான். அவர், அப்பதவியை ஏற்று மன்னன் இராச்சியம் மாண்படையுமாறும் குடிகள் யாவரும் இன்புறு மாறும் உழைத்து வந்தார். அவரது பரிபாலன முறை யைக் கண்டு எல்லோரும் வியந்தார்கள், புகழ்ந்தார்கள். அதைப் பார்த்துப் பாண்டியன் ஒருநாள் அவரைப் பாராட் டித் தென்னவன் பிரமராயன் என்ற பட்டமும் கொடுத்தான். அவர், பட்டத்தைப் பெற்றுக்கொண்டு இன்னும் பன்மடங் கதிகமாக ஆட்சியை ஒழுங்குடன் நடத்திவந்தார்.

## மாணிக்கவாசக சுவாமிகள் அருள்பெறல்

பாண்டியனுக்குக் குதிரைகள் வேண்டியிருந்தன. பெருந்திரவியம் சுவாமிகளுக்குக் கொடுத்து,போய்க் குதிரை கள் வாங்கி வருக என்றான். அரசன் கட்டளைப்படி மாணிக்க வாசக சுவாமிகள் குதிரைகள் வாங்கத் திருப்பெருந்துறைக் குப் போனார். அவ்விடம், அக்காலத்தில் பல விடங்களிலு மிருந்து வரும் பொருள்களை விற்கிற பெரிய துறைமுகமா யிருந்தது. சுவாமிகள் மந்திரியாக இருந்தபோதிலும் சைவ சமய நூல்களைக் கற்றும் கேட்டும் வந்ததுடன் சிவபிரா னிடம் பற்றும் கொண்டிருந்தார். இதனால் சுவாமிகள் திருப்பெருந்துறைக்கு வந்ததும் அங்குள்ள ஆலயத்தைத் தரிசிக்க போனபோது, குருந்த மரத்தடியின் கீழ்த் தூய வெண்ணீறு பூசிய துறவி ஒருவர் உட்கார்ந்து இருப் பதைக் கண்டார். சிவபெருமானே துறவியாகமாறி மாணிக்கவாசகரை ஆண்டருள வந்தார். மாணிக்கவாசக சுவாமிகள் அவரைக் கண்டதும் அழலைக் கண்ட மெழுகு உருகுவதுபோல் மனம் உருகி, அவரிடம் பெரும் பற்று

கொண்டு பணிந்தார். துறவி, அவர் பரிபக்குவநிலை உணர்ந்து சிவஞானபோதம் செய்தருளினர். சுவாமிகளுக்கு மெய்ஞானம் பிறந்தது. துறவியும் மறைந்துபோனர். சுவாமிகள் துறவி மறைந்ததும் மனம் உருகி என்னை ஆட்கொள்ளாமல் மறைந்தீர்! என்று திருப்பெருந்துறை ஆலயத்தை வணங்கி இருகையுங் கூப்பி,

திருச்சிற்றம்பலம்

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பிஉள்ளம்
பொய்தான் தவிர்த்துன்னைப்போற்றி செயசெய போற்றியென்னுங்
கைதான் நெகிழ விடேன் உடை யாய்என்னைக் கண்டுகொள்ளே.

புகவே தகேன்உனக் கன்பருள் யான்என்பொல் லாமணியே
தகவே யெனையுனக் காட்கொண்ட தன்மையெப் புன்மையரை
மிகவே யுயர்த்திவிண் ணோரைப் பணித்திஅண் ணாஅமுதே
நகவே தகும்எம் பிரான்என்னை நீசெய்த நாடகமே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி குருந்தமரத் தடியின்கீழ்த் தனக்குச் சிவஞானம் போதித்த புண்ணியன் திருக் காருண்ணியத்தை மனத்தில் நினைந்து நினைந்து உருகினர்.

## சுவாமிகள் திருப்பணி செய்தல்

மாணிக்கவாசகசுவாமிகள் அரசனுடைய கட்டளையை மறந்தார். இறைவன் திருப்பணி செய்தலும் அவர் திருவடி சேர்தலும் பெரிய இன்பம் என்று கருதினர். தான் கொண்டு வந்த பொருளையெல்லாம் திருப்பணிக்குச் செலவு செய்து கொண்டிருந்தார். குறித்த காலத்தில் மந்திரி குதிரையுடன் நாட்டுக்குத் திரும்பாததால், அரசன், தூதர்களை அனுப்பிப் பார்க்கச் சொன்னன். தூதர்கள் வந்து பார்த்தபோது

சுவாமிகள் திருப்பணியில் இருந்ததைக் கண்டு அரசனுக்கு அறிவித்தார்கள்.

அரசன் அதைக்கேட்டு உடனே ஓலை அனுப்பி மந்திரியை அழைத்துவரச் சொன்னான். தூதர்கள் கொண்டு வந்த ஓலையைப் படித்துப் பார்த்து மன்னனுக்கு யாது கூறுவேன் என்று மலைத்தார் மாணிக்கவாசகர். மறுநாள் பாண்டி நாட்டுக்குப்போக எண்ணி அன்றிரவு சிவபிரானைத் துதித்து மன்னனுக்கு என்ன சொல்லுவது என்ற ஏக்கத்துடன் தூங்கினார். தூங்கும்போது இறைவன் கனவில் வந்து, 'தொண்டனே! வருந்தாதே, ஆவணி மூலத்தில் குதிரைகள் வருமென்று மன்னனுக்குக் கூறு' என்று சொல்லி மறைந்தார்.

பொழுது புலர்ந்ததும் சுவாமிகள், சிவபிரான் கனவில் தோன்றி மொழிந்ததும் தன்னைக் காக்க அவர் பெருங் கருணை கொண்டிருப்பதும் நினைந்து,

திருச்சிற்றம்பலம்

பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்
ஒருவரை ஒன்று மிலாத வரைக்கழற் போதிறைஞ்சித்
தெரிவர நின்றுருக் கிப்பரி மேற்கொண்ட சேவகனார்
ஒருவரை யன்றி உருவறி யாதென்றன் உள்ளமதே.

கூற்றைவென் றுங்கைவர் கோக்களை யும்வென் றிருந்தழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியும் தானும்ஓர் மீனவன்பால்
ஏற்றுவந் தாருயிர் உண்ட திறலொற்றைச் சேவகனே
தேற்றமி லாதவர் சேவடி சிக்கெனச் சேர்மின்களே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடி இறைவனை நினைந்துகொண்டே மதுரைக்குப் புறப்பட்டார்.

## பாண்டியனுக்குப் பரிகொண்டுவருதல்

மதுரையில் அரிமர்த்தன பாண்டியன், மந்திரி பரிகள் கொண்டு வருவார் என்று எதிர்பார்த்திருந்தான். மந்திரி சிவவேடத்தோடு வெறுங்கையாய்ச் சென்றார். பாண்டியன் தாமதமானதை விசாரித்துப் பரிகள் எங்கே என்று கேட்டான். அதற்குச் சுவாமிகள் ஆவணி மூலத்தில் குதிரைகள் வருமென்று கூறினார். அரசனும் மந்திரி கூறியதை ஒப்புக்கொண்டான். சுவாமிகளும் அரசனும் ஆவணி மூலத்தில் குதிரைகள் வருமென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். எப்போதும் அடியார்களைக் காக்கும் அரவணிந்த எம்பிரான் சுவாமிகளைக் காக்காது விடுவரோ !

ஆவணி மூலத்தன்று குதிரைகள் அதிகம் வருமென்று எதிர்பார்த்தபடித் திரள்திரளக் குதிரைகள் வந்தன. குதிரைத் தலைவன் முன்னும் மற்றவர்கள் பின்னுமாய் அக்குதிரைகளில் ஏறி வந்தனர். மன்னன் பார்த்துப் பெரு மகிழ்ச்சி அடைந்தான். குதிரைகள் திரண்டு உருண்டு அழகுடன் இருப்பதைக் கண்டு மந்திரியைப் புகழ்ந்தான். பரித்தலைவன் அரசனுக்கும் மந்திரிக்கும் குதிரைகளினுடைய இலக்கணங்களைப் பற்றிக் கூறினான். அரசன் குதிரைப்பாகர் தலைவனுக்குப் பரிசுகள் கொடுத்து அனுப்பினான். குதிரைகள் எல்லாம் லாயங்களில் கட்டப்பட்டன. இதற்குள் இரவு வரவே குதிரைப் பாகர்கள் குதிரைகளுக்கு வேண்டிய தீனிகளைப் போட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

சிவபிரான் தனது சித்து வல்லமையால் நரிகளை யெல்லாம் மாயக் குதிரைகளாக ஆக்கினார். சிவகணங்களில் சிலரைப் பாகர்களாகச் செய்தார். அவரே அவர்களுக்குத் தலைமை வகித்துக் குதிரைகளைக் கொண்டுவந்து பாண்டியனிடம் ஒப்படைத்துவிட்டுப் போனார். அன்றிரவே குதிரைகள் எல்லாம் மீண்டும் நரிகளாய் லாயங்களை விட்டு

ஓடிப்போயின. சித்து வல்லமையால் எதுவும் செய்ய இயலும்.

## பரிகளெல்லாம் நரிகளாதல்

பாண்டியன் குதிரைப்பாகர்கள், காலையில் குதிரை லாயங்களை வந்து பார்த்தனர். லாயங்கள் எல்லாம் வெறுமையா யிருந்தன. பாகர்கள் ஓடி தூதர்களுக்குச் சொன்னார்கள். தூதர்கள் பாண்டிய மன்னனுக்கு அறிவித்தனர். அரசன், அதைக் கேட்டதும் குதிரை லாயங்களை வந்து பார்த்தான். திகைத்தான். சினந்தான். உடனே அவைக்களத்துக்கு வந்து குதிரைகள் எல்லாம் மாயமாயின. மந்திரி மாயக்காரர்போல் இருக்கிறார். உடனே போய் மந்திரியை அழைத்து வாருங்கள் என்று உத்தரவிட்டான். தூதர்கள் மந்திரியைச் சபைக்கு அழைத்து வந்தனர்.

அரசன், மந்திரியைப் பார்த்துக் கடுங்கோபத்துடன், "குதிரைகளைக் காணோம், நீங்கள் வாங்கின குதிரைகள் எல்லாம் மாயக்குதிரைகளோ? தாங்களும் மாயக்காரரோ என்று பேசினான். அரசே! யான் மாயக்காரனல்லன், ஆண்டவன்—சிவபிரான் அடியார்களுள் யான் ஒருவன். சிவபிரான் எனக்கு எதைக் கூறினாரோ அதையே தங்களிடம் சொன்னேன் என்றார். மந்திரி கூறினது மன்னன் மனதிற்குச் சரியாகத் தோன்றவில்லை. மந்திரியைச் சிறையில் அடைக்கத் தூதர்களுக்கு உத்தரவு செய்துவிட்டான். தூதர்கள், மந்திரியைக் கொண்டுபோய்ச் சிறையில் அடைத்துவிட்டனர்.

"பிறைமதி யணிந்த சிவபிரானே! இதுவும் உன் திருவுளச் செயலோ!! தங்கள் திருவுளப்படியன்றோ அடியேன் மன்னனுக்குச் சொன்னேன். இப்போது மன்னன், குதிரைகள் எல்லாம் நரிகளாய்விட்டு ஓடிவிட்டன என்றும்; என்னை மாயக்காரன் என்றும் கூறிச் சிறையிலிட்டானே. இதெல்

லாம் உனது திருவிளையாடலோ, என் செய்வேன். என்னைக் காப்பவர் உன்னையன்றி வேறில்லை" என்று எப்போதும் சிவ பிரானையே சிந்தையில் நினைந்துகொண்டு சிறையிலிருந்தார்.

பின்னர் அரசன் கொண்டு சென்ற பொருள்களை யெல்லாம் திரும்பத் தரும்வரையில் வைகையாற்று மணலில் வெயில் வேளையில் நிறுத்தித் துன்புறுத்தச் செய்தான்.

## பத்தர்களுக்குப் பரமன் பணி செய்தல்

மாணிக்கவாசகர் துன்பத்தைக் கண்டார். சிவபெருமானே! எனது துன்பத்தைத் தீர்த்தருளும் என்று வேண்டிக்கொண்டு,

திருச்சிற்றம்பலம்

பாருரு வாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டும்
சீருரு வாய சிவபெரு மானே
செங்கம லமலர் போலும்
ஆருரு வாயவென் னாரமு தேயுன்
அடியவர் தொகை நடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி
யென்னையு முய்யக்கொண் டருளே

பாற்றிரு நீற்றெம் பரமனைப்
பரங்கரு ணையோடு மெதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ்
சோதியை நீதி யிலேன்
போற்றியென் னமுதே யெனநினைந் தேத்திப்
புகழ்ந்தழைத் தலறியென் னுள்ளே
ஆற்றுவ னாக வுடையவ னேயெனை
யாவவென் றருளாயே.

திருச்சிற்றம்பலம்

என்ற பாடல்களைப் பாடினார். இறைவனும் இரக்கங் கொண்டார். வைகை யாற்றில் பெருவெள்ளம் உண்டாகச் செய்தார். வெள்ளம் பெருகிக் கரை புரண்டது. வயல்களை அழித்தது. ஊருள் புகுந்தது. மக்கள் அஞ்சினர். அரச னிடம் போய் முறையிட்டனர்.

அரசனும் அமைச்சர்களும் என்செய்வோ மென்று ஏங்கினர். வெள்ளங் கடந்து நாட்டை அழிக்காது காக்க வேண்டியது கொற்றவன் கடமையன்றோ.

அரசன் மாணிக்கவாசகசுவாமிகளைத் துன்பப்படுத் தியதால் ஏற்பட்டது என்று தெரிந்து அமைச்சர்களுடன் வந்து சுவாமிகளைப் பணிந்து அடியேன் தங்களுக்கு அறி யாது செய்த பிழைகளைப் பொருத்தருள வேண்டும் என்றும் வெள்ளம் குறையவும் அணை கட்டவும் வழிதேட வேண்டு மென்றும் கேட்டுக்கொண்டான். அப்போது சுவாமிகள் மன்னனுடைய பிழையை மன்னித்து வெள்ளங் குறைய வேண்டிக் கடவுளை வணங்கிக் கேட்டுக்கொண்டார். வெள்ளம் குறைந்தது. யாவரும் சுவாமிகளின் அருஞ் செயலைக் கண்டு ஆனந்தம் கொண்டு பணிந்தார்கள். பிறகு வீட்டுக்கொரு ஆள் வந்து அணை போடும்படி அரசன் குடிகளுக்குக் கட்டளை யிட்டான். அரசன் கட்டளை ஊராருக்கும் அறிவிக்கப் பட்டது.

அரசன் கட்டளையிட்டபடி குடிகள் வீட்டுக்கு ஒருவ ராக வந்தனர். அனைவரும் தத்தமக்கு இட்டபடி அணை கட்டினார்கள். மதுரை நகரில் வந்தியம்மை என்று ஒரு கிழவி இருந்தார். அவர் ஒரு ஏழை. பிட்டுச் சுட்டு தினம் வாழ்க்கை செய்துவந்தார். சிவபக்தி கொண்டவர். அவர்க்கு உறவினர் எவருமில்லை. அரசன் கட்டளைப்படி அவர் வீட்டி லிருந்து அணைகட்ட ஒருவரும்வரவில்லை. என்ன செய்வார்? கூலிக்கு ஆள்வைத்து வேலைசெய்து தன் பாகத்தை முடிக்கக்

கிழவி கையில் காசில்லை. அரசன் கட்டளை எல்லோர்க்கும் ஒன்றே. கிழவி, அரசன் கட்டளைப்படித் தன் பாகத்தை நிறைவேற்றுவிட்டால் அரச நீதியை மீறின குற்றத்துக்குள்ளாவோம். சிவபிரானே! நீயே கதி என்று ஏங்கிக்கொண்டிருந்தார். சிவபெருமான் ஒரு கூலிபோல் மாறி கூடையும் மண்வெட்டியும் வைத்துக்கொண்டு கூலிக்கு ஆள்வேண்டுமா என்று வந்தியிடம் வந்து கேட்டார்.

வந்தியம்மை, கூலிக்கு ஆள்வேண்டும். ஆனால் சம்பளத்துக்குப் பதில் பிட்டுதான் தருவேன், நான் ஏழை என்றாள். ஆள், பிட்டுக்கு வேலைசெய்வதாக ஒப்புக்கொண்டார். சம்பளமின்றிப் பிட்டுக்கு மண்சுமக்க வேலையாள் எளிதில் கிடைத்தது சிவன் செயல் என்று சிவபிரானைத் துதித்தார்.

## அரசனுக்கு அறிவுறுத்தல்

அந்த ஆள் கூடையும் மண்வெட்டியும் வைத்துக்கொண்டு வைகறை யாற்றில் அணைபோடும் இடத்துக்கு வந்தார். அங்குள்ள அரச அதிகாரியிடம் தான் வந்தியம்மை ஆள் என்றும் அவர் பாகம் காண்பித்தால் அடைத்து முடிப்பதாயும் கூறினார். அரசன் அதிகாரி, அவருடைய பெயரைப் பதிவு செய்துகொண்டு வந்தியின் பாகம் பின்தங்கிவிட்டதென்றும் அதைச் சீக்கிரம் முடிக்கவேண்டுமென்றும் கூறி, அப்பாகத்தைக் காண்பித்தார். வேலையாள் அதைச் செய்வதாய் ஏற்றுக்கொண்டார். பிறகு செய்யாமல் அங்குமிங்கும் திரிந்துகொண்டு இருந்தார்.

பாண்டிய மன்னன் அணைபோடும் வேலையைப் பார்க்க வந்தான். வந்தியம்மையின் பாகம் அடையாமலிருந்ததைக் கண்டான். அதிகாரியிடம் கேட்டபோது, அதிகாரி வேலையாளர் வந்தது, வேலை செய்து முடிப்பதாய் ஒப்புக்கொண்டது முதலிய விபரங்களைச் சொல்லி அந்த ஆளைக்



**வைகையாறு உடைப்புக்கு அணை கட்டுதல்**

சிவபெருமான் வந்தியம்மைக்காகப் பிட்டுக்கு மண் சுமத்தல்

[பக் - அஎ

காண்பித்தான். அரசன், அவனிடம் போய் நீ ஒப்புக் கொண்ட பாகத்தின் வேலையைச் செய்து முடிக்காமல் திரிவதேன் என்று கோபித்துத் தன் கையிலிருந்த பிரம்பால் ஓங்கி வேலையாள் முதுகில் அடித்தான். வேலையாள் அவ்வடியை வாங்கிக்கொண்டு ஒரு கூடை மண்ணைத் தனக்குக் காண்பித்த பாகத்தில் போட்டு அணை அடைத்துவிட்டு மறைந்து போனார்.

அவ்வேலையாள்மேல் பட்ட அடி உலகில் உள்ள ஒவ்வொரு பொருள் மேலும் பட்டது. அரசன் இறைவனை அடித்து விட்டோமே என்று மனம் பதைபதைக்க அலறியழுதான். வாதவூரரிடம் ஓடினான். அவரைப் புகழ்ந்தான். செய்த பிழைகளைப் பொருத்துக் கொண்டு, இந்நாட்டைத் தாங்களே ஆளவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். ஒரு நொடிப்பொழுதில் அணை அடைத்து மறைந்து போனவர் மனிதனல்லன். இறைவன் என்று வியந்தான்.

மணிவாசகர் மறுதது ஆறுதல் கூறி அவனையே ஆளச் செய்து விடைபெற்றுத் திருப்பெருந்துறை செல்ல விரும்புற்றார். அரசனும் விடை கொடுத்தான்.

## திருப்பெருந்துறைக்குத் திரும்பவும் போதல்

மாணிக்கவாசகசுவாமிகள் மந்திரி பதவியை விட்டு விட்டார். பாண்டியனை வாழ்த்தி விடைபெற்றுக்கொண்டு திரும்பத் திருப்பெருந்துறைக்குச் சென்றார். முன்னம் குருநாதன் காட்சி கொடுத்தருளிய தலத்தைத் தரிசனம் செய்தார். முன்னம் விட்டுச்சென்ற திருப்பணியைத் திரும்பவும் செய்யத் தொடங்கினார். சுவாமிகள் அங்கு ஏற்கனவே செய்த திருப்பணிகளையும் பாண்டியமன்னனிட மிருந்துவந்த செய்திகளையும் அறிந்தவர்கள் எல்லாரும் சுவாமிகளைப் புகழ்ந்தார்கள். பலர் அடியார்களாகவும் சேர்ந்துகொண்

டார்கள். அவர்களுடன் சுவாமிகள் ஆலயதரிசனம் செய்து கொண்டு திருப்பெருந்துறையிலேயே சிலநாள் தங்கியிருந்தார். இறைவனைத் துதித்துப்பல பதிகங்கள் பாடினார். காலையில் சுவாமிகள் எழுந்து தரிசனம் செய்யும்போது சிவபெருமானும் திருப்பள்ளி எழுந்தருளவேண்டுமென்ற எண்ணங் கொண்டு,

திருச்சிற்றம்பலம்

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.

புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றேம்அவ மேஇந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமுதே பள்ளி எழுந்தரு ளாயே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினார்.

## சுவாமிகள் பல தலங்களுக்குச் சென்று பாடல்

மாணிக்கவாசகசுவாமிகள் அடியாருடன் திருப்பெருந் துறையில் பல பதிகங்கள் பாடிச் சிவபிரானைத் துதித்து

விட்டு அங்கிருந்து பல தலங்களுக்கும் சென்று சுவாமிதரிசனம் செய்து பல பதிகங்கள் பாடிக்கொண்டு திருக்கழுக்குன்றத்துக்கு வந்தார். திருக்கழுக்குன்றம் படையல் அன்னம் உண்ணும் பறவைத் தலம். இத்தலத்தில் சுவாமிகள் ஆலய தரிசனம் செய்து,

திருச்சிற்றம்பலம்

**பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு மான்உன் நாமங்கள் பேசுவார்க்**
கிணக்கி லாததோர் இன்ப மேவருந் துன்பமே துடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்து மேல்விளையாமல் என்வினை ஒத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே.

இயக்கி மாரறு பத்து நால்வரை எண்குணம் செய்த ஈசனே
மயக்க மாயதோர் மும்ம லப்பழ வல்வி னைக்குள் அழுந்தவும்
துயக்க றுத்தெனை ஆண்டு கொண்டுநின் தூய்மலர்கழல் தந்தெனைக்
கயக்க வைத்தடி யார்மு னேவந்து காட்டி னாய்க்கழுக் குன்றிலே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினார். இதைக் கேட்டு அடியார்களும் மற்றவர்களும் ஆனந்தமடைந்து சுவாமிகளைப்புகழ்ந்தார்கள். பிறகு சுவாமிகள் அடியார்களுடன் திருவுத்தரகோசமடைந்து, அங்குச் சுவாமிதரிசனம் செய்து 'கடையேனை' என்னும் பதிகம் பாடி அங்கிருந்து திருவாரூருக்குச் சென்று சுவாமிதரிசனம் செய்து பதிகம் பாடிவிட்டு ஒருநாள் தில்லைக்குச் சோலைவழியாய்ப் போகையில் அங்கு அழகுடன் பாடிக்கொண்டிருந்த குயில்களைப் பார்த்தார். அவைகளுக்குச் சிவபிரானது பேரிலக்கணங்களையும் மகிமைகளையும் உரைப்பதுபோல அடியார்கள் அறிந்துகொள்ளும்படி,

திருச்சிற்றம்பலம்

**கீத மினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்**
**பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக் கப்பால்**

சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதிகுணம் ஒன்று மில்லான் அந்தமி லான்வரக் கூவாய்.

கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயி லேயிது கேள்நீ
அந்தண ளுகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி
எந்தம ராம்இவ னென்றிங் கென்னையும் ஆட்கொண் டருளுஞ்
செந்தழல் போல்திரு மேனித் தேவர் பிரான்வரக் கூவாய்.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடினர். அடியார்கள் அனைவரும் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியவைகளைக் கேட்டு ஆனந்த மடைந்தார்கள்.

## சுவாமிகளின் அற்புதச் செயல்

சிதம்பரம் எனப்படும் தில்லையில் நடராசப் பெருமான் திருநடனமாடுகிறார். அத்திருக்கோவிலுக்குச் சுவாமிகளும் அடியார்களும் வந்து சேர்ந்தனர். சுவாமிகள் தில்லையில் திருநடனமிடும் நடராசரது திருக்கழலடிகளைக் கண்டுத் தரிசனம் செய்ய மிக்க விழைவு கொண்டார். எங்கும் நிறைந்த எம்பிரானே! தங்கள் நிசவுருவம் காண்பித்து அடியேன் மனங்களிக்கச் செய்யக்கூடாதா, என்று கைகூப்பி,

திருச்சிற்றம்பலம்

கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு களிப்பன வாகாதே
காரிகை யார்கள்தம் வாழ்விலென் வாழ்வு கடைப்படு மாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடும் ஆகாதே
மாலறி யாமலர்ப் பாத மிரண்டும் வணங்குதும் ஆகாதே
பண்களில் கூர்தரு பாடலோ டாடல் பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னுடை யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே.

சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன வாகாதே
சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனு மாயை அடங்கிடு மாகாதே
ஆசை எலாம்அடி யாரடி யோம்எனும் அத்தனை யாகாதே
செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பன ஆகாதே
சீரடி யார்கள் சிவானு பவங்கள் தெரிந்திடு மாகாதே
எங்கும் நிறைந்தமு தூறு பரஞ்சுடர் எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோன்எனை ஆள எழுந்தரு ளப்பெறிலே.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடித் துதித்தார். பிறகு சில நாள் அடியார்களுடன் அங்கேயே தங்கிப் பல பதிகங்கள் பாடிச் சுவாமிதரிசனம் செய்து வந்தார். அச்சமயம் இலங்கை மன்னன் ஒருவன் தன்னுடைய பரிவாரங்களுடனும், தன் மகள் ஊமைப் பெண்ணுடனும், பௌத்த பிட்சுக்களுடனும் சிதம்பரம் வந்தான். அவனும் அவனுடன் வந்த பிட்சுக் களும் ; சைவ சமயத்தைச் சார்ந்த சுவாமிகளுடனும் அடியார் களுடனும் வந்து பேசினார்கள். அப்போது சுவாமிகள் சைவசமயத்தின் கருத்துகளையும் மாண்பினையும் எடுத்துக் கூறித் தெரியச் செய்தார்கள். அப்போது அரசனும் பௌத்த முனிகளும் எங்களுடனிருக்கிற ஊமைப் பெண்ணைப் பேச வைத்தால் உங்கள் சமயத்தின் உண்மையை அறிவோம் என்றார்கள்.

மாணிக்கவாசகசுவாமிகள் அதைக் கேட்டு அரசே! தாங்கள் விரும்பினவிதமே பேசமுடியாத தங்கள் புதல்வி யைச் சிவபிரான் கிருபையால் பேசச் செய்வோம் என்று கூறி அடியார்கள் இன்னல்போக்கும் எம்பிரானே! பேசமுடியாத ஊமைப் பெண்ணை நின் மகிமையைக் குறித்துப் பேச வைப்பதுநின் கடமையாகும் என்று இறைவனை வணங்கி,

திருச்சிற்றம்பலம்

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலுங் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ.

அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கினையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ
அருந்தவருக் கறமுதல்நான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ.

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகத்தைப் பாடினார். பேசமுடியாத ஊமைப் பெண், சிவபிரான் கிருபையால் அவரது ஆற்றல்களை எல்லாம் விடையாகப் பாடினாள். இதைப்பார்த்த அரசனும் பௌத்த முனிகளும் சுவாமிகளின் அற்புதச் செயலைக்கண்டு ஆனந்தங்கொண்டார்கள். மன்னனும் அவனுடன் வந்தவர்களும் சுவாமிகளைப் பணிந்து சைவசமயத்தின் சத்திய நெறியைத் தெரிந்துகொண்டனர். அந்நெறியை எண்ணி வியந்தார்கள். பிறகு சைவசமயத்தை மேற்கொண்டு விடை பெற்றுச் சென்றார்கள்.

## மாணிக்கவாசகசுவாமிகளின் அந்தியகாலம்

சுவாமிகள் அடியார்களுடன் பரமசிவனைத் தரிசனம் செய்வதும் பதிகங்கள் பல பாடி அவரைத் துதிப்பதுமாக வாழ்ந்து வந்தார். அவர் பாடும் பாடலைக் கேட்ட அடியார்கள் "சுவாமிகள் கல்லும் கரையும் முறையில் சிவபெருமானைத் துதிக்கின்றார். அவர் துதியில் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் அமுதத்தை மிடறினில் அடக்கிய ஆண்டவனாகிய சிவபிரானுக்கு மாலைபோல் பொருந்தும்" என்று புகழ்ந்



சிதம்பர ஆலயம்

இலங்கை மன்னன் மகள் ஊமைப் பெண்ணை
மாணிக்கவாசகசுவாமிகள் பதிகம் பாடிப் பேசவைத்தல்.

[பக் - கூஙு

தனர். பிறகு சுவாமிகள் பரிபக்குவமடைந்து விட்டார். சிவபிரானே! இனி உலகவாழ்வே வேண்டாம். உனது திருக்கழலடிகளில் அடியேனைச் சேர்த்துக்கொள்ளும் என்று துதித்து வாழப்பத்துப் பாடினார்.

திருச்சிற்றம்பலம்

பாரொடு விண்ணாய்ப் பரந்த வெம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகேன் யார்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடலுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

பழுதில்தொல் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி யணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணைஎன நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

திருச்சிற்றம்பலம்

சுவாமிகளுக்கு அந்திய காலம் வந்ததறிந்து அடியார்களுக்கு அறிவித்து அவர்களையெல்லாம் இறைவன் திருப்பணிசெய்து ஈசன் திருவடிகளுக்குச் சீக்கிரம் சேரும்படி அருளி அவர்க்காக வளர்க்கப்பட்ட அழலில், சிவபிரானே! யான் கலந்துகொள்ளக் கிருபை புரியும் என்று,

திருச்சிற்றம்பலம்

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறிவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையும் ஓர்பொருளாக்கி நாய்ச்சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

திருச்சிற்றம்பலம்

என்னும் முத்திப் பதிகம் பாடிக்கொண்டே சிவ பெருஞ் சோதியில் கலந்து முத்தி அடைந்தார். சுவாமிகள் ஆனி மாதம் மக நட்சத்திரத்தில் ௩௨ வயதில் முத்தி அடைந்தார். மாணிக்கவாசகசுவாமிகள் மற்றவரைப் பார்க்கிலும் சிவபிரான்மீது மிக்க பக்தியுடன் அருள்கொண்டு பாடினார். அவர் பாடின பாடல்களில் அழிந்தவை போக எஞ்சியுள்ள பதிகங்கள் தொண்ணூற்று அறுபத்திரண்டு பதிகங்கள்.



## எ. பிறந்த பயன்

நாம் மண்ணில் பிறந்தது உண்ணவும், உடுக்கவும், உறங்கவும் மட்டுமல்ல. ஆதியில் நமது அறிவை விளக்கி நல்வழி காட்டின கடவுளை வணங்கி, அவர் போல நாமும் மற்ற உயிர்களுக்கு நலஞ் செய்து இனிது வாழவே பிறந்தோம்.

பிரார்த்தனை என்பது, நம்மிலும் அறிவிலும் ஆற்றலிலும் அநுபவத்திலும் மிகுந்து நமது நலத்துக்கு முதன் முதல் உழைத்த தலைவர்—கடவுளை மனத்தால் நினைத்து, வாயால் துதித்து வணங்குவதே.

கடவுளை எப்போதும் பிரார்த்தனை செய்யவேண்டும். அப்படிச் செய்ய நேரமில்லாவிட்டால் காலை மாலைகளில் கட்டாயம் பிரார்த்தனை செய்யவேண்டும். கூட்டப் பிரார்த்தனை மட்டும் வாரத்துக்கு ஒருமுறை கட்டாயம் செய்யவேண்டும்.

### சமய நெறிகள்

கடவுளையும், அவரை வணங்கும் மார்க்கத்தையும் போதிப்பதே சமயம் எனப்படும். நாம் சமயக்கொள்கைகளை அநுசரித்து நடந்தால் உலகத்தில் நல்லொழுக்கத்தையும், நல்ல சித்திகளையும் அடைந்து சிறப்பாக இன்பமுடன் வாழலாம்.

இந்நெடிய உலகில் எல்லாப் பொருள்களையும் படைத்துக் காத்து அழித்து வருபவர் கடவுள் ஒருவரே. அவரையே உலகத்தார் பல மொழியாலும், பல வழியாலும் வணங்குகின்றனர்.

உலகில் ஏற்பட்டிருக்கும் சமயங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று ஒருமை உடையவைகளா யிருக்கின்றன. ஒவ்

வொன்றும் கடவுள் உண்டென்றே போதிக்கின்றன. ஆகையால், சமயங்களில் உயர்வு தாழ்வு கூறுதற்கு இடமேயில்லை.

## அடைய வேண்டியவை

நாம் அடைய வேண்டியவை கல்வி, செல்வம், பலம், ஒழுக்கம், நடுநிலைமை, உண்மை, அன்பு, இரக்கம், ஈகை, பொறுமை, நிறைவு, ஆண்மை, துணிவு, வீரம், ஆயுள் முதலியவைகளாம்.

## வேண்டாதவை

பொய், கொலை, களவு, கள், சோரம், சினம், செருக்கு, பொறாமை, பேராசை, கோள், அச்சம், சோம்பல், பேடி தன்மை முதலியவைகள் வேண்டப்படாதவை.

## பிரார்த்தனை விடம்

பிரார்த்தனைக்கு ஆலயம் சிறந்த விடம். ஆலயமில்லா விடங்களில் பள்ளிக்கூடம், சபை, திடல், மரத்தடி, வீடு முதலிய இடங்களில் நடத்தலாம். வீடு தனி பிரார்த்தனைக்கும், மற்றய கூட்டப் பிரார்த்தனைக்கும் உகந்த இடங்களாம். குறிப்பிட்ட நாளிலும் நேரத்திலும் எல்லாரும் கூடி ஏகமனதாய்ப் பிரார்த்தனையைக் கூறி வணங்கவேண்டும். இவ்வித பிரார்த்தனையால் எல்லோருக்கும் சகோதர மனப்பான்மையும், ஒற்றுமையும், அன்பும், சுத்தமும் பெருகிக் கடவுள் அருளும் சித்திக்கும்.

## பேதம்

நாம் பிரார்த்தனை செய்யும்போதும். செய்கிற விடத்திலும் மதம், சாதி முதலிய பேதங்கள் காட்டாமல், ஒத்து வருகிறவர்களைச் சேர்த்துச் சமமாக வைத்தே பிரார்த்தனை செய்யவேண்டும்.



**மயிலை கபாலீசுரர் ஆலயம்**

உயரம்: அடிகள் ௧௨௦. சுமார் இருபது ஏக்கர் நிலத்தில் கட்டப்பட்டது. பாண்டியர் கட்டினர். பிறகு சோழர்கள் விருத்தி செய்தனர்.

[பக் - ௬௭

## சமயப் பிரவேசம்

நம் சமயத்திலிருந்து பிற சமயத்திற்குப் போய்த் திரும்ப நம் சமயத்தில் வர விரும்புவோரையும், புதிதாய்ப் பிரவேசம்செய்ய விரும்புவோரையும், ஆலயத்தில் சமயச் சடங்குசெய்து மறுபடியும் நம் சமயத்திற் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

## எல்லாச் சமயத்திலும் கடவுள்

கடவுள் ஒருவர் உண்டென்று எல்லாச்சமயங்களும் கூறுவதால், ஒவ்வொருவரும் தாம் பிறந்த சமயத்தில் இருந்து, அச்சமயக்கொள்கையை அநுசரித்தால், அருளையும், சுகத்தையும் அடையலாம். பிற சமயப் பிரவேசம் வேண்டியதில்லை.

## பிரார்த்தனை புரிவோர் விதி

ஆலயம் செல்லும்போது தேக சுத்தமாகவும், உடை சுத்தமாகவும் இருக்கவேண்டும். அங்கு வீணுரையாடல் தகாத காரியங்கள் முதலியன செய்தல் குற்றமாகும்.

ஆலயத்தில் சந்திப்பவர்களுடன் அன்பாய் உரையாட வேண்டும். அங்கு நடைபெறும் சமய உபந்நியாசங்களைக் கேட்டுப் பிரயோசனப் படுத்திக்கொள்ள வேண்டும்.

பிரார்த்தனை காலத்தில் எல்லாரும் ஏகமனதாய் உண்மையுடனும், உள்ளன்புடனும் ஒரே குரலாய்ப் பிரார்த்தனைகளைச் சொல்லி வணங்கவேண்டும்.

தாய், தந்தை, உபாத்தியாயர், புரோகிதர், பெரியோர்கள் ஆகிய இவர்களிடம் எப்போதும் மரியாதையாய் நடந்து கொள்ளவேண்டும்.

ஒரு கிராமத்தில் உள்ள ஆலயப் புரோகிதரைக் கொண்டே கலியாணம், சிரார்த்தம் முதலிய சமயச் சடங்குகளைச் செய்துகொள்ளவேண்டும்.

## புரோகிதர் கடமை

ஆலயத்தில், நல்ல படிப்பும், சமய ஞானமும், ஒழுக்கமும் உடையவர்களே அர்ச்சகரா யிருக்கவேண்டும். அவர்கள் தாய்மொழியாகிய தமிழில் பிரார்த்தனைகளைச் சொல்லி வணங்கச் சமயக் கல்வியையும், சமய உபந்நியாசங்கள் செய்து சமயத்திற் பற்றையும், சமய விருத்தியையும் சனங்களுக்கு உண்டாக்க வேண்டும். ஆலய வருமானத்திலிருந்து பள்ளிக்கூடம் ஒன்று ஆலயத்திலேயே நடத்தவேண்டும். சமய நூல்கள் செய்து குறைந்த விலையில் விற்கவேண்டும்.

கடவுள் பிரார்த்தனைக்கென்று பணஞ் சேர்த்துக் கற்பூரம் காட்டிச் சுண்டல், பிரசாதங்கள் படைத்துச் சாப்பிடுவது உண்மைப் பிரார்த்தனையாகாது. உள்ளன்புகொண்டு மனத்தால் நினைந்து வாயால் துதித்து வணங்குவதே பிரார்த்தனையாகும்.

புரோகிதர்கள் தாம் இருக்கும் ஆலயக் கிராமத்தார்களின் கலியாணம் முதலிய சமயச் சடங்குகளை முதலில் ஏற்றுச் செய்யவேண்டும்.

## நித்திய விதிகள்

சூரிய உதயத்துக்கு முன்னெழுந்து தேகத்தையும் உடையையும் சுத்தம் செய்துகொள்ள வேண்டும். சுத்தமான விடத்தில் இருந்து காலைப் பிரார்த்தனையைச் செய்யவேண்டும். பின்னர் வீட்டிலுள்ள காலை உணவை உண்டு தொழிலுக்குச் செல்லவேண்டும்.

மாலையில் வீட்டுக்கு வந்ததும் சற்று இளைப்பாறலாம். நல்ல நேயருடன் சிறிது உரையாடிக் கொண்டிருத்தல் வேண்டும். இரவு உணவு சாப்பிடுமுன் கை கால் சுத்தம் செய்துகொண்டு மாலைத் தோத்திரம் செய்தல் வேண்டும். பிறகு மிதமாய் உண்டுத் தூக்கம் வருகிற வரையில் நல்ல

நூல்களைப் படிக்கவேண்டும். அதன் பிறகு, படுக்கைக்குப் போய்க் கடவுளைத் தியானித்துக்கொண்டே நிம்மதியாய்த் தூங்கவேண்டும்.

தொழில், வாணிகம் முதலியன செய்து பொருள் சம்பாதிக்க வேண்டும். உலகம் எல்லோருக்கும் பொது. அவரவர்களின் நன்முயற்சியாலும், நற்செய்கையாலும் பொருள் சம்பாதிக்கலாம். முன்னேற்றம் அடையலாம். அப்பொருள்களால் நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் இன்பத்தை அடையலாம்.

செல்வம் உலக வாழ்க்கைக்கு அவசியம் வேண்டும். ஆண்டவன் அருள் மேல் உலகத்துக்கு வேண்டும். இது பற்றியே,

> " அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
> கிவ்வுலக மில்லாகி யாங்கு "

என்று ஆன்றோர் அருளினர். ஆகையால் திரைகடல் ஓடியாவது திரவியந்தேடி உலகில் இனிது வாழவேண்டும்.

காலைப் பிரார்த்தனை கிழக்கு நோக்கியும், மாலை மேற்கு நோக்கியும், ஆலயப்பிரார்த்தனை சந்நிதானம் பார்த்தும் செய்யவேண்டும். பூஜை சமயத்தில் வழிபடுங் கடவுளை மனத்தில் நினைத்துக் கண்ணைமூடி இருகையும் மார்புக்கு நேராய்க் கூப்பிக்கொண்டு நின்றபடி அன்புடன் பிரார்த்தனையைச் செய்யவேண்டும்.

---

## அ. வசனப் பிரார்த்தனைகள்.

### காலைப் பிரார்த்தனை.

எல்லாம் வல்ல இறைவனே!

தம்வயமுடைய என் தயாபரனே!

இக்காலை நேரமானது உயிர்களுக்கெல்லாம் உற்சாகத்தையும், மனமகிழ்வையுந் தருகின்றது. இன்று என்னுடைய காரியங்கள் யாவும் இனிது முடிய அருள் புரிய வேண்டும். எல்லா உயிர்களிடமும் யான் அன்பாய் ஒழுக வேண்டும். யான் தீயவர்களுடன் சேராமலும், தீத்தொழில் செய்யாமலும், என்னைக் காக்க வேண்டும். கல்வி, செல்வம், பலம் முதலியன பெருகி யான் மேனிலைக்கு வர அருள் புரியவேண்டும். என்றும் நித்தியமாயுள்ள என் பரம பிதாவே! யான் தங்களுக்கு எப்பொழுதும் அடிமை என்று உணர்ந்துகொண்டேன். ஆதலால், தியானிக்கின்றேன், துதிக்கின்றேன், வணங்குகின்றேன். அருட்பெருங் கடவுளே! தங்கள் பாதாரவிந்தங்களுக்கு வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

### மாலைப் பிரார்த்தனை.

எங்கும் நிறைந்த என்னப்பனே!

தம்வயமுடைய என் தயாபரனே!!

இன்று என்னுடைய காரியங்கள் எல்லாம் இனிதாய் முடிந்தன. யான் எவ்வுயிர்க்கும் கெடுதி புரியவில்லை. எவ்வித கெட்ட செயலும் செய்யவில்லை. எல்லா உயிர்களிடத்திலும் அன்பாய் நடந்து கொண்டேன். என்னையறியாமல் தீவினைகள் செய்திருந்தால் மன்னித்தருளுமாறு வேண்டுகின்றேன். கல்வி, செல்வம், பலம் பெருகி, யான் உயர்வு அடைய விரும்புகிறேன். எனக்கு எப்போதும் ஊக்கமும்

மகிழ்ச்சியும் பெருக அருள் புரிய வேண்டும். அன்பு வடிவான என் தெய்வமே! தங்களை யான் எப்போதும் மறவேன். ஆதலின் என்னை எப்போதும் காத்துவரும்படித் தங்கள் திருவடிகளைப் பன்முறை வணங்கிக் கேட்டுக்கொள்ளுகிறேன். வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## பள்ளிக்கூடப் பிரார்த்தனை

அறிவு மயமாய் விளங்கும் எங்கள் சோதியே! குருவாய் வரும் எங்கள் அப்பனே!! எல்லாக் கலைகளாயும் பிரகாசிக்கும் எங்கள் ஏந்தலே!!! எங்களைக் கல்வியில் உயரச் செய்யும். எங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் தந்தருளும். எங்களுக்கு ஓர்மையும், சகோதரப் பான்மையும் பெருகச் செய்யும். எங்களுக்குப் பலத்தையும், வீரத்தையும் கொடுத்தருளும். எங்கள் கல்வியும், எங்கள் தேசமும் மேனிலைக்கு வரச் செய்யும். எங்கள் உபாத்தியாயர், பெற்றோர், பெரியோர் முதலானவர்களும் இனிது வாழக் கிருபை புரியும். ஒளி மயமான எங்கள் தெய்வமே! தங்கள் திருவடிகளுக்குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## ஆலயப் பிரார்த்தனை

எல்லாவற்றையும் படைத்து, காத்து, அழித்து வரும் எங்கள் கருணாநிதியாகிய கடவுளே! பிறப்பும், இறப்புமில்லா எங்கள் ஆண்டவனே!! தம் வயமுடைய எங்கள் தயாபரனே!!! யாங்கள் எக்காலமும் தங்களை மறவாமல் பிரார்த்தனை செய்கிறோம். தங்களைத் தியானிக்கின்றோம், துதிக்கின்றோம், வணங்குகின்றோம். எங்கள் பாவத்தையெல்லாம் போக்கி ஆட்கொள்ளும். எங்களுக்கு மெய்ஞ்ஞானம் பெருகும்படி கிருபை புரியும். எங்களை நோய், தரித்திரம் அணுகாமல் பாதுகாரும். எங்களுக்கு ஒற்றுமையும் சமரச சன்மார்க்கமும் பெருக அருள்புரியும். எங்களுக்குக்

கல்வி யறிவு உயரச்செய்யும். எங்கள் தேசமும் நாங்களும் மேனிலைக்கு வரச்செய்யும். அன்பு வடிவான எங்கள் அப்பனே! தங்கள் திருவடிகளுக்கு வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!! (சபைக்கும் பொருந்தும்)

## காரியசித்திப் பிரார்த்தனை

கருணை நிறைந்த என் கடவுளே! இடரைப்போக்கும் எம்பிரானே!! யான் உலகில் உய்யும் பொருட்டும், உயிர்களுக்கு உதவும் பொருட்டும் இந்தக் காரியத்தை ஆரம்பிக்கிறேன். யான் தொடங்கின காரியம் சுப காரியமானதால், இப்போது இராகு முதலிய அசுப வேளையா யிருந்தபோதிலும், எனக்கு யாதொரு சங்கடமும் இன்னலும் வராமல் என் காரியம் சுபமாயும், வெற்றியாயும் முடியக் கிருபை புரியும். இக்காரியம் இனிது நடைபெற முயற்சியோடும், ஊக்கத்தோடும், உழைக்துவரச் சக்தியையும், யூகத்தையும் தந்தருளும். இக்காரியம் மேன்மேலும் விருத்தியாகி இதனால் யானும், என்னைச் சேர்ந்தவர்களும் நலம் அடைய அருள்புரியும். எல்லாக் காரியங்களிலும் சித்தியை உண்டாக்கும் சிவபிரானே! தங்கள் திருக்கழலடிகளுக்குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## தேசப் பிரார்த்தனை

நீதி வடிவான நின்மல சொரூபனே!

எங்கள் தேசமும் நாங்களும் சுதந்தரமின்றி அடிமையாய் வாழ்கிறோம். எங்கள் தேசமும் நாங்களும் தரித்திரத்திலும், தாழ்மையிலும் கிடக்கிறோம். அந்நியர் ஆளுகையால் எங்கள் சொந்தக் கல்வியும், கைத்தொழில்களும் நசுக்கப் பெற்றோம். கல்வியபிமானம், தேசாபிமானம், சமயாபிமானம் அற்றோம். சகோதர வாஞ்சை அற்றோம். இனி இதெல்லாம் உண்டாகச் செய்யும்.

எங்களுடன் இருந்து எங்களுக்கு வழிகாட்டி யருளும். யாங்கள் யூகம், பலம், வீரம் பெற்று விடாமுயற்சியுடன் உழைத்து விடுதலையடையக் கிருபை புரியும். எங்கள் உரிமைக்கும் விடுதலைக்கும் உழைக்கின்ற தேசத் தலைவர்களுக்குத் திடகாத்திரமும், நீண்ட வயதும் உண்டாகும்படி, தங்களைப் பிரார்த்திக்கிறோம். தேவாதி தேவனே! தங்கள் பாதகமலங்களுக்குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## திருமணப் பிரார்த்தனை

நித்தியகல்யாண நின்மலா!

தங்கள் கிருபையால் உயர்ந்த ஆடைகளும், கமழ் சாந்தும் அணிந்து அழகுடன் மணப் பந்தலில் வீற்றிருக்கும் மணமகன் ..................................க்கும், மணமகள் ..................................க்கும் உறவினர் நேயர்கள் சூழத் திருமணம் முடிகிறது. இவ்விருவரும் ஒரு வரையொருவர் அன்புடன் நேசிக்கின்றனர். ஆதலால், தங்கள் திருவருள் சான்றாகவும், இங்கு வீற்றிருக்கும் சபையோர் சான்றாகவும், மணமக்கள் இருவர்க்கும் மணச் சடங்கை முடிக்கிறபடியால் பொன்னொளியோனே! இவ்விருவரும் பூவும் மணமும் போல் பொருந்தி எல்லாப் பேறுகளும் பெற்றுப் பெரு வாழ்வு வாழும்படி அருள் புரியும்படி பிரார்த்தித்து இம் மங்கல்யத்தை மணமகள் கழுத்தில் கட்டும்படி மணமகனுக்குக் கூறுகிறேன்.

[எல்லோரும் செயசெய வென மலர் சொரிதல்]

## மரணப் பிரார்த்தனை

பாவநாசம் செய்யும் பரமனே!

இவ்வுயிர் உலகிற் பிறந்து அநுபவித்த இன்பமும் துன்பமும் போதும். இது பிணியால் வருந்திய சிரமமும்

போதும். இனி இவ்வுயிர் உலக ஆசையிலும், இவ்வுடலி லும் பற்றற்றுவிட்டது. பிறப்பும் இறப்புமில்லா என் ஆண்டவனே! இவ்வுயிர் அறியாமையால் மனமொழி மெய் களால் செய்த பிழைகளைப் பொறுத்து ஆட்கொள்ள வேண் டும். இதன் வாதனையைக் குறைத்து தங்களிடம் அழைத் துக் கொள்ளவேண்டும். இவ்வாத்மாவுக்கு உம்மையன்றி அடைக்கலம் புகுதற்கு வேறுகதியில்லை. அபயங் கொடுத்து ஆதரித்தற்கு வேறு தெய்வமில்லை. தாங்கள் தரிசனம் தந்து இவ்வுயிருக்கு மரண பயத்தை ஓட்டும். தங்கள் திருவடியில் இவ்வாத்மாவைச் சேர்த்துக்கொண்டு நற்கதியும் சாந்தியும் அருளும். சர்வலோக நாயகா! தங்கள் திருக்கமல அடிகளுக் குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## அடைக்கலப் பிரார்த்தனை

பிழை பொறுத்தாட்கொள்ளும் பெருமானே!
எல்லார்க்கும் இடர்தீர்க்கும் எங்கள் ஏந்தலே!!

யாங்கள் எக்காலமும் தங்களுக்கு அடிமை என்றுணர்ந்து கொண்டோம். தியானிக்கின்றோம், துதிக்கின்றோம், வந் தனஞ் செய்கின்றோம். எங்களுடன் இருந்து வாழ்ந்து இப்போது எங்களை விட்டுப் பிரிந்து போன உயிருக்காகப் பெரிதும் துக்கப்படுகிறோம். இவ்வுயிர் தன் வாழ் நாட் களில் அறியாமையாற் செய்த பிழைகளை மன்னித்து, இவ் வுயிருக்கு நற்கதியும் சாந்தியும் அருளப் பிரார்த்திக்கிறோம். எங்கள் பிரார்த்தனைக் கிரங்கி இவ்வுயிருக்கு அருள் செய்யும் இறைவா! தங்கள் திருவடிக் கமலங்களுக்கு வந்தனம்! வந் தனம்!! வந்தனம்!!!

## சிரார்த்தப் பிரார்த்தனை

பாரெங்கும் நிறைந்திலங்கும் எங்கள் பிதாவே!
பாவங்களை யெல்லாம் போக்கும் எங்கள் தெய்வமே!!

உலகத்தில் எங்களுடன் இருந்து இன்ப துன்பங்களை அநுப வித்து, எங்களை விட்டுப் பரலோகம் சென்றுவிட்ட.........
..........அவர்களுக்கு யாங்கள் மிகவும் துக்கப்படுகிறோம், அநுதாபப் படுகிறோம். அவ்வுயிர் அறிந்தும் அறியாமலும் செய்த பாவங்களை மன்னித்துத் தங்கள் பாதாரவிந்தங்களில் சேர்த்துக்கொண்டு அவ்வாத்மாவுக்கு சாந்தி அருளும்படி பிரார்த்தனை செய்கிறோம். தேவாதி தேவனே! தங்கள் திருவடிகளுக்குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந் தனம்!!!

## அநுதாபப் பிரார்த்தனை

பரங்கருணைத் தடங்கடலாகிய எங்கள் பரமனே!

யாங்கள் துக்கத்தில் மூழ்கித் தங்களிடம் ஒரு விண்ணப் பஞ் செய்துகொள்கிறோம். எங்கள் விண்ணப்பத்தைக் கேட் டருளும். எங்கள் நலங்கருதி உழைத்து இப்போது எங்களை விட்டுப் பரகதி யடைந்துபோன...........................
அவர்கட்கு யாங்கள் ஆழ்ந்த அநுதாபப்படுகிறோம். ஓ கருணைவள்ளலே! அவர் பாவங்களை மன்னித்து அவ்வாத் மாவுக்கு நற்கதியும் சாந்தியும் அருளப் பிரார்த்திக்கிறோம். எங்களை எப்பொழுதும் காத்துவரும்படியான தங்கள் திருக்கழல் அடிகளுக்குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## வருடப் பிரார்த்தனை

எங்கும் பரவொளியாகிய கடவுளே!

தங்கள் பேரருளினால் எங்கள்...............சபை... ..
..................பாடசாலை இதுவரையில் நடந்து வந்தது. இதற்கு இன்றோடு.....................ஆண்டு முடிவாகிறது.

நாங்கள் ஐக்கியத்துடனும், ஊக்கத்துடனும் உழைத்து வந்ததுபோல் நடக்கிற வருடத்துக்கும் உழைத்துவர அருள்

புரியும். எங்கள் ...................... சபை ................. பாட சாலை மேன்மேலும் விருத்தி யடைந்து வரவும்; யாங்களும், எங்களுக்கு உதவிபுரிந்து ஊக்கமளித்து வந்தவர்களும், எல்லா நலமும் பெற்று இனிது வாழவும் அருள் புரியப் பிரார்த்திக்கிறோம். எங்களை எப்பொழுதும் காத்துவரும் படியான தங்கள் திருக்கழல் அடிகளுக்குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!

## மன்னிப்புப் பிரார்த்தனை

அண்டினோர் பிழைநீக்கி ஆதரிப்போனே!

யாங்கள் தங்கள் மகிமைகளை மனத்தால் நினையாமை யாலும், வாக்கினால் துதிக்காமையாலும், மெய்யால் வணங் காமையாலும், புண்ணிய நூல்களைக் கல்லாமையாலும் வரும் குற்றங்களை மன்னிக்க வேண்டுகிறோம். பார்வையாலும், நினைவாலும், சொல்லாலும், புண்ணிய நூல்களைக் கேளாமை யாலும் வருங் குற்றங்களை மன்னித்தருளப் பிரார்த்திக் கிறோம். தீயவர்களோடு இணங்காமலும், தீவினைகளாகிய கொலை, புலை, கள், களவு, பொய், சோரம், முதலியன அணு காமற் காப்பாற்ற வேண்டுகிறோம். தங்கள் திருவடிகளுக் குப் பன்முறை வந்தனம்! வந்தனம்!! வந்தனம்!!!



# க. சித்திரை மாதம், புது ஆண்டு

சித்திரைமாதம் முதல்நாள் மிகச் சிறப்புடையது. சித்திரைமாதம் முதல் பங்குனிமாதம் வரையில் பன்னிரண்டு மாதங்களாகின்றன. இந்தப் பன்னிரண்டுமாதங்களைக் குளிர் காலம் வெயிற் காலமென இரண்டாகப் பிரிக்கலாம். சித்திரைமாதத்தில் வெயிற்காலந் தொடங்குகிறது. தாவரங்கள் முளைத்து விளைகிற காலம் அதுவே. தாவரங்கள் செழித்தால், அவைகளை உணவாகக் கொண்டு உயிர்கள் வாழும். சகல உயிர் வர்க்கங்களும் உற்பத்தியாகும். சித்திரையில் பிரமா உலகில் படைப்புத் தொழில் ஆரம்பிக்கிறார் என்று பெரியோர் கூறுவர். ஆதல்பற்றியே சித்திரை முதல் நாள் சிறப்புப் பொருந்திய நாளாகும். இதுவரையில் எத்தனை புது ஆண்டுகள் சென்றிருக்க வேண்டும் என்று பார்ப்போமானால் கலியுகம் ஆரம்பத்திலிருந்து பார்க்கவேண்டும். யுகம் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்று நான்கு வகைப்படும். உலகில் உள்ள மற்றச் சமயத்தார்க்கு இதுவரையில் ஒவ்வொரு யுகமே நடந்து வருகிறதாக அறிகிறோம்.

நமக்கு அப்படியல்ல. மூன்று யுகங்கள் சென்று, இப்போது கலியுகம் நடக்கிறது. கலியுகத்தை மற்றச் சமயத்தாரின் யுகத்துடன் ஒத்திட்டுப் பார்த்தால் நமது யுகமே பழமையானது என்பது புலனாகும். ஆண்டு என்பது காலத்தையும் வானத்தில் உள்ள சூரியன் முதலிய கிரகங்களின் போக்கையும் ஒட்டி ஏற்படுத்தப்பட்ட கால அளவை. இதிலிருந்து நம் முன்னோர் வானநூல் முதலிய பலவகைப்பட்ட அறிவியற்றுறைகளில் மிகப் பழமைப்பட்டவர்கள் என்பதை நிச்சயிக்கலாம்.

இனிப் புது ஆண்டுக் கொண்டாடும் விதம்பற்றிக் கூறுவோம். புது ஆண்டை எல்லோரும் மிக மிகப் புனித நாளாகக் கொள்ள வேண்டும். அன்று வீடு, வீட்டுப் பொருள், வியாபாரத் தலம், பள்ளிக்கூடம், கைத்தொழிற் சாலை முதலிய யாவும் சுத்தமாக வேண்டும். கூடுமானால் அலங்கரிக்கப்பட வேண்டும். மக்கள்யாவரும் உடல் சுத்தம், உடை சுத்தமாக இருத்தல் வேண்டும். கூடுமானவர்கள் புது ஆடைகள் அணிதல் வேண்டும். சிவபிரானுக்குப் பூசைகள் செய்து இனிய உணவுகள் உண்ணவேண்டும். ஆலயம், சபைகளுக்குச் சென்று புது ஆண்டுப் பிரார்த்தனை செய்ய வேண்டும். புது ஆண்டில் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குப் பரிசுகள் கொடுக்க வேண்டும். புதுப் பள்ளிகூடம், வைத்திய சாலை, தொழிற்சாலை, வாணிகம், முதலியன தொடங்கல் வேண்டும். அந்நாளில் ஏழைகள் தன்னிடம் வேலை பார்க்கிறவர்களுக்கு வெகுமதி கொடுத்தல் வேண்டும். அந்நாள் காலை முதல் மாலை வரையில் மகிழ்ச்சியுடன் கழியுமானால், அவ்வாண்டு முழுதும் இனிதாய் முடியும் என்பது கருத்து.

ஒவ்வொரு நாட்டார்க்கும் அவரவர்களுக்கு வரும் புது ஆண்டு நாட்களைவிடச் சிறந்த நாள் இல்லை. ஆதல்பற்றி அந்நாளைக் கொண்டாடி நாட்டின் நாகரீகத்தையும் பழக்க வழக்கங்களையும் காப்பாற்றிச் சிறப்படைய வேண்டும். ஒரு தேச மக்களை மதிக்கச் செய்வது, அம்மக்களின் பழமை, சமயம், மொழி, கலை ஞானங்கள் முதலிய நாகரீகங்கள் தான். ஆகையால் அவைகளைக் காப்பது மக்களின் இன்றியமையாக் கடமையாகும்.

---

## ம. சித்திராபௌர்ணமி

இனிச் சித்திரை மாதத்தில் வரும் சித்திரா பௌர்ணமியைக் கவனிப்போம். பௌர்ணமி என்பது முழுச் சந்திரன் தோன்றும் நாள். பௌர்ணமியில் உலக முழுதும் உயிர்கள் அனைத்தும் ஒளியும், ஊக்கமும், களிப்பும் அடைகின்றன. அன்று பிறப்பவர்கள் அறிவும் ஆற்றலும் உடையவர்களா யிருக்கின்றனர். சிவம் அருளுருவாய் உலக மக்கள் உய்வதற்குச் சித்திரைத்திங்கள் பௌர்ணமியில் தோன்றினர். சமயம் ஏற்படுத்தினவர்கள் எல்லோரும் பௌர்ணமியில் தோன்றினவர்களா யிருக்கின்றனர்.

சிவபிரான் தோன்றியபின் அவர் பெயர் சித்திரை மாதத்திற்கும் வழங்கி இருக்கவேண்டும். ஆண்மையும் பலமும் உடைய அரசர்களின் பெயர்கள் மாதங்களுக்கு வழங்கி வருவதும் உண்டு. சிவம், சிவபிரான், சிவசமயம், சித்தாந்தம் முதலிய பெயர்களை யொட்டியே சித்திரைக்குப் பெயர் வந்திருக்கலா மென்பதை நிச்சயிக்கலாம். மற்றுமொரு சிறப்பு என்னவென்றால், சிவாலயங்களில் பௌர்ணமி நாளில் திருவிழாக்கள் நடைபெறுவதால், பௌர்ணமி சிறப்புப் பொருந்திய நாள் என்பதை அறியலாம். ஆகவே, சித்திராபௌர்ணமியைச் சிவபிரான் தோன்றிய சிறப்பு நாளாகக் கொண்டாட வேண்டும்.

இந்த விடத்தில் அமாவாசையைப் பற்றிக் கொஞ்சம் கூறுவதும் அவசியம். பலர் அமாவாசையைப் பற்றிப் பலவிதமாகக் கூறுவதையும் கேட்டிருக்கிறோம். அமாவாசை என்பது சந்திரன் முழுதும் இருள் தன்மை அடைகிற நாள். அன்றுத் தாவர இனங்களாகிய புல், பூடு, செடி, கொடி, மரங்கள் தவிர மற்ற உயிரினங்கள் ஊக்கமும் உற்சாகமும்

அடைவதில்லை. அன்று நோயாளிகள் அரட்டலும் புரட்டலுமாகி அவதிப்படுகின்றனர். அமாவாசை கழிந்து விட்டால் நோயாளி குணமாகி வருவர் என்று கூறுவதையும், அமாவாசை தினத்தில் விதைகள் போட்டால் பழுதில்லாமல் செழுமையாக முளைகிறதென்று கூறுவதையும் கேட்டிருக்கிறோம். அமாவாசைக் கோளாறுகளால் அன்று கடல் நீர் பொங்கும். அப்போது அலைகள் அதிகமாகிப் பூமிகளில் மோதுவதால், பூமியில் உள்ள தாரை வழியாய் நிலங்கள் ஈரம் ஏறப் பெறுகின்றன. அப்போது தாவரங்கள் போதிய நீர் உண்டு செழிப்படைகின்றன. ஆனால் அந்த ஈரம் மனிதர்களுக்கு ஒத்துக்கொள்வதில்லை. குளிர்ச்சியின் போது மனிதர்களுக்கு அதிக உணவு தேவையில்லை. அச்சமயத்தில் மித மிஞ்சிய உணவுகள் உண்பதால், நோய் முதலியன உண்டாகி உடல் நலிவு அடைகின்றது. அதற்காகவே அமாவாசையில் விரதமிருந்து ஒரு வேளை உண்ணும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. நல்ல தேகிகளுக்குக்கூட அமாவாசையன்று உணவு மிகுமானால் உடலுக்கு அசௌகரியம் ஏற்படுமென்றால், நோயாளிகளுக்கு எவ்வளவு கெடுதல்கள் ஏற்படு மென்பதை அறிந்துகொள்ளலாம். நோயாளிகளுக்கு உணவு மட்டுமல்ல. உடம்பும் சூடாயிருக்க வேண்டும். அமாவாசையால் பூமி குளிர்ச்சி அடைவதால் பூமியில் வசிக்கிற நோயாளியும் சீதளம் அடைவதோடு சத்துக் குறைந்த உறுப்புகளும் வேலை செய்யாமல் நின்றுபோகின்றன. அப்போது நோயாளிகள் நோய் அதிகப்பட்டுச் சங்கடப்படுகிறார்கள். சிலர் மரணத்தையும், அடைகின்றனர். விலங்கினங்கள் கூட அமாவாசையால் இடர்ப்படுகின்றன. ஆனால் பௌர்ணமியில் தாவரம், விலங்கு, மனிதர் முதலிய சகல உயிர்களும் ஒளியும் தண்மையும் பெற்றுச் சுகத்தை அடைகின்றன.

இனிச் சித்திராப் பருவம் மற்றொருச் சிறப்புக்கொள்கை கொண்ட நாள். அன்று சிவபிரான் பக்தராகிய மார்க்கண் டரைப் பிடிக்க வந்த எமனை உதைத்து அவரைக் காப்பாற் றின நாள். மார்க்கண்டர் சிறந்த சிவபக்தர். அவர் பதினு ருண்டில் இறப்பார் என்று சோதிடம் இருந்ததால், பெற் றோர்களுக்கு, மைந்தருக்கு வயது நெருங்க நெருங்க மனக் கவலை அதிகரித்து வந்தது. அவர்கள் தங்கள் குமாரனுக்கு ஆயுள் கொடுத்துக் காப்பாற்ற வேண்டும் என்று தினமும் சிவபிரானைப் பூசித்து வந்தார்கள்.

பக்த மார்க்கண்டர், தன் ஆயுள் முடிவைப் பெற்றோர் கள் சொல்ல அறிந்தார். "பெற்றோர்களே! என் மரணம் குறித்து மனக்கவலை வேண்டாம். யான் சிவ பக்தன். எனக்கு மரண பயமில்லை. யான் எப்போதும் சிவபிரானை வணங்கி வருகிறேன். கருணை வள்ளலான அவர் என்னைக் காப்பார். சிவாயநமவென்று சொல்லுவார்க்கு அபாயம் ஒரு நாளுமில்லை" என்றார். மைந்தன் சமயஞானத்தையும் பக்தியையும் கண்டு பெற்றோர் மகிழ்ந்தனர்.

மார்க்கண்டர் மரண காலத்தை முன்னமேயே அறிந் தார். அப்போது சிவ பூசையில் இருந்தார். அவர் உயி ரைக் கவர எமன் வந்தான். அவன் பருத்த உடலும், கறுத்த நிறமும், தடித்த மீசையும், கோரைப் பல்லும், ஒரு கையில் கெதாயுதமும், மற்றொரு கையில் பாசக்கயிறும் உடையவனாய் எருமைக்கடாவின் மீது கோரப்பார்வையுடன் வந்தான். அவனை மார்க்கண்டர் பார்த்து பயந்து "ஆபத்துக்காலத்தில் ஆதரிக்கும் ஆண்டவனே! பயங்கரமான எமன்கையிலிருந்து என்னைக் காப்பாற்றும் சிவபெருமானே!! என்று துதித்துக் கொண்டே சிவலிங்கத்தைத் தழுவிக்கொண்டார்.

எமன் "சிறுவனே! உன்னுடைய ஆயுள் முடிந்தது. யான் பிடித்துக்கொண்டு போகவேண்டும். நீ பயந்துச்

சிவலிங்கத்தைத் தழுவினாலும் விடமாட்டேன். இதோ என்னுடைய பாசக்கயிற்றை வீசுகிறேன்" என்று தன் கையி லுள்ள கயிற்றை வீசி எறிந்தான். பாசக்கயிறு மார்க்கண்ட னையும் சிவலிங்கத்தையும் சுற்றிக்கொண்டது. எமன் இழுத் தான். உடனே சிவலிங்கத்திலிருந்து சிவபிரான் தோன்றினார். "எமனே! என்னுடைய பக்தனுக்கும் பாசக்கயிறு! எங்கள் மாண்பு அறியாமல் இது செய்ததற்கு இதோ உன்னை உதைத்துத் தள்ளுகிறேன் பார்" என்று காலால் உதைத்தார். எமன் வீழ்ந்தான். உடனே எழுந்தான். இரு கையும் கூப்பி "சிவபிரானே! யான் தங்கள் ஆற்றலையும் மகிமையை யும் தங்கள் பத்தர் பக்தியையும் அறியாது செய்த பிழை களைப் பொறுத்தருள வேண்டும்" என்று பணிந்துவிட்டுப் போனான்.

சிவபிரான் "மார்க்கண்டா! குழந்தாய்!! இனி மரண பயமின்றி என்றுஞ் சிரஞ்சீவியாக வாழ்வாயாக" என்று ஆசீர்வதித்து மறைந்துபோனார். மார்க்கண்டர் தன்னு டைய வழிபடுங் கடவுள் வந்து காப்பாற்றியதும் ஆசீர் வதித்ததும் மரணபயம் நீங்கியதும் அவர் மறைந்துபோன துங் குறித்து ஆனந்தமானார். பிறகு பெற்றோர்களிடம் போய் நடந்த விபரங்களைச் சொன்னார். பெற்றோர் செய்தி அறிந்து மைந்தனை மார்போடு தழுவிச் "சிவபிரான் திரு வருள் சுரந்து வந்து காப்பாற்றினார், அவரையே நாம் எப் பொழுதும் வணங்குவோம்" என்று பரம பக்தர்களாகி வாழ்ந்து பரமன் திருவடியில் சேர்ந்தனர்.

இவ்வரலாற்றால் பரமனிடம் பக்தி செலுத்தி மனிதர் தங்கள் ஆயுளை நீடிக்கச் செய்துகொண்டு உலகில் இன்ப வாழ்வை எய்தலாம் என்பதை அறியலாம்.

---



**திருவண்ணாமலை சிவாலயம்**

உயரம்: அடிகள் உ௬௭. நீளம்: அடிகள் ௭00.

ஆலயம் இருபத்தைந்து ஏக்கர் நிலத்தில் கட்டப்பட்டது. சோழ மன்னர்களால் கட்டப்பட்டது. கி. பி. ௧௧௭௮-ல் குலோத்துங்கசோழனால் பெரிதாக்கப்பட்டது.

[பக் - ௧௧௩

# கக. கார்த்திகைதீபம்

கார்த்திகைதீபம் ஆண்டுதோறும் கார்த்திகைமாதம் கார்த்திகை நட்சத்திரம் பௌர்ணமியில் சிவாலயங்களில் நடைபெறும் திருவிழா. கார்த்திகைத் தீபத்தன்று சுவாமிக்கு ஆராதனைகள் செய்வார்கள். பெரிய தகழியில் நெய்யை ஊற்றிப் பெரிய திரியிட்டு ஏற்றி அது சிவபிரானுடைய சோதிவடிவம் என்று வணங்குவார்கள். இத்திருவிழா முதல் முதல் திருவண்ணாமலையில் உள்ள ஆலயத்தில் ஏற்பட்டது. பிறகு மற்றச் சிவாலயங்களிலும் கொண்டாடப் பட்டு வருகின்றது.

## கார்த்திகைதீப வரலாறு

கார்த்திகைதீப வரலாறு அறிந்திருத்தல் நல்லது. ஒரு நாள் விட்டுணுவுக்கும் பிரமாவுக்கும் தங்கள் இருவரில் யார் பெரியவர் என்பது பற்றி வாதம் ஏற்பட்டது. விட்டுணு தாம் பெரியவர் என்றார். பிரமா தாம் பெரியவர் என்றார். வாதம் பலமாயிற்று. இந்த வாதம் தாமே பெரியவர் என்று தங்கள் மனத்தில் அகங்காரங் கொண்டதால் எழுந்தது. தன்னிலும் பெரியவர் இல்லை எனபது எதற்கு? பிறரிடம் தோல்வி அடைவதற்கே. அவ்விருவர்க்கும் உண்டான வாதம் முடியவில்லை. இருவருக்கும் உண்மையை அறிவிக்கவும், அவர்களுடைய அகங்காரக் கொள்கையை அழித்துப் புத்தி கற்பிக்கவும், இருவர் நடுவிலும் சோதிவடிவு ஒன்று பாதாளத்தையும் ஆகாயத்தையும் அளாவி நின்றது. நின்றதைப் பார்த்து விட்டுணுவும் பிரமாவும் திகைத்து நின்றனர். நாம் இருவரும் அறியக்கூடாத நம்மிலும் ஒரு பெரிய பொருள் நம்மிருவர் மத்தியில் இருக்கிறதே என்றனர்.

## அடிமுடி காணல்

அப்போது "துவக்கத்தை ஒருவரும், முடிவை ஒருவரும் நம்மில் முன் காண்பவரே பெரியவர்" என்று ஓர் அசரீரி உண்டாயிற்று. விட்டுணு சோதியின் அடி காணப் பாதாளம் போனார். பிரமா சோதியின் முடி காண ஆகாயம் போனார். விட்டுணு பன்றியாகவும், பிரமா அன்னப்பட்சியாகவும் உருவமெடுத்துப் போனார்கள் என்று புராணம் கூறுகிறது.

இருவரும் பெரிதும் பிரயாசைப்பட்டு எண்ணிறந்த தூரம் போய்ப்பார்த்தனர். இருவர் சக்தி எவ்வளவோ அவ்வளவு தூரம் சென்றும் காணாமல் அலுத்துத் திரும்பினர். இருவரும் காணமுடியாத பெரிய பரம்பொருள் ஒன்றிருக்கிற தென்பதை உணர்ந்தனர். இருவருக்கும் இருந்த அகங்காரக் கொள்கை அடங்கிற்று.

## அருட்பெருஞ்சோதியை வணங்குதல்

விட்டுணுவும் பிரமாவும், தாம்தாம் பெரியவர் என்று அறியாமல் அகங்காரங்கொண்டு வாது செய்தது பிசகு என்று அறிந்தனர். பிறகு இருவரும் தம்மிடையில் நின்ற சோதிவடிவத்தை வணங்கினார்கள். இருவரும் தம்மிலும் மிக்கவர்—பெரியவர் ஒருவர் இருக்கின்றார் என்பதை அறிந்து அவரையே வணங்கினார்கள்.

சோதிவடிவாய் விட்டுணுவுக்கும் பிரமாவுக்கும் நடுவில் நின்றவர் சிவபிரான். அப்பர்சுவாமிகள் "சொற்றுணை வேதியன் சோதிவானவன்" என்று அருளினார். இராமலிங்கசுவாமிகள் 'அருட்பெருஞ்சோதி' என்றார். இருவருக்கும் நடுவில் சோதிவடிவாய் நின்றதைக் குறித்து மாணிக்கவாசகசுவாமிகள் "பாதமிரண்டும் வினவிற் பாதாளமேழினுக்கப்பால் சோதிமணிமுடி சொல்லின் சொல்லிறந்து நின்ற தொன்மை" என்று அருளினார்.

இதிலிருந்து நாரணன் பிரமன் இந்திரன் முதலான சகலரும் தொழும் கடவுள் சிவபிரான் என்று அறிக "நாரணன் பிரமன் றெழுங் சீர்கறையூரிற் பாண்டிக் கொடுமுடி" என்று சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளினார்.

மேலே காட்டின விபரத்தோடு; சிவபிரான் சனங்களையும் முனிவர்களையும் இம்சித்து ஆட்சிபுரிந்த ஒரு அசுரனது தேரைக் கொளுத்தி அவனது கர்வத்தை அடக்கினார். அதற்கு ஒப்பாகவே சிவாலயங்களில் கார்த்திகைத் தீபத்தன்று காய்ந்த புல்களையும் இலைகளையும் கம்பம்போல் கட்டிச் சொக்கபானைக் கொளுத்துகின்றனர். இதுவன்றி வீடுகள்தோறும் கார்த்திகைத் தீபத்தன்று தீபங்கள் ஏற்றி எங்கும் ஒளிமயமாக்குகின்றனர். வெண்ணிறமான அரிசிப் பொறியைச் சிவபிரானுக்குப் படைப்பதுண்டு. நெல்லு, உமி நீங்கி அனலில் பொறிந்து கனங்குறைந்து தூயவெண்ணிறமாவதுபோல் மனிதர் சிவபிரானுடைய அருளால், பாவ இருள் நீங்க அதன் கனம் குறைந்து தூயவராக ஆவர். பலிச் சக்ரவர்த்தி சிவபிரானுக்குக் கார்த்திகைதீபத்தன்று பொறி படைத்துத் தீபம் ஏற்றி வணங்கியதனால் பாவங்கள் தீர புனிதனானான் என்றும் கூறுகின்றனர்.

இன்னும் இதன் விபரம் விரிவாய் அறிய விரும்புவோர் அருணாசலப் புராணம் படித்து அறிக. இக்கார்த்திகை தீப வரலாறு ககூஙஎ-ல் நெட்டாஷ் கிளேர்வுட்டில் இருக்கும் ஸ்ரீ சிவசுப்பிரமணியர் சுவாமி ஆலயத்தில் என்னால் செய்யப்பட்ட உபந்நியாசத்தின் சுருக்கம்.



# ௧உ. ஆருத்ராதரிசனம்

ஆருத்ராதரிசனம் என்பது ஆண்டவன் சிவபிரான் தில்லை—சிதம்பரத்தில் நடராச மூர்த்தியாய் நின்று திரு நடனம் ஆடியகோலம். இத்திருவிழா ஆண்டுகள்தோறும் மார்கழித் திங்களில் சிவாலயங்களில் கொண்டாடப்பட்டு வரு கின்றது. சிவாலயங்களில் நடைபெறும் சிறந்த திருவிழாக் களில் இதுவும் ஒன்று. உலகில் வாழும் மக்களுக்கு ஆட்டம், பாட்டு, பார்ப்பதால் கேட்பதால் ஊக்கமும் இன்பமும் உண்டாகின்றன. இதுபோலவே ஆன்மாக்களனைவரும் போகம் நுகரச் செய்து, இன்பநிலையை எய்துவிக்கும் இறை வன் சிவபிரான்; மால், பிரமன், இந்திரன், தேவர்கள், முனி வர்கள் அனைவரும் கண்டு களிக்க நடராச மூர்த்தியாய் நின்று திருநடனம் நடத்தினர் என்பது ஒரு கருத்து.

இன்னொரு கருத்து நடராசர்க்கும் காளிக்கும் நடனப் போட்டி நடந்தது. அதில் இருவருக்கும் தோற்பு கெலிப்பு இல்லாமலிருந்தது. அதையறிந்த நடராசர் தான் வெற்றி பெறவேண்டிக் காலைத்தூக்கி ஆடினார். காளி பெண்ணான படி யால் காலைத்தூக்கி ஆட வெட்கப்பட்டு நின்றாள். அப்போது சிவபெருமான் “ஆட்டத்தில் வல்லவர் நடராசர்” என்று வெற்றிப்பேர் பெற்றார். இதில் ஒரு படிப்பினை என்னவென் றால்; அக்காலத்தில் ஆணும் பெண்ணும் ஆடும் வழக்கம் இருந்திருக்கிற தென்பதை அறியலாம்.

இப்படி நடராசர் நின்று நடிக்கிற கோலத்தில் அரவங் களை அணியாகக்கொண்டும் காலின் கீழ் மனிதனை மிதித்துக் கொண்டும் கைகளில் தமருகம், அழல் வைத்துக்கொண்டும் இருப்பதன் கருத்து என்ன வென்பதைப் பார்ப்போம். இவைகளைப்பற்றித் தத்துவார்த்தங்கள் பல ஆன்றோர் கூறு



சிதம்பரத்தில் நடராசர் நடனம் ஆடும் கோலம்

[பக் - ககஎ

கின்றனர். ஆனால் பொதுப்பட மக்கள் பலர் அறிந்த கருத்துகளை மட்டும் கூறுவோம்.

நடராசர் திருநடனமாடிக் கொண்டிருக்கையில், அவர் நடனத்தைக் கலக்க விரும்பின சித்து வல்லமையுடைய சிலர், தங்கள் வல்லமையால், அரவங்களாகவும் இராட்சதர்களாகவும் சென்று அவர் நடனத்தைக் கலக்க முயன்றனர். பேராற்றலும் பேரறிவும் உடைய நடராசர் அவ்வரவங்களை ஆபரணங்களாகவும் இராடசதர்களைக் காலின் கீழும் அழுத்திக்கொண்டு தான் சிறிதும் அவர்கள் செய்கையால் பாதிக்கப்படாமல் நடனம் செய்துகொண்டிருந்தார். இதையறிந்த அனைவரும் அவரது வல்லமையைப் புகழ்ந்து பணிந்து ஆண்டவனைக் கொண்டாடினார்கள், வணங்கினார்கள்.

இனி நடராசர் கைகளில் உள்ள பொருள்களைப் பற்றிய கருத்தைக் கவனிப்போம். மேலிருக்கும் வலது கையில் தமருகம் இருக்கிறது. அதை அசைத்து ஓம் என்ற பிரணவசக்தியை உலகில் உண்டாக்கி உற்பத்தித் தொழில் செய்கின்றார். கருப்பையில் உற்பத்தி பிண்டம் ஓ என்ற வடிவாய்த்தான் இருக்கிறது. கீழ்வலக்கை மேலே காட்டிய வண்ணமிருக்கிறது. இது உயிர்களைக் காத்தல் தொழில் செய்பவர் என்பதைக் குறிக்கிறது. மேல்இடக்கையில் அழல் வைத்துக்கொண்டிருக்கிறார். அது உயிர்களை அழித்தல் செய்பவர் என்பதைக் காண்பிக்கிறது. மற்றொரு இடது கை அவர் தூக்கிய இடது காலைக் காண்பிக்கிறது. இது அவர் திருக்கழலடிகளில் சேர்வாரை ஆண்டருளுபவர் என்பதைப் புலனாக்குகிறது. வலது காலில் முயலகன் என்பவனை மிதித்துக்கொண்டிருக்கிற கோலம், இருளென்னும் பாசத்தால் மறைத்தல் தொழில் செய்பவர் என்பது குறிக்கிறது. இப்படிப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழில்களையும் ஆண்டவன்-

சிவபிரான் நடத்துகின்றார் என்பதை நடராசர் திருநடனம் நமக்கு அறிவிக்கின்றது.

சிதம்பரத்தில் சேந்தனார் என்ற ஒரு சிவபக்தர் இருந்தார். அவர் தினம் விறகு விற்று, வரும் பணத்திற்குப் பூசைப் பொருள்கள் வாங்கிச் சிதம்பரத்தில் திருநடனமாடும் நடராசர்க்குப் பூசை செய்தும் அடியார்களுக்கு உணவளித்தும் வந்தார். ஒரு நாள் உணவுப்பொருள் எங்குமே கிடைக்கவில்லை. சிவபிரானே! இன்று பூசை எப்படிச் செய்வேன்? அடியார்களுக்கு உணவு எப்படிக் கொடுப்பேன் என்று ஏங்கினார். ஏங்கிவரும் வழியில் வெறும் மாவுமட்டும் விற்கப்பட்டது. இதுவும் சிவன் செயலென்று மாவு வாங்கிவந்து பக்தியொடு களிசெய்துகொண்டு போய், ஈசனே! இன்று ஏழையேன் இடும் பூசையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று இரு கண்களையும் மூடி, இரு கைகளையும் கூப்பித் தொழுதார். விழித்துப் பார்த்தார். படையல் களியைக் காணோம். பிறகு வியந்தார். வெளியில் போய்ப் பார்த்தார். அடியார்களுக்கு ஒருவர் வந்து களி விநியோகம் செய்து தானும் உண்டுபோனார் என்றறிந்து சிவானந்தத்தில் மூழ்கினார். அந்நிகழ்ச்சி ஆருத்ரா தரிசனத்தன்று நிகழ்ந்ததால் சேந்தனார் முத்தியடைந்தார்.

அப்பர்சுவாமிகள் தில்லையில் வந்து சுவாமிதரிசனம் செய்தபோது நடராசர் நிசவுருவங் காண்பித்தார். அதைப் பார்த்து ஆனந்தமடைந்து போற்றி வணங்கினார்.

இப்படித் திருநடனம் செய்து ஆன்மாக்களை உய்விக்கும் கருத்தினைக் கொண்டதே ஆருத்ராதரிசனம் என்பது. அன்பர்கள் திருவிழாவின் திருக்கருத்தை அறிந்து இறைவன் திருவருள் பெறுவார்களாக!

# கரு. தைப்பூசம்

தைப்பூச மகோற்சவமானது தைமாசத்தில் பௌர்ணமியில் வருவதாகும். இது ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு நடத்தப்படும் உற்சவமாகும். பௌர்ணமியில் சந்திரன் முழு பிரகாசத்தையும் தருவதால், உலகில் உயிர்களெல்லாம் ஒளியடைந்து உயர்வு அடைகின்றன. பௌர்ணமியில் செய்யப்படும் காரியங்கள் மாண்படையும். அத்தினத்தில் பிறந்தவர்களும் மாண்படைவார்கள் என்பது ஆன்றோர் கருத்தாம். ஆதல்பற்றி அச்சிறப்புநாளில் புகழும் பராக்கிரமும் உடைய சுப்பிரமணிய சுவாமியைக் கொண்டாடுகின்றனர்.

## ஸ்ரீ சுப்பிரமணியர்

சுப்பிரமணியர் சிவபிரானுக்கும் சிவகாமியம்மையாருக்கும் பிறந்த திரு மைந்தராகும். இவர் உக்கிரபாண்டியன் எனவும் படுவார். இவருக்கு நிகண்டு நூலார் ருக பெயர்கள் கொடுத்திருக்கின்றனர். இதனால் அவரது புகழ் அறியலாம். விபரம் விரிவாய் அறிய விரும்புவோர் கந்தபுராணம் படித்துத் தெரியலாம்.

உலகில் நாம் தெரிந்தோ தெரியாமலோ நடப்பதால் வறுமை, துன்பம், நோய் முதலியவைகள் ஏற்படுகின்றன. அவைகள் எப்படி நம்மால் உண்டாயினவோ அப்படியே நம்மால் நிவர்த்தி செய்து கொள்ளவும் இயலும். இருந்தும் நமக்குத் தலைமையாயுள்ள தெய்வத்துக்குப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம். இதுபோலவே சுப்பிரமணியக் கடவுளின்மீது பிரார்த்தித்துக் கொண்டவர்கள் யாவரும் கூடித் தைப்பூசத்தன்று பிரார்த்தனைகளைச் செலுத்துகிறார்கள்.

சுப்பிரமணியருக்குப் பிரார்த்தித்துக் கொண்டவர்கள் யாவரும் தைப்பூசம் வருவதற்குமுன் தாம் கோரிக்கொண்ட நாள்கள் வரையில் உபவாசமிருந்து ஒருவேளை மரக்கறி உணவு சாப்பிட்டுப் பக்தியா யிருப்பர்.

இப்படிச் சுப்பிரமணியர்மீது பிரார்த்தித்து உபவாச மிருந்தவர்கள் தைப்பூசத்தன்று புரோகிதருடன் ஆலயத் தருகில் உள்ள ஆற்றங் கரையிலாவது கிணற்றுக்கருகி லாவது பற்பல காவடிகள் அலங்கரிக்கின்றார்கள். பின்பு பிரார்த்தனைக்காரர்கள் குளித்துக் காவி உடையுடன் விபூதி, உருத்திராட்சம் முதலிய சிவசின்னங்கள் தரித்துப் பக்தி யுடன் நின்றுகொண் டிருக்கிறார்கள்.

அப்போது புரோகிதர் சுப்பிரமணியக்கடவுள்மீது தோத்திரங்களைப் பாடுகின்றார். அவர்க்கு உதவியாக மற்ற வர்களும் பாடுகின்றனர். அத்தோத்திரங்களைக் கேட்கக் கேட்க பிரார்த்தனைக்காரர்களுக்குத் தன்னை மறந்து பரவசம் ஏற்பட்டு மருள் வருகிறது. பக்தி குறைவானவர்களுக்குச் சீக் கிரம் மருள் வருவதில்லை. அவர்களுக்கு அலகு தாள்பூட்டு கள் போடுவதில்லை. இவ்விதம் மருள் வந்தபிறகு நாவலகு போடுகிறவர்களுக்கு நாவலகும், தாள்பூட்டுப் போடுபவர் களுக்குத் தாள்பூட்டும், பாதரட்சை போடுபவர்களுக்குப் பாதரட்சையும் போடுகிறார்கள். அதன்பின், தூபதீபாரா தனை ஆனதும் காவடிகளைப் புயமீதுகொண்டு மருள் உள்ள வர்களை ஒருவர் அல்லது இருவர் காத்துக்கொண்டு ஆலயம் வந்து சேருகின்றனர். பிறகு சுப்பிரமணியர் சந்நிதானத்தி லுள்ள விபூதியைத் தெளித்து நாவலகு தாள்பூட்டு முதலிய வைகளை எடுத்து விடுகிறார்கள். அப்போது பிரார்த்தனைக் காரர்கள் மருள்நீங்கி பழைய நிலையாகின்றனர். பின் காவடி களில் கொண்டுவந்த பொருள்களால், சுவாமிக்கு ஆராதனை கள் நடத்துகின்றனர்.

## மருள்

இனி, மருள் அல்லது சுவாமி ஆடுபவர்களைப்பற்றிக் கூறுவோம். மருள் என்பது மயக்கம், பக்தி, ஞானம் எனப்படும். பிரார்த்தனைக்காரர்கள் சாதாரண மயக்கத்தில் இல்லாமல் பக்தியில் இருக்கின்றனர். ஒரு வைத்தியர் நோயாளி ஒருவரை சம்மோகினி மருந்தைக் கொடுத்து அவரை மயக்கி அறுத்துக் குணப்படுத்துதல்போல புரோகிதர் சுப்பிரமணியர்மீது துதிகள்பாடி பக்தரைப் பரவசமடையச் செய்கின்றார்.

இவ்விதமான மருள் எல்லார்க்கும் வராது. உலகில் மனிதர் மெல்லின சித்த முடையவரென்றும் கடினசித்த முடையரென்றும் இரு பிரிவினர் இருக்கின்றனர். கடின சித்தமுள்ளவர்களுக்கு ஒரு காரியத்தில் எளிதில் பற்று ஏற்படாது. அவர்கள் மனதை மற்றவர் மாற்ற முடியாது. மெல்லின சித்தமுடையவர்களோ ஒன்றில் சீக்கிரம் பற்றுதல் வைப்பார்கள். அவர்களை மற்றவர்கள் எளிதில் இணங்கச் செய்வார்கள்.

காவடி எடுப்பவர்கள் பெரும்பான்மையோர் மெல்லின சித்த முடையவர்கள். நாமெல்லாம் சுப்பிரமணியர் தெய்வம் என்பதை அறிந்திருக்கின்றோமாயினும், காவடி எடுப்போர்களுக்கு இருக்கும் பக்தி அதிகம். இதுவொன்றே அவர்கள் மெல்லின சித்தமுடையவ ரென்பதற்குச் சான்றும். மருள் வந்தவர் தம் மனதை உடலிலிருந்து பிரித்துத் தாம் பற்றுக் கொண்ட தெய்வத்தின்மீது வைக்கின்றனர். உடலிலிருந்து மனம் முழுதும் பிரிந்ததும் தேகம் ஆடுகிறது. அப்போது அவருடைய கண்ணுக்கு அவரைச் சுற்றிலுமுள்ள பொருள்கள் தெரிவதில்லை.

இதைத்தான் மருள் என்றும், சாமி என்றும் கூறுகின்றனர். இவ்விதம் மருள் வந்தபின் நாக்கில் வேல்குத்துதல்,

தாள்பூட்டுப் போடுதல், உடம்பில் அலகுகள் தைத்தல், பாதரட்சை போடுதல் இவைகளைப் பார்ப்போம். மருள் வந்தபின்பு, இதெல்லாம் செய்தால் நோய் தெரியாது. நோயை அறியும் மனம் மருள் வந்தபின் உடலிலிருந்து பிரிந்துபோய் பற்றுள்ள தெய்வத்தின் மீது பதிந்து இருப்பதால் நோய் அவர்களுக்குத் தெரிவதில்லை. நோயை அறிவது மனம், உடலல்ல. உதாரணமாக அப்பர்சுவாமிகளை மகேந்திரவர்மன் என்ற அரசன் சுண்ணும்பு அறையில் போட்டான். அப்பொழுது அவருடைய மனம் சிவத்தின் மீது பொருந்தியிருந்தது. அதனால் அவருடைய உடலுக்கு நேர்ந்த உபத்ரவம்தெரியாது ஆனந்தமாக இருந்தார் என்பது அவர் பாடிய "மாசில் வீணையும்" என்ற துதியால் தெரிகிறோம்.

## காவடி உற்பத்தி

இனிக் காவடி எடுக்கும் வழக்கம் எப்படி வந்ததென்பதைப் பார்ப்போம். சூரபத்மன் என்பவன் அநேக வரப்பிரசாதங்களைப் பெற்று ஆயிரத்தெட்டு ஊர்களை ஆண்டு வந்தான். அவன் மனிதர்களையும் தேவர்களையும் துன்புறுத்தியும் சிறையிலிட்டும் வந்ததைப் பொறுக்கமுடியாமல் அவர்கள் போய்ச் சுப்பிரமணியசுவாமிகளிடம் விண்ணப்பஞ் செய்து கொண்டனர். அவர் அவர்களுடைய துன்பங்களைத் தீர்ப்பதாய்க் கூறி அனுப்பிய பிறகு படையெடுத்துப் போய்ச் சூரனை வதைத்து, வருந்துபவர்களை மீட்சி செய்தார். அவர்களால் புகழப்பட்டார்.

சூரபத்மன் முதலிய வீரர்களுக்குப் போர்முறைகளை இடும்பாசூரன் கற்பித்துவந்தான். அவன் இராணுவ அறிவில் தேர்ந்தவன். தன்னிடம் கற்ற சூரன் முதலியவர்கள் முருகனது வேலுக்கிரையாகி மாண்டதைக் கண்டு வருந்தி இனி

என் இராணுவ வல்லமை முருகனுடைய பராக்கிரமத்துக்கு இணையாகாது. போர் கற்பிக்கும் தொழிலைவிட்டுச் சுப்பிரமணியரைப் போற்றுவேன் என்று அகத்தியரிடம் வந்து பணிந்து தனது நோக்கத்தைத் தெரிவித்து முருகனை வணங்கும் மூலமந்திரங்கள் போதிக்க வேண்டினன்.

அகத்தியர் ஸ்ரீசுப்பிரமணியரிடம் தமிழைக்கற்று வல்லவராகித் தமிழ் ஆசிரியரானவர். அவர் இடும்பனது பக்குவநிலை கண்டு மகேந்திர மலையிலுள்ள சுப்பிரமணியர் வடிவங்களைக் கொணர்ந்தால் போதிப்பதாய்க்கூறினர். இடும்பன் அதைக்கேட்டு அவரிடம் விடைபெற்றுக்கொண்டு மகேந்திர மலைக்குப்போனன். அங்கே இரு சிகரங்கள் கிடைத்தன. அதைச்சுளுவாகக் கொண்டுபோகவேண்டி ஓர் உபாயஞ் செய்தான். மூங்கில் ஒன்றை வெட்டி வளைத்து அதில் பக்கத்துக்கொன்றாகக் கட்டித் தூக்கிக்கொண்டு அகத்தியரிடம் வந்தான். அகத்தியர் அதைப் பெற்று இடும்பாசூரனுக்கு முருகனை வணங்கும் முறையை போதித்தார். அதிலிருந்து அவன் சுப்பரமணியர்மீது பற்றுக்கொண்டு கடைசியில் முத்தியருளப் பெற்றான்.

## காலமும் இடமும்

இச்சம்பவம் நடந்தகாலமும் இடமும் கூறுவோம். இடும்பாசூரனுக்கு அகத்தியர் சுப்பரமணியர்ஞானம் கற்பித்தது சூரசம்மாரத்தின் பின்பாதலால், இடும்பன் காவடி எடுத்தது இரண்டாம் தமிழ்ச்சங்கத்தின் இடைகாலத்திலாகும். சுப்பிரமணியர், அகத்தியர், சூரபத்மன், இடும்பாசூரன் ஆகியவர்கள் ஒரு காலத்தவர். இது நிகழ்ந்தது தென்னிந்தியாவில் உள்ள பழனிமலை. முருகன் உறைவிடம் மலைநாடென்று தொல்காப்பியர் கூறுவதாலும் அருணகிரிநாதசுவாமிகளும் "பழனி மலைதனிலமர் பெருமாளே" என்று

கூறுவதாலும் பழனியில் தைப்பூசம் விமரிசையாய் நடை பெறுவதாலும் தைப்பூசம் முதலில் நிகழ்ந்தது பழனி யென் பதை யறிக.

## காவடிகளின் வகை

காவடிகள் பலவகைப்படும். பால் காவடி, பன்னீர்க் காவடி, விபூதிக்காவடி, அன்னக்காவடி முதலியன. இக்காவடி களில் பிரார்த்தனைக்காரர்கள் கொண்டுவரும் பொருள்க ளெல்லாம் சுப்பிரமணியர்க்கு அர்ச்சனைக்கும் ஆராதனைக்கும் உபயோகப்படுபவைகளாம். பாலால், பன்னீரால், விபூதியால் சுவாமியை அர்ச்சித்தபின் அபிஷேகம் செய்த அன்னத் தைப் படைத்து அடியார்களுக்கிடுவர்.

கடைசியாக அலகு தரித்துக் காவடி எடுப்பவர்களைப் பார்ப்பதால் என்ன அறிகிறோம் என்பதைப் பார்ப்போம். அவர்களைப் பார்ப்பதால் சாதாரண சனங்களுக்கு ஒருவித தெய்வபக்தி ஏற்படுகிறது. அதோடுகூடக் காவடி எடுப்பவ ரின் பக்திவலிமையும் தெரிகிறது. மேலும் அவர்க ளுடைய உடலையே அர்ப்பணஞ் செய்து அவர்கள் பிரார்த் தனையை முடிக்கின்றனர் என்பதையும் அறியலாம்.

(இது டர்பன் வாலிப வைதிக சபையில் ககூஙுஙு-ல் என்னால் உபந்நியாசிக்கப்பட்டது.)



## கச. சிவராத்திரி

சிவராத்திரி, ஆண்டுதோறும் மாசிமாதம் சிவாலயங்களி லெல்லாம் கொண்டாடப்படும் திருவிழா. இதைப்பற்றிப் பல தத்துவார்த்தங்கள் பெரியோர்கள் கூறுகின்றனர். ஒரு சமயம் பெருவூழியால் உலகமே அழியும்போ லிருந்தது. அப்போது சிவபிரானைச் சிவகாமியம்மையார் பூசைசெய்து பணிந்து உலகத்தையும், அதில் வாழும் உயிர்களையும் காக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பிரார்த்தனைக்கிரங்கி இறைவன் உயிர்கள் அழியாமற் காப்பாற்றினார். அங்ஙனம் அம்மையார் செய்த பூசையே சிவராத்திரி எனப்படும்.

ஒருசமயம் விட்டுணு, பிரமா, தேவர், முனிவர், அசுரர் முதலியவர்கள் கூடி திருப்பாற் கடலில் மேருமலையை மத்தாகவும், வாசுகி என்ற அரவத்தைக் கயிறாகவும் கொண்டு, ஒருபுறம் தேவர்களும் மற்றொருபுறம் அசுரர் களும் நின்று இழுத்து அமிர்தங் கடைந்தனர். அப்போது வாசுகி அரவம் துன்பம் தாளமுடியாமல் நஞ்சைக் கக்கி விட்டது. அந்நஞ்சு அமிர்தத்தைக் கெடுத்து, அங்குள்ள வர்களையும் உலகத்தையுமே அழிக்கும் கொடிய பொரு ளாயிற்று. இதைக்கண்டு நஞ்சை அடக்கி அழிவைத் தடுப்பார் எவரும் அங்கிருப்பவர்களில் முன்வரவில்லை. எல் லாரும் நஞ்சைக்கண்டு நடுங்கினார்கள். அங்கிருந்தவருள் சிவபிரான் பேராற்றல் கொண்டவர். ஆனதால் உடனே அந் நஞ்சை உண்டு அங்கிருப்பவர்களையும் உலக அழிவையும் காப்பாற்றினார். சிவபிரானுடைய ஆற்றலை அறிந்த நாரணன், பிரமன் முதலிய சகலரும் சிவபிரானே முதல்வர், பேராற் றல் உடையவர் என்று போற்றிப் பணிந்தார்கள்.

நாயன்மார் நால்வரும் சிவபிரான் கடலில் நஞ்சுண்டதைக்குறித்துப் புகழ்ந்து பாடியுள்ளனர். சம்பந்தசுவாமிகள் "கடறினிலமுதொடு கலந்த நஞ்சை மிடறினிலடக்கிய வேதியனே" என்று பாடினார்.

சிவாலயங்களில் சிவராத்திரி பூசையை முதல் சாமம், இரண்டாம் சாமம், மூன்றாம் சாமம், நான்காம் சாமம் என நான்கு பாகங்களாகப் பிரித்துக் கொண்டாடுகின்றனர். நான்கு சாமங்களிலும் சிவபிரானுக்குப் பூசைகள் நடத்துகின்றனர். முதல் சாமம் பூசைக்குத் தாமரைப் பூ, பொங்கல் செய்து வைத்து பூசைசெய்கிறார்கள். இரண்டாம் சாமம் பூசைக்குத் துளசி இலைகொண்டு இனிப்புப் பொருள் வைத்தும் பூசைசெய்கிறார்கள். மூன்றாம் சாமம் பூசை வில்வ இலைக் கொண்டு மாவுப் பொருள்வைத்துப் பூசை செய்கிறார்கள். நான்காம் சாமம் பூசை நீலதாமரைப் பூக்கள் கொண்டு எளிய உணவுப்பொருள்கள் வைத்துப் பூசை செய்கிறார்கள்.

ஒரு காலத்தில் கொலைத்தொழில் செய்துகொண்டிருந்த வேடன் ஒரு நாள் வேட்டைதேடி நாள்முழுதும் ஒன்றும் கிடைக்காமல் அலுத்துப்போனான். அவன் காட்டில் அதிக தூரம் போனதால் இரவாய்விட்டது. சீக்கிரம் வீட்டிற்குத் திரும்பமுடியாது. அக்காட்டில் கீழே படுத்துறங்கினால் கொடிய விலங்குகள் கொன்றுவிடுமென்று அங்குள்ள ஒரு வில்வமரத்தில் ஏறி உறங்கினான். அப்போது கொடிய விலங் கொன்று மனிதமோப்பமறிந்து கீழே வேடன் இறங்கினால் கொன்றுதின்னக் காத்துக்கொண்டிருந்தது. அவன் இலைகளைப் பறித்து உருட்டி எறிந்து விலங்கை வெருட்டினான். அவ்விலைகள் அருகில் உள்ள குளத்தில் விழ, நீர்த் துளி கரையில் உள்ள சிவலிங்கத்தின்மீது பட்டது. அச்சம்பவம் நடந்தது சிவராத்திரியானதால் அவன் சிவபிரான் அருள்பெற்று, அன்றுமுதல் கொலைத்



**காஞ்சீபுர சிவாலயம்**

உயரம்: அடிகள் ௧௮௮. கரிகாற் சோழனுக்குமுன் கட்டப்பட்டது கரிகாலன் புதுப்பித்துப் பெரிதாக்கினான். பங்குனிஉத்திர ஐதீகம் இக்கோவில் கோபுரத்தில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

[பக் - ௧௨௭

தொழிலை விட்டுச் சிவபிரானைப் பணிந்து, ஈற்றில் முக்தி அடைந்தான்.

இதனால் பாவஞ்செய்தவர்களானாலும் தங்கள் பாவந் தொலையச் சிவராத்திரி பூசை நடத்திச் சிவபிரானை வணங்குவார்களானல், அவர்களது பாவம் நீங்கிச் சன்மார்க்கர்களாகிச் சிவபிரான் அருள்பெற்று உலகில் இனிய வாழ்வும் இறுதியில் முக்தியும் அடைவார்கள் என்பதைச் சிவராத்திரி பூசையின் வரலாற்றால் அறியலாம்.



## கரு. பங்குனி உத்திரம்

ஆண்டுகள் தோறும் பங்குனி மாதத்தில் சிவாலயங்களி லெல்லாம் பங்குனி உத்தரத்திருவிழா நடக்கின்றது. இந்தத் திருவிழாவின் வரலாறு மிகவும் முக்கியமானது.

சிவபிரான் ஆதியில் மனித வடிவாய்த் தோன்றி அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் உலகில் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் செய்து காண்பித்தார். அவற்றில் ஒன்று அவர் தடாதகை—சிவகாமியம்மையாரைத் திருமணம் செய்தது. அது பங்குனி உத்தரம் பௌர்ணமியில் நடந்தது. சிவகாமியம்மை என்ற பெயர் சிவபிரானை மணந்ததால் வந்தது என்பதறியலாம்.

சிவகாமியம்மைக்கு உமை, மீனாட்சி, சத்தி, மகேசுவரி முதலிய பல சிறப்புப் பெயர்கள் இருக்கின்றன. அம்மையார் மலையத்துவசபாண்டியன் மகள். சிவபிரானைப் போலவே அறிவும், பலமும், அழகும், ஆட்சி நடத்தும் ஆற்றலும் உடையவர். அம்மன் மதுரையை ஆண்டவர். அம்மையார் திருமணம் நடக்காமுன் குமரிக்கண்டம் ஆண்டதால் அக்கண்டத்திற்குக் குமரிக்கண்டம் என்ற பெயர் வந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியில் புலனாகிறது. அம்மன் ஆட்சிக்குவந்த தினம் ஆடி மாதம் பௌர்ணமி என்று தெரிகிறது. ஆதல்பற்றியே அம்மன் திருவிழா ஆடி மாதத்தில் நடைபெறுவது வழக்கமா யிருக்கிறது.

அம்மன் ஆட்சிபுரிந்து மேலும் ஊர்கள் காணவும் அவைகளைப் பிடித்து ஆட்சிபுரியவும் திக்குவிசயம் போனபோது சிவபிரான் தென்பட்டார். இருவரும் மதுரைக்கு

வந்து திருமணம் நடத்திக்கொள்ள ஏற்பாடு செய்து கொண்டனர். அப்படியே பங்குனி உத்திரத்தில் திருமணம் நடந்தது. சிவபிரான் திருமணத்திற்குப் பிறகு சோமசுந்தரபாண்டியனுகத் தென்பாகத்தை ஆண்டிருக்க வேண்டும். இதன் விரிவு திருவிளையாடற் புராணம் படித்தறிக.

ஆதாரம் :—"தென்னவனுபுல காண்ட" என்று சுந்தரமூர்த்திசுவாமிகளும் அருளினுர். சிவபிரான் மனித உய்வுக்கு வழிகாட்டத் திருமணம் நடத்தினதால், ஆணும் பெண்ணும் அவசியம் மணம் செய்துகொண்டு வாழ்வதே உலகில் இயற்கையாய் அடையும் இன்பமென்று அறியலாம். "இருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ" என்று மாணிக்கவாசகர் கேள்விக்கு ஊமைப்பெண் பதில் கூறினது அறிக.

இது தவிரப் பங்குனி உத்திரத்தன்று வேறு சம்பவம் நடந்த சரித்திரமும் உண்டு. சிவபிரான் சிவயோகத்திலிருந்தார். அந்த யோகத்தைத் தாருகாசுரன் கலைக்க எண்ணினுன். அதற்காக அவன் மன்மதன் என்பவனை ஏவினுன். மன்மதன் வில் வித்தைக்காரன், அழகன். அவன் மனைவி பெயர் இரதி. இருவரும் அழகே உருவாய் வந்தவர்கள். காதல் தெய்வங்கள். தூய காதலை விரும்புகிற ஆண்களும் பெண்களும், இரதி மன்மதனைப் பூசிக்கிறுர்கள். சிவபிரான் ஆற்றல் அறியாது மன்மதன் தாருகாசுரன் பேச்சைக் கேட்டுத் தன் வில்லால் அவர்மீது மலர் பாணத்தை ஏவினுன். மலர் ஈசன்மீது விழுந்ததும் யோகம் கலைக்கப்பட்டுக் கண் விழித்துப் பார்த்தார். அவருடைய கோப அழலால் மன்மதன் எரிந்து சாம்பலானுன்.

மன்மதன் மனைவி இரதி தன் உயிருக்கு உயிராயிருந்த காதலன் எரிந்து சாம்பலானதைக் கண்டு அழுதாள்,

அலறினாள். "என் ஆருயிர் நாதா இனி உன்னைவிட்டு எப்படி உயிர் தரிப்பேன். எவ்விதம் தனியாய் வாழ்வேன்" என்று பரிதபித்தாள். ஆண்டுக் கணக்காய் அழுதாலும், மோதிக் கொண்டாலும் உலகில் மாண்டவர் வருவதில்லை. என்செய் வாள் இரதி? சிவபிரானைப் பிரார்த்திப்பதைவிட இரதிக்கு வேறு வழியில்லை. "சிவபெருமானே! இன்னல் படுவோர் மீது இரக்கங் கொள்வோனே!! என் விண்ணப்பங் கேட்டுத் துயர் தீர்த்தருள வேண்டும். என் கணவன் அறியாது செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும்" என்று வணங்கினாள். பிரார்த்தனைக் கிரங்கும் பெருமான் "பெண்ணழகியே! உன் கணவன் உன் கண்ணுக்கு மட்டும் தெரிவான். அவனுடன் நீ சுகித்திருப்பாயாக" என்று அருளினார். இதிலிருந்து காதலின் உயர்வும் அதன் நுகர்ச்சியும் காதலர் மட்டுமே அறிவார்கள் என்பது புலனாகிறது.

இப்படிப் பங்குனி உத்திரத்தன்று வேறு சில சரித்திரங்கள் கூறுவதுமுண்டு. ஆனால் முக்கியமாய்ச் சிவாலயங்களில் திருக்கலியாணத் திருவிழா நடைபெறுவதே வழக்கம்.



## கசு. உருவ வணக்கம்

இக்காலத்தில் நம் சமயம்பற்றியும் நாம் வணங்குகிற உருவவணக்கம் பற்றியும் வேறு மதத்தினர் சிலர் சில சமயம் பல கேள்விகளைக் கேட்கின்றனர். நமக்குள் மதக் கல்வியும் போதனையும் குறைந்திருப்பதால் நாம் மதக் கொள்கைகள் தெரியாமல் பிறமதத்தார் கேள்விக்குத் தக்க பதில் கூறமுடியாமலிருக்கிறோம்.

நாம் நம்முடைய மதக்கொள்கைளை அறிவோமானால் பிறசமயத்தார் கேள்விக்குப் பதில் சொல்லி அவர்களைத் தெளிவுபடச் செய்யலாம், நாமும் நம் சமயமும் உயர்வு அடைவோம்.

உலகில் பலசமயங்கள் இருக்கின்றன. அவைகள் யாவும் கடவுள் இருக்கிறார் என்று கூறுகின்றன. கடவுள் ஒருவர் இருக்கின்றார் என்று ஒப்புக்கொண்டபோது அவருக்கு உருவம் ஒன்று உண்டு என்பது நிச்சயமாகிறது. இந்த முறையில் நாம் பார்ப்போமானால் உலகில் உள்ள சமயங்கள் எல்லாம் உருவவணக்கம்-விக்கிரக ஆராதனை செய்கின்றன. விக்கிரக ஆராதனையிலிருந்துதான் மனிதர்க்கு அருவவணக்கம் உண்டாகிறது என்பதை அறியலாம்.

சர்வலோகங்களையும் அவற்றில் உள்ள எல்லா சீவராசிகளையும் படைத்துக் காத்து அழித்துவரும் ஆண்டவனை வணங்கி நல்வழி அடைதற்கு உருவவணக்கம் சுளுவான வழியாகும். இதை அறிந்து பூர்வகாலம் முதற்கொண்டே, கோவில்கள் கட்டி அவற்றில் உருவங்களை வைத்து உருவ வணக்கம் செய்துவரத் தொடங்கினார்கள். சாதாரணமனிதர் முதல் உயர்ந்தஞானிகள் வரையில் உருவவணக்கத்தை அநுசரித்தவர்களாவர்.

இதை அறியாது சிலர் கல்லேயும் கட்டையையும் படத்தையும் கும்பிடுகின்றனர் என்று கூறுகின்றனர். கடவுள் எங்கும் உள்ளவர் என்று முன்னோர் கூறியிருக்கின்றனர். பாலில் நெய்யும், பூவில் மணமும் பொருந்தி யிருப்பது போல் கடவுளும் அவரது சக்தியும் உலகமெங்கும் எல்லாப் பொருள்களிலும் எல்லாச் சீவராசிகளிலும் கலந்திருக்கின்றன. இப்படி எங்கும் நிறைந்த இறைவன் சக்தி தூசிலும், துரும்பிலும், சொல்லிலும், சத்தத்திலும், கல்லிலும், கட்டையிலும் இல்லாமல் போகுமோ.

## கடவுள் எங்கும் இருக்கின்றார்

கடவுள் கல்லிலும் கட்டையிலும் தடையின்றியிருக்கின்றார். கண்ணப்பருக்கும், மார்க்கண்டருக்கும் கல்லினின்று வந்தே காட்சி கொடுத்திருக்கின்றார். பிரகலாதனுக்குக் கட்டையினின்றும் பிளந்துகொண்டு வந்து காட்சி யருளியிருக்கிறார். கடவுள் எல்லாப் பொருள்களிலும் இருப்பதால் மனிதர் எதை வேண்டுமானாலும் வணங்கலாம். ஆனால், எதையும் வணங்கலாம் என்றால், அங்குமிங்கும் கிடக்கும் கற்களையும், கட்டைகளையும் வணங்கலாமாவென்று சிலர் கேட்கலாமாதலால், அப்படியன்று, எப்பொருளைக் கண்டால் இவை கடவுள் என்ற எண்ணமும் பக்தியும் ஏற்படுகிறதோ, எப்பொருள்முன் நமது மனம் உருகி புனித உணர்ச்சி பெறுகின்றதோ அப்பொருளே வணங்குதற்குரியது. மேலும் அப்பொருள் முதன்முதல் கடவுள் உரு ஆகிறவரையில் ஆக்கப்பட்டவருக்கு இது கடவுள் உரு என்ற எண்ணம் ஏற்பட்டதாயிருக்கும். பின்னர் மந்திர உச்சாடணத்துடன் நிலேபடுத்தியதாயுமிருக்கும். பல ஆன்றோர்கள் அதைத்தரிசித்து அதில் ஒருவித ஆன்ம சக்தி பதிக்கப்பட்டதாயுமிருக்கும். ஆதல்பற்றியே அதனைத்

தரிசிப்போர் ஒருவித புனித உணர்ச்சி பெறுகின்றார் என்பதை யறிக. ஆகையால், அப்பேர்ப்பட்ட பொருளையே விக்கிரகமாகவும், கடவுளாகவும் வணங்கவேண்டும். வணங்குகையில் நம்பிக்கையும் அன்புங்கொண்டு வணங்கவேண்டும். கடவுள், பக்தி வலையிற் படுபவர். நினைத்தவிடத்தில் நினைத்தபோது தென்பட்டு ஆண்டருளுவர்.

## கடவுள் சோதிவடிவானவர்

இப்படி எங்கும் நிறைந்து எல்லாம் செய்யவல்ல தெய்வத்தின் இயற்கை வடிவத்தைச் சோதி என்கின்றனர் பக்தர்கள். பேயாழ்வார் "பொன்னொளி கண்டேன்" என்றார். மாணிக்கவாசகர் "செந்தழல்போல் திருமேனி" என்றார். இராமலிங்கசுவாமிகள் "அருட்பெருஞ்சோதி" என்றார். அப்பர் "சொற்றுணை வேதியன் சோதி வானவன்" என்றார். பாம்பாட்டிச் சித்தரும் "சோதிமயமான பரிசுத்தவத்துவை" எனப் பாடியிருக்கின்றார். இதுபோல் பல உதாரணங்கள் இருக்கின்றன ஆராய்ந்து கொள்க.

## உருவவணக்கம் எதுவரையில் செய்யலாம்

இனி, உருவவணக்கம் எதுவரையில் செய்யலாமென்றும் எங்கிருந்து செய்யக்கூடாதென்றும் சிலர் கேட்கலாமாதலால் அதற்கும் சிறிது கூறுவோம். விக்கிரக ஆராதனை நிறுத்தி அருவவழிபாடு எப்போது செய்வோமென நினைத்தல் கூடாது. கப்பல் ஓட்டித் தன் கப்பலை வேகமாக நடத்திக் கொண்டு போனால் கப்பல் தானே கலங்கரை யடையுமென்று கருதுவதுபோல் உருவவணக்கத்தையே செய்து கொண்டு போகவேண்டும். பின்னர் அருவவணக்கம் தானே ஏற்படும்.

## சமாதிநிலையும் உருவவணக்கமும்

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கில் முதல் மூன்றும் உருவவணக்கம் பற்றியதேயாம். அம் மூன்றும் கைவந்த பின்னரே ஞானம் எய்தப்படும். ஞான நிலையும் கைவந்துவிட்டால் அப்போது மட்டுமே உருவ வணக்கம் குறைந்துபோகும். எப்படியெனில், பூரண ஞானம் சித்தி பெற்றவர்கள் நினைத்தபோது சமாதிநிலையில் இருந்துவிடுகின்றனர். சமாதிநிலையானது உலகம்வேறு தான்வேறு என்றில்லாமல் எல்லாந் தானும் தானே கடவு ளாயும் பொருள்களின் உணர்ச்சியேயின்றிக்கிடப்பது. இங்கு தான் உருவவணக்கம் அற்றவர்களாக ஆகலாம். ஆனால் அடிக்கடி சமாதிநிலையில் இருந்த ஸ்ரீ இராமகிருட்டிண தேவர் நினைவிலிருக்கும் போதெல்லாம்கூட விக்கிரக ஆராதனையே செய்து வந்திருக்கின்றார். இப்பேர்ப்பட்ட பரமஞானி சமாதிநிலை கைவந்தவர் உருவவணக்கம் வேண்டாதபடியி லுள்ளவரே சிலையைக் கும்பிட்டு வந்தபோது சாதாரண ராகிய நாம் அதனைப் புறக்கணிக்கலாகுமோ!

உருவவணக்கம் செய்யாமல் மனவணக்கம் செய்யும் மாண்புபெற்ற மெய்ஞ்ஞானிகள் கண்ணை மூடிக்கொண்டு கட வுளை மனத்தால் நினைத்து வணங்குகின்றனர். அவர்கள் ஆரம்பத்தில் பல கோவில்களையும், பல விக்கிரகங்களையும் தரிசித்து வணங்கினதால் மனதில் உருவவணக்கம் பதிந்த வர்களாக இருக்கின்றனர். அவர்கள் கண்ணை மூடிக்கொண்டு வணங்கினபோதிலும் அவர்களுடைய மனதில் காண்பது கடவுளின் சோதி வடிவமேயாம். ஆகையால் மன வணக்கம் உருவவணக்கமேயாம். பள்ளிக்கூடத்தில் ஆரம்ப வகுப்பில் படிக்கின்ற பிள்ளைகள் மேலும் கீழும் கோடுபோட்ட காப்பி புத்தகத்தில் எழுதும் பழக்கம் அடைகிறார்கள். அவர்கள் மேல் வகுப்புக்கு வந்தபிறகுக் கோடில்லாமலே

எழுதுகின்றனர். மேல் வகுப்பிற்கு வந்தபிறகுக் கீழ் வகுப்பில்கோட்டில் எழுதும் பிள்ளைகளைப் பார்த்துக் கோடு வேண்டாமென்றாவது அவர்களைக் குறைத்தாவது பேசினால் எப்படிப்பொருந்தாதோ அதுபோலவேதான் உருவவணக்கம் வேண்டாமென்று கூறுகிறவர்கள் கருத்தாகும்.

உலகில் உள்ள முகம்மதிய கிருத்துவ சமயத்தவர்களில் சிலர் உருவவணக்கம் செய்யும் இந்து சமயத்தார்களை ஒவ்வொரு சமயத்தில் குறைத்துப் பேசுகின்றனர். இப்படிப் பேசுகிற சமயத்தார்கூட உருவவணக்கமே செய்கின்றனர். முகம்மதிய சமயமும் கிறிந்துவசமயமும் ஆதி வைதீக சமயத்திலிருந்து பிரிந்த கிளை, சமயங்களின் கொள்கைகள் எல்லாம் ஒன்றே.

முகம்மதியசமயமும் கிறித்துவசமயமும் கடவுள் இருக்கின்றார் என்று கூறுகின்றன. முகம்மதியர் கடவுள் பேரால் மசூதிகள் கட்டிச் சந்திரன் நட்சத்திரம் பஞ்சாக்களையும், கடவுள் பீடங்களையும் அமைத்துப் பச்சைத் துணியால் மூடி விளக்குகள் ஏற்றி, சாம்பிராணி ஊதுவத்திகள் கொளுத்தி எல்லாரும் அத்திசை நோக்கி வணங்குகின்றனர்.

கிறித்துவர்கள் கோவில்கள் கட்டி, சிலுவைகளையும், ஞானிகள் படங்களையும் அமைத்து மெழுகுவத்திகள் ஏற்றிச் சாம்பிராணிப் புகைகள் போட்டுக் கடவுளை வணங்குகின்றனர். எப்போது மசூதி, மாதாக்கோவில்கள் கட்டப்பட்டனவோ அப்போதே உருவவணக்கத்துக்குள் அடங்கினதே என்று கூறலாம். ஆகவே உருவவணக்கத்தைத் தாழ்த்திக் கூற ஒருவழியுமில்லை ; எல்லாச் சமயத்தார்களும் உருவவணக்கமே செய்து வருகிறார்கள் என்பதை மேலே காட்டிய ஆதாரங்களால் அறியலாம்.

இது ககஉஉல் நெட்டாள் பாய்ண்டு இந்திய வாலிப சங்கத்தில் என்னால் உபந்நியாசிக்கப்பட்டது.

---

# கஎ. சமயம் என்பதென்ன?

சமயம் என்பதென்ன? சமயத்தை ஏற்படுத்தினவர் கருத்தென்ன? சமயம் உலகில் எவ்வளவு தூரம் வேரூன்றியிருக்கின்றது? சமயத்தை அநுசரித்தவர்கள் என்ன நலமடைந்திருக்கின்றனர் என்பவைகளைச் சுருக்கமாய் அறிந்திருத்தல் வேண்டும்.

இவ்வுலகம் மிகப் பெரியது. இது உற்பத்தியாகிக் கோடிக் கணக்கான ஆண்டுகளாகின்றன. இதில் மனிதர் உற்பத்தியாகிப் பல்லாயிரம் ஆண்டுகள் வரையில் முன்னேற்றத்துக்கான அறிவுகள் இல்லாமல் விலங்கினங்கள்போல் வசித்திருந்தனர். இப்படி வசித்த மனிதர்கள் உலக முன்னேற்றத்துக்கான அறிவுகள் கற்று அதன்படி யொழுகி இனிய வாழ்க்கை நடத்தப் போதிப்பதே சமயம் எனப்படும்.

விலங்கினங்களைப்போல் வசித்து வந்த மனிதர்களுள் பலம், கல்வி, ஆற்றல், சமயம் முதலிய சகல அறிவுகளிலும் முதல்முதல் திறம்பெற்ற ஒருவர் தோன்றினார். அவர் உயிர்களிடம் இரக்கமுடையவராயும் அன்பு உடையவராயும் இருந்தார். அவர் காட்டுமிராண்டிகள்போல் வசித்துத் துன்பப்படும் மனிதர்களைக்கண்டு இரக்கங்கொண்டார். அவர்களுக்கெல்லாம் கட்டுப்பாடு, கல்வி, கடவுள், சமயம் முதலிய அறிவுகளைப் போதித்து உலகில் உய்யும் நெறிகாட்டினார். அவர் கைம்மாறு கருதாது போதித்த கொள்கையே சமயம் எனப்படும்.

அவர் போதித்த போதனைகளைக் கேட்டு அம்மனிதர்கள் நடந்ததால் கட்டுப்பாடு, கல்வி, கடவுள் பக்தி, அன்பு, ஈவு, இரக்கம் முதலிய உலக அறிவு ஒழுக்கங்களில் உயர்ந்து வந்தார்கள். இத்துணை முன்னேற்றமடையச் செய்த

வரையே தலைவராக்கி அவர் போதித்த சமயத்தின் பெய ரையே அவர்க்கிட்டு அவரைப் போற்றிப் புகழ்ந்து வந்தனர். இதனால் மனிதர் நாளடைவில் உலக அறிவுகளில் இன்னம் உயர்ந்து மற்றவர்களுடன் சேர்ந்து இனிய வாழ்வு வாழ லானார்கள்.

பிறகு, மனிதர்கள் உலகில் உய்யும் நெறிகாட்டினவர் ஆற்றலையும் மகிமையையுங் குறித்து அவரைக் கடவுள் என்ற னர். அவர் செயல்களைக் குறித்தும், மகிமைகளைக் குறித் தும் நூல்கள் எழுதினார்கள், ஆலயங்கள் கட்டினார்கள். அவற்றில் அவருடைய சிலைகளை வைத்து வணங்கினார்கள். இதனால் அவர்கள், தங்களுக்குக் கடவுள் அருள் உண்டாக உயர்நிலை அடைந்துகொண்டே வந்தனர்.

இனி உலகில் முதலில் ஏற்பட்ட சமயம் எது வென் பதைக் கூறுவோம். உலகில் தமிழர் முதல் குடிகள் என் றும், அவர் மொழி தமிழ்மொழி என்றும், அம்மொழியின் சமயக்கொள்கைகள் கொண்ட வேதங்கள் முதலில் உண்டா யின என்றும், இந்நூலில் ஏற்கனவே கூறினோம். அவ் விபரங்களால் சைவசமயம் உலகில் முதலில் ஏற்பட்ட ஒரு புராதன சமயம் என்பதை அறியலாம். சைவசமயம் சத் திய சமயமென்று இராமலிங்கசுவாமிகளும்; சைவசமயம் அன்புசமயமென்றும், சைவசமயமே சமயம் என்றும் தாயு மானசுவாமிகளும் அருளினர்.

அன்பை உலக மக்கள் அனைவரும் விரும்புவதால், ஆயி ரக் கணக்கான ஆண்டுகள் கையாண்டு அநுபவத்தில் பலன் கண்ட அன்பு சமயமே சைவசமயம். இச்சமயம் ஐரோப்பா, அமெரிக்கா, ஆபிரிக்கா, ஆசியா, எகிப்து, அச்ட்ரேலிய முதலிய கண்டங்களுக் கெல்லாம் சென்று அக்காலத்திலே பரவி இருந்தது. இவ்வுண்மையைப்பற்றி ஆங்காங்கு பூமி யில் புதைபட்டு அகப்படும் பொருள்களாலும் இலிங்கம்

முதலிய சிவச் சிலைகளாலும் ஆராய்ச்சிக்காரர்கள் நன்குபரி சோதனை செய்து, பண்டைக் காலத் தமிழரின் சைவசமயம் உலகமெங்கும் பரவியிருந்ததென்று எழுதியிருக்கின்றனர்.

சைவசமயத்தோடு மற்றச் சமயங்களும் வந்த விதங் களைப்பற்றிப் பார்ப்போம். உலகம் ஆதியில் ஏற்பட்டது போல் இப்போதில்லை. நாளடைவில் சில மாறுதல்களை யடைந்து கண்டங்களாகவும் தீவுகளாகவும் பிரிந்தன. இது போலவே ஆதியில் ஒரு மனிதர் கூட்டமாயிருந்தவர்கள், ஒரு சமயத்தை அநுசரித்துக்கொண்டிருந்தவர்கள் நாள டைவில் பெருகினார்கள். கூட்டங் கூட்டமாகப் பிரிந்து வெவ்வேறு இடங்களுக்கும், கண்டங்களுக்கும் போய் நிலைத்துவிட்டார்கள். அவர்கள் மொழி, பழக்கவழக்கங்களி லெல்லாம் கொஞ்சம் மாறுதலை அடைந்தார்கள். அவர்கள் ஏற்கனவே ஏற்பட்ட சமயக்கொள்கைகளி லிருந்து எடுத் துப் புதிய சமயங்களை உண்டாக்கினார்கள்.

இப்படி உலகில் அவ்வப்போது தோன்றின தீர்க்க தரிசிகளால் சில சமயங்கள் ஏற்பட்டன என்றாலும், இப் போது தலைமையாய் நின்று இருப்பவை சைவம், வைணவம், பௌத்தம், மகம்மதியம், கிறித்தவம் என ஐந்து சமயங்கள். சைவமும் வைணவமும் இந்துசமயமென இப்போது பொதுப்பெயரில் வழங்கப்பட்டு வருகிறது. இந்து என்ற பெயரை மேனாட்டார் இட்டனர். இப்படி ஏற்பட்ட சம யங்கள் எல்லாம் 'கடவுள் ஒருவர் இருக்கின்றார். வேதங்கள் இருக்கின்றன. மனிதர் அவரிடம் பக்திகொண்டு நல்லவராக வேண்டும். நல்லது செய்ய வேண்டும். மனிதரில் தாழ்ந்த வர்களிடம் அன்பு, இரக்கங்கொண்டு உதவிசெய்யவேண்டும்.' என்று போதிக்கின்றன. இவைகளே சமயங்களின் மூலக் கொள்கைகள். இக்கொள்கைகள் இல்லாத சமயங்களே இல்லை.

சமயங்களின் கொள்கைகளை யொட்டி எந்தச் சமயம் தன் சமயத்தில் உள்ள தாழ்ந்தவர்களுக்குச் சமயத்தாலும், கல்வியாலும், உணவாலும், உடையாலும், உதவி புரி கிறதோ அச்சமயமே இறைவன் திருப்பணியைச் சாரியாய்ச் செய்த சமயமாகும். அச்சமயமும் அதன் மக்களும் அபி விருத்தி அடைவார்கள். அவர்கள் உலகில் அடிமை நீங்கிச் சுவாதீனமாக வாழ்வார்கள். நாயன்மார்கள் இவ்வித சம யப்பணியே செய்தார்கள். இது போலவே சமய அறிஞர் களும் ஆலயங்களைப் பரிபாலிக்கிறவர்களும், கல்வியாலும், சமய நூலாலும் சமயத்தை அபிவிருத்தி செய்ய முன்வர வேண்டும். செல்வர்கள் தங்கள் சொத்துக்களை இம் முறை யில் செலவிட எழுதிவைக்க வேண்டும். அப்போது மட்டுமே நம் சமயம் அபிவிருத்தி அடையும்.

மனிதர்களுக்குச் சமயப்பற்றுதான் முதலில் இருக்க வேண்டும். உண்மைச் சமயப்பற்றுடையவர்கள் மொழிப் பற்று, குடும்பப்பற்று, தேசப்பற்று, சமூகப்பற்று உடை யவராகின்றனர். அவர்கள்தான் மொழி, சமயம், தேசம் ஆகியவைகள் உயர் நிலைக்கு வரவும் சுதந்தரமாகவும் உழைக் கின்றனர், பொருளும் கொடுக்கின்றனர், உயிரும் கொடுக் கின்றனர். அவர்கள் உலகில் என்றும் அழியாப்புகழ் பெற் றனர், பெறுகின்றனர். ஆகையால், ஒவ்வொருவரும் சமயப்பற்றுடையவராகிச் சிவபெருமான் அருள்பெற்று புகழ் அடைவார்களாக.

---

# கஅ. செய்யுள் பிரார்த்தனைகள்

## திருவங்கமாலை

## இது தமிழர் காயத்திரி

(இப்பதிகம் தினம் காலையில் உடல் சுத்திக்குப் பாடலாம்.)

அப்பர்சுவாமிகள் அருளியது.

திருச்சிற்றம்பலம்

தலையே நீவணங்காய்—தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீவணங்காய். (க)

கண்காள் காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றன்னைக்
கண்காள் காண்மின்களோ. (உ)

செவிகாள் கேண்மின்களோ—சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோன் மேனிப்பி ரான்றிற மெப்போதும்
செவிகாள் கேண்மின்களோ. (௩)

மூக்கே நீமுரலாய்—முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீமுரலாய், (௪)

வாயே வாழ்த்துகண்டாய்—மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்துகண்டாய். (௫)

நெஞ்சே நீநினையாய்—நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய். (சு)

கைகாள் கூப்பித்தொழீர்—கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர். (எ)

ஆக்கை யாற்பயனென்—அரன்
கோயில் வலம்வந்து
பூக்கையா லட்டிப் போற்றியென் னாதவில்
ஆக்கை யாற்பயனென். (அ)

கால்க ளாற்பயனென்—கறைக்
கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனென். (கூ)

உற்றா ராருளரோ—உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லானமக்
குற்றா ராருளரோ. (கo)

இறுமாந் திருப்பன்கொலோ—ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று
இறுமாந் திருப்பன்கொலோ. (கக)

தேடிக் கண்டுகொண்டேன்—திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை என்னுளே
தேடிக் கண்டுகொண்டேன். (கஉ)

திருச்சிற்றம்பலம்.

# கோளறு பதிகம்

## இராகு, எமகண்டம் முதலிய அசுபகாலங்களில் செய்யவேண்டிய பிரார்த்தனை

திருச்சிற்றம்பலம்

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஞாயிறுதிங்கள்செவ்வாய் புதன்வியாழம்வெள்ளி
சனிபாம்பிரண்டுமுடனே
ஆசறுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (௧)

என்பொடுகொம்பொடாமை யிவைமார்பிலங்க
வெருதேறியேழையுடனே
பொன்பொதிமத்தமாலை புனல்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டொடாறு
முடனாயநாள்களவைதாம்
அன்பொடுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (௨)

உருவளர்பவளமேனி யொளிநீறணிந்து
வுமையோடும்வெள்ளைவிடைமேல்
முருகலர்கொன்றைதிங்கள் முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
திருமகள்கலையதூர்தி செயமாதுபூமி
திசைதெய்வமானபலவும்
அருநெதிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (௩)

மதிநுதன்மங்கையோடு வடபாலிருந்து
மறையோதுமெங்கள்பரமன்
நதியொடுகொன்றைமாலை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
கொதியுறுகாலனங்கி நமனோடுதூதர்
கொடுநோய்களானபலவும்
அதிகுணநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (ச)

நஞ்சணிகண்டனெந்தை மடவாடனோடும்
விடையேறுநங்கள்பரமன்
துஞ்சிருள்வன்னிகொன்றை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடு முருமிடியுமின்னு
மிகையானபூதமவையும்
அஞ்சிடுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (ரு)

வாள்வரியதளதாடை வரிகோவணத்தர்
மடவாடனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றை நதிசூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாகமோடுகரடி
ஆளரிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (சு)

செப்பிளமுலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறுசெல்வனடைவார்
ஒப்பிளமதியுமப்பு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
வெப்பொடுகுளிரும்வாத மிகையானபித்தும்
வினையானவந்துநலியா

அப்படிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (எ)

வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாடனோடுமுடனாய்
வாண்மதிவன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஏழ்கடல்சூழிலங்கை யரையன்றனோடு
மிடரானவந்துநலியா
ஆழ்கடனல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (அ)

பலபலவேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறுமெங்கள்பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலு மறையோடுதேவர்
வருகாலமானபலவும்
அலைகடன்மேருநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (கூ)

கொத்தலர்குழலியோடு விசையற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாக முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
புத்தரொடமணைவாதி லழிவிக்குமண்ண
றிருநீறுசெம்மைதிடமே
அத்தகுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (கo)

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெறுன்னி
வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞானஞானமுனிவன்

தானுறுகோளுநாளு மடியாரைவந்து
நலியாதவண்ணமுரைசெய்
ஆனசொன்மாலையோது மடியார்கள்வானி
லரசாள்வராணைநமதே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## மகப்பேறு பதிகம்

### பிள்ளைப்பேறு விரும்புகிறவர்கள் செய்யவேண்டிய பிரார்த்தனை.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளியது.

திருச்சிற்றம்பலம்

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே. க

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. உ

மண்ணொடுநீ ரனல்காலோ டாகாய மதியிரவி
எண்ணில்வரு மியமான னிகபரமு மெண்டிசையும்
பெண்ணிெனாடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. ந

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் றண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. ச

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் றிருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்

மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்றூதர்
ஆலமிடற் றானடியா ரென்றடர வஞ்சுவரே. ௬

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தா னுறைகோயில்
பண்மொழியா லவனாமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே.

சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கு
முக்குளநன் குடையானு முக்கணுடை யிறைபவனே. ௭

பண்மொய்த்த வின்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்த னுரநெரித்தன் றருள்செய்தா னுறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடன்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. ௮

கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா னெனவிவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்து முணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண் காட்டானென்
றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே. ௯

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்பிரிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. ௧௦

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

# திருநீற்றுப் பதிகம்

## சுரம் முதலிய நோய்கள் தீரச் செய்யவேண்டிய பிரார்த்தனை

திருச்சிற்றம்பலம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயான் றிருநீறே. க

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தருவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. உ

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. ௩

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. ச

பூச வினியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச வினியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு வந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவால வாயான் றிருநீறே. ரு

அருத்தம தாவது நீறு வவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும் வெண்ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. சு

எயிலது வட்டது நீறு இருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் றிருநீறே. ௭

இராவணன் மேலது நீறு வெண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திருமேனி யால வாயான் றிருநீறே. ௮

மாலொ டயன றியாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்க டங்கண் மெய்யது வெண்பொடி நீறு
ஏலவுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மால வாயான் றிருநீறே. ௯

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடாக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத வினியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்து மால வாயான் றிருநீறே. ௧௦

ஆற்ற லடல்விடை யேறு மாலவாயான் றிருநீற்றைப்
போற்றிப் புகலிநிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

# நமச்சிவாய பதிகம்

## துன்புற்றபோது அத்துன்பம் நீங்கச் செய்யவேண்டிய பிரார்த்தனை

அப்பர்சுவாமிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே ௧

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே. ௨

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. ௩

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. ௪

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே. ௫

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமில னொடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. ௬

வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினே னாடிற்று நமச்சி வாயவே. ௭

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. ௮

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென் றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. ௯

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. ௧௦

திருச்சிற்றம்பலம்

* * * *

அலையடுத்த பெருங்கடனஞ் சமுதா வுண்டு
வமரர்கடந் தலைகாத்த வையர் செம்பொன்
சிலையெடுத்து மாநாக நெருப்புக் கோத்துத்
திரிபுரங்க ளெரியிட்ட செல்வர் போலும்
நிலையடுத்த பசும்பொன்னான் முத்தா னீண்ட
நிரைவயிரப் பலகையாற் குலையார்த் துற்ற

மலையடுத்த மழுபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. க

*　　*　　*　　*

மூத்தவனை யுலகுக்கு முந்தினானே
முறைமையா லெல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனை யேழுலகு மாயி னானே
யின்பனாய்த் துன்பங் களைகின் றானே
காத்தவனை யெல்லாந்தான் காண்கின் றானே
கடுவினையேன் றீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. க

மையனைய கண்டத்தாய் மாலு மற்றை
வானவரு மறியாத வண்ணச் சூலக்
கையவனே கடியிலங்கைக் கோனை யன்று
கால்விரலாற் கதிர்முடியுந் தோளுஞ் செற்ற
மெய்யவனே யடியார்கள் வேண்டிற் றீயும்
விண்ணவனே விண்ணப்பங் கேட்டு நல்கும்
செய்யவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. க0

*　　*　　*　　*

பாட்டான நல்ல தொடையாய் போற்றி
பரிசை யறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கண் முடியாய் போற்றி
தூமாலை மத்த மணிந்தாய் போற்றி
ஆட்டான தஞ்சு மமர்ந்தாய் போற்றி
யடங்கார் புரமெரிய நக்காய் போற்றி
காட்டானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. க

போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ண லரியாய் போற்றி

ஏற்றிசைக்கும் வான்மே லிருந்தாய் போற்றி
யெண்ணு யிரநூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முகற்கு மாற்கு மரியாய் போற்றி
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. ௧௦

* * * *

கருமணிபோற் கண்டத் தழகன் கண்டாய்
கல்லா னிழற்கீ ழிருந்தான் கண்டாய்
பருமணிமா நாகம் பூண்டான் கண்டாய்
பவளக் குன்றன்ன பாமன் கண்டாய்
வருமணிநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் வரதன் கண்டாய்
குருமணிபோ லழகமருங் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் றனே. ௧

விண்டார் புரமூன் றெரித்தான் கண்டாய்
விலங்கலில்வல் லரக்கனுட லடர்த்தான் கண்டாய்
தண்டா மரையானு மாலுந் தேடத்
தழற்பிழம்பாய் நீண்ட கழலான் கண்டாய்
வண்டார்பூஞ் சோலைவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் மறையோ டங்கம்
கொண்டாடு வேதியர்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் றனே. ௨

* * * *

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
யியமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்

பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே. ௯

மாலாகி நான்முகனாய் மாபூ தமாய்
மருக்கமா யருக்கமாய் மகிழ்வு மாகிப்
பாலாகி யெண்டிசைக்கு மெல்லை யாகிப்
பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப்
பூலோக புவலோக சுவலோ கமாய்ப்
பூதங்களாய்ப் புராணன் றானே யாகி
ஏலா தனவெல்லா மேல்விப் பானா
யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே ௧௰

* * * *

அத்தாவுன் னடியேனை யன்பா லார்த்தா
யருளோக்கிற் றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையு மரியைநீ யெளியை யானா
யெனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயே னாயேன்
பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையு மெம்பரமோ வைய வையோ
வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே. ௮

குலம்பொல்லேன் குணம்போல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லே னான்பொல்லேன் ஞானி யல்லே
னல்லாரோ டிசைந்திலே னடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீய மாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழை யேனே. ௯

திருச்சிற்றம்பலம்.

# வாழாப்பத்து

## மரணத்தின்போது செய்யவேண்டிய பிரார்த்தனை

*மாணிக்கவாசகசுவாமிகள் அருளியது.*

*திருச்சிற்றம்பலம்*

பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி வாயே. க

வம்பனேன் தன்னை ஆண்டமா மணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரும் அறியா ஒருவனே இருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவுஞ்
செம்பெரு மானே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே என்னையாள் வானே
என்னைநீ கூவிக்கொண் டருளே. உ

பாடிமால் புகழும் பாதமே அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஊடுவ துன்னோ டுவப்பதும் உன்னை
உணர்த்துவ துனக்கெனக் குறுதி
வாடினேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௩

வல்லிவா ளரக்கர் புரமெரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எல்லை மூவுலகும் உருவியன் றிருவர்
காணும்நாள் ஆதியீ றின்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௪

பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௫

பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ அளித்த
அருளினை மருளினால் மறந்த
வஞ்சனேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௬

பரிதிவாழ் ஒளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்துநான் வாழுமா றறியா

மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௭

பந்தணை விரலாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அந்தமில் அமுதே அரும்பெரும் பொருளே
ஆரமு தேஅடி யேனை
வந்துய ஆண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௮

பாவநா சாவுன் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்
முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௯

பழுதில்தொல் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி அணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. ௧௦

திருச்சிற்றம்பலம்



**நந்தி துருகம்**

மலை உச்சியில் கோவில் கட்டப்பட்டிருக்கிறது.
மலையில் கல்படிகள் வெட்டப்பட்டிருக்கின்றன.
படிகள் இருபுறத்திலும் பாம்பு உருவங்கள் கல்லில்
செதுக்கப்பட்டிருக்கின்றன.

[பக் - ககஉ

## அடைக்கலப்பத்து

### சவம் இடுகாட்டுக்குப் போகையிலும் அடக்கம் செய்யும் குழியண்டையும் செய்யவேண்டிய பிரார்த்தனை

*திருச்சிற்றம்பலம்*

செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந் தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா
வழுக்குமனத் தடியே னுடையாயுன் னடைக்கலமே. க

வெறுப்பன வேசெய்யுமென் சிறுமையைநின் பெருமையினாற்
பொறுப்பவ னேயராப் பூண்பவ னேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவ னேநின் றிருவரு ளாலென் பிறவியைவேர்
அறுப்பவ னேயுடை யாயடி யேனுன் னடைக்கலமே. உ

பெரும்பெருமானென் பிறவியைவே ரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெரு மானென் மனத்தினுள்ளே
வரும்பெரு மான்மல ரோனெடு மாலறி யாமநின்ற
அரும்பெரு மானுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௩

பொழிகின்ற துன்பப்புயல்வெள் ளத்தினின் கழற்புணைகொண்டு
இழிகின்ற வன்பர்க ளேறினர் வான்யா னிடர்க் கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுறவெறிய
அழிகின் றனனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௪

சுருள்புரி கூழையர் சூழலிற் பட்டுன் றிறமறந்திங்
கிருள்புரி யாக்கையி லேகிடந் தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரிமானென்ன நோக்கிதன் பங்கவிண் ணோர்பெருமா
னருள்புரி யாயுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௫

மாழைமைப் பாவிய கண்ணியர் வன்மத் திடவுடைந்த
தாழியைப் பாவு தயிர்போற் றளர்ந்தேன் றடமலர்த்தாள்

வாழியெப் போதுவந் தெந்நாள் வணங்குவன் வல்வினையே
னழியப் பாவுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௬

மின்கணி னார்நுடங்கு மிடையார் வெகுளிவலையி லகப்பட்டுப்
புன்கணனாய்ப் புரள்வேனைப் புரளாமற் புகுந்தருளி
யென்கணிலே யமுதூறித் தித்தித்தென் பிழைக்கிரங்கு
மங்கணனே யுடையா யடியேனுன் னடைக்கலமே. ௭

மாவடு வகிரன்ன கண்ணிபங் காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு வாய்நின் குறிப்பறியேன்
பாவிடை யாடு குழல்போற் கரந்து பரந்துள்ளம்
ஆகெடு வேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௮

பிறிவறி யாவன்பர் நின்னருட் பெய்கழற் றாளிணைக்கீழ்
மறிவறி யாச்செல்வம் வந்துபெற் றாருன்னை வந்திப்பதோர்
நெறியறி யேனின்னை யேயறி யேனின்னை யேயறியும்
அறிவறி யேனுடைய யாயடி யேனுன் னடைக்கலமே. ௯

வழங்குகின் றாய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன் விக்கினேன் வினையேனென் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. ௧0

திருச்சிற்றம்பலம்

# திருவருட்பா மங்களம்

இராமலிங்கசுவாமிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

அம்பலத் தரசே அரு மருந்தே
ஆனந்தத் தேனே அருள் விருந்தே.
பொதுநடத் தரசே புண்ணி யனே
புலவரெலாம் புகழ் கண்ணி யனே.
ஆனந்தக் கொடியே இளம் பிடியே
அற்புதத் தேனே மலை மானே.
படன விவேக பரம்பர வேதா
நடன சபேசா சிதம்பர நாதா.
ஐயர் திருச் சபை யாடகமே
ஆடுத லானந்த நாடகமே.
ஆனந்த நாடகங் கண்டோமேபர
மானந்த போனகங் கொண்டோமே.
சங்கர சிவசிவ மாதேவா
எங்களை யாட்கொள்ள வாவா.
அரகர சிவசிவ மாதேவா
அருள முதந்தர வாவா.
அருட்பொது நடமிடு தாண்டவனே
அருட்பெருஞ் சோதிஎன் ஆண்டவனே.
அருட்பெருஞ் சோதியைக் கண்டேனே
ஆனந்தத் தெள்ளமு துண்டேனே.
வாதபு ரீசுர வாகீசா
சிவசம் பந்தமூர்த்தி சுந்தரேசா.
பத்திமுத் திசித்தி தந்திடும்
பன்னிரு கையா மங்களம்.
சிற்சபேசா—சிவசிதம்பரம்.

திருச்சிற்றம்பலம்

# மன்னிப்புப் பிரார்த்தனை

## பட்டினத்து அடிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின் னஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொருத்தருள்வாய்கச்சி யேகம்பனே.

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனையால் வரும் தோடஞ் செய்த
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக்கேட்டிடுந் தீங்குகள் ஆயவுமற்று
எல்லாப் பிழையும் பொறுத்துஅருள் வாய்கச்சி யேகம்பனே.

திருச்சிற்றம்பலம்



**திருக்கழுக்குன்றச் சிவாலயம்**

இதற்கு மூவர்கோயில் என்ற பெயருமுண்டு.
இந்த ஆலயத்தைப் பாண்டியர்களும் சோழர்களும்
கட்டியிருக்கின்றனர். மிகப் பழமையானது.
உயரம் : அடிகள் உ௪0

பக் - கஙச

## சிவபூசை மந்திரம் ௧௦௮

சிவாலயங்களில் தமிழில் நூற்றெட்டு மந்திரங்களைச் சொல்லி சுவாமிகளுக்கு மலர் தூவி அர்ச்சனை செய்யலாம். வீடு, தொழிற்சாலை, பள்ளிக்கூடம் முதலிய கட்டிடங்கள் கட்ட கடகால் போடும்போதும், பந்தக்கால் நடும்போதும் திருமணம், கருமாதி முதலியன நடத்தும்போதும் ஓமம் வளர்த்து இம்மந்திரங்களைச் சொல்லி நெய்யும் தானியங்களையும் இட்டு முடிக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| அருளே | போற்றி! | குன்றைவளைத்தோய் | போற்றி! |
| அருவே | ,, | கூத்தாய் | ,, |
| அரூபனே | ,, | கெங்காதரா | ,, |
| ஆதி | ,, | கேட்பவனே | ,, |
| ஆண்டவா | ,, | கைலையாளி | ,, |
| ஆதரிப்பவனே | ,, | கொற்றவா | ,, |
| இறைவனே | ,, | கோமானே | ,, |
| இன்பமே | ,, | சங்கரா | ,, |
| ஈசா | ,, | சன்மார்க்கா | ,, |
| உடையானே | ,, | சாந்தா | ,, |
| ஊனமிலானே | ,, | சிவனே | ,, |
| எந்தையே | ,, | சின்மய | ,, |
| எம்பிரானே | ,, | சீவா | ,, |
| ஏகனே | ,, | சீமா | ,, |
| ஐயனே | ,, | சுத்தனே | ,, |
| ஒளியே | ,, | சூதிலாதவனே | ,, |
| ஒருவனே | ,, | செழுமதியானே | ,, |
| ஓதுபவனே | ,, | செம்பொருளே | ,, |
| ஓய்விலானே | ,, | சோமா | ,, |
| ஔவியமிலானே | ,, | சோமசுந்தரா | ,, |
| கடவுளே | ,, | தம்பிரான் | ,, |
| கருணையே | ,, | தகவுடையாய் | ,, |
| காப்பவனே | ,, | தாழ்சடையாய் | ,, |
| காருண்யனே | ,, | தாண்டவா | ,, |
| கிருபனே | ,, | தில்லையாய் | ,, |
| கீழ்மேலானவனே | ,, | தீதற்றவா | ,, |

துன்பமில்லாய் போற்றி!
தூமணியே ,,
தொன்மையா ,,
தெய்வமே ,,
தேசனே ,,
தோற்றுபவனே ,,
நந்தா ,,
நாதனே ,,
நாகனே ,,
நிருத்தா ,,
நின்மலா ,,
நீறணிந்தவனே ,,
நுட்பனே ,,
நூலா ,,
நெற்றிக்கண்ணனே ,,
நேர்மையானே ,,
நொய்விலானே ,,
நோய்தீர்ப்பவனே ,,
பரமனே ,,
பாம்பணிபவனே ,,
பித்தா ,,
பிரமமே ,,
பீடுடையாய் ,,
புண்ணியா ,,
புரமெரித்தாய் ,,
பூசிப்பவனே ,,
பெம்மானே ,,
பெருந்தகையே ,,
பேரொழிலே போற்றி!
பேசுபவனே ,,
பொற்பாதா ,,
போகி ,,
மன்று ,,
மதியே ,,
மாண்பே ,,
மழவிடையானே ,,
மாதொர்பாகனே ,,
மாசிலாமணியே ,,
முன்னவா ,,
முனிவா ,,
மூதறிவே ,,
மென்மையானே ,,
மேலோய் ,,
மொழியா ,,
மோகமிலானே ,,
வடிவனே ,,
வஞ்சமிலானே ,,
வாதனே ,,
விமலா ,,
விண்மணியே ,,
வீரனே ,,
வெண்ணீறனே ,,
வெள்விடையானே ,,
வெகுளியிலானே ,,
வேதனே ,,
போற்றி, போற்றி! சிவனே போற்றி!

## அநுபந்தம்

தமிழ் வேதநூல் பிரசுர நிதிக்கு வெளியில் வசூலுக்குச் சென்றபோது அச்சுக்கூடத் தொழிலையும், செந்தமிழ்ச் செல்வன் பத்திரிகையையும், நடத்த எனது மனைவியும், குமாரர்களும், மைத்துனர் கல்வி பத்திராதிபர் ச. மு. பிள்ளை அவர்களும், அச்சுக்கூட கூட்டாளி ரத்னசாமி வெங்கிட்டேசும், அச்சுக்கூடத்தில் தொழில் பார்ப்பவர்களும், உதவியாக இருந்தனர். வெளி பாகங்களுக்குச் சென்றிருந்தபோது டோங்காட் பெரியார் எம். ஜி. நாயடு அவர் மனைவி முனியம்மாள் எனது சகோதரர் கோ. ஜெயராம் நாயடு கூட இருந்து உதவியாக இருந்தனர்.

வெளி பாகங்களில்கூட இருந்து உதவியாக இருந்த முக்கியமானவர்கள் மேரிட்ச்பர்க். ஸ்ரீமான்கள். எஸ். ஆர். நாயடு. ஆர். எம். முதலியார். ஆர். என். முதலியார். எஸ்கோர்ட். ஸ்ரீ. வி. டி. பிள்ளை. லேடிசமித் ஸ்ரீமான்கள். வி. பி. செட்டியார். சி. எஸ். கவண்டர். டண்டி ஸ்ரீமான்கள். வி. ஜி. நாயடு, வி. பி. பிள்ளை. டண்ஹவுசர். ஸ்ரீமான்கள். வி. ஆர். கவண்டர், ஆர். லோகநாத படையாச்சி, எல். தேவர், துரைசாமி நாய்க்கர். நிவகாசல் ஸ்ரீமான்கள். சி. வி. அப்பு, நாராயணசாமி நாயடு. அய்டல்பர்க் ஸ்ரீ. எ. எஸ். படையாச்சி.

பிரிட்டோரியா, ஸ்ரீமான்கள். வை. அப்பாசாமி நாயகர் சி. தியாகராஜன் பிள்ளை, மு. வித்தியானந்த நாயடு, கி. ப. சிங்காரவேலு முதலியார், கோ. முத்து செட்டியார். பெனோனி. சி. எஸ். முதலியார், கே. பி. நாயடு. பொக்ஸ்பேக் ஸ்ரீமான்கள். சி. எஸ். முதலியார், விபுஷண நாயகர். செர்மிஸ்டன். ஸ்ரீமான்கள். சி. எம். முதலியார், 'சி. எஸ். முதலியார், பி. ஆர். சாமி. ஜோனஸ்பர்க் ஸ்ரீமான்கள். என்.

எஸ். பிள்ளை, வி. எஸ். நாய்க்கர். அ. சொக்கலிங்கம் முதலியார், சி. எஸ். முதலியார், வைத்திலிங்கம் பிள்ளை. அ. பாலசுப்பிரமணி முதலியார். விரிணிகிங். ஸ்ரீமான்கள். சி. எஸ். முதலியார். அ. சொக்கலிங்க முதலியார். கிரடாக். ஸ்ரீ. எஸ். எஸ். உடையார். கிம்பர்லி. ஸ்ரீ. து. கந்தசாமி பிள்ளை. போர்ட் எலிசபெத் ஸ்ரீமான்கள் கே. எஸ். பிள்ளை, வியோ ஆர். கோபால், எம். எஸ். நாகப்ப படையாச்சி. ஈஸ்ட் லண்டன். ஸ்ரீமான்கள். கு. பொன்னுசாமி படையாச்சி, வி. பழனி முதலியார். கிராமஸ்டவுன் ஸ்ரீ. எஸ். வேலு.

டர்பன் ஸ்ரீமான்கள். செ. அப்பாசாமி மேஸ்திரி, கே. கந்தசாமி பத்தர், வி. கணபதி பத்தர். ஓவர்போர்ட். ஸ்ரீமான்கள். கே. நாணு நாயர், எம். எஸ். முதலியார். மேவில் ஸ்ரீ. ஆர். என். நாயடு. டர்பன்நோர்த் ஸ்ரீ. எஸ். என். மேஸ்திரி. கிளேர்வுட் ஸ்ரீமான்கள் வி. சி. நாயடு, எம். கிஷ்டப்ப நாயடு. இஞ்ஞண்டா ஸ்ரீமான்கள். எம். கே. கவண்டா, கோவிந்தசாமி கவண்டர், எஸ். கவண்டர். வெருளம். ஸ்ரீ. எம். எஸ். நாயடு நிவ் கிளாஸ்கோவ் ஸ்ரீமான்கள். எம். எஸ். நாயடு, எம். வேலு. ரெட்கிளிப் ஸ்ரீ. எம். எஸ். நாயடு. ஸ்டாங்கர். ஸ்ரீமான்கள். இராமசாமி படையாச்சி, கே. நாணு நாயர். செட்ஸ்வொர்த். ஸ்ரீமான்கள். எம். குப்புசாமி தம்பிரான், எஸ். என். நாயடு. கணபதி தம்பிரான். அம்சிண்டோ ஸ்ரீமான்கள். எம். எ. கவண்டர், இராம ரெட்டியார். போர்ட் ஷெப்ஸ்டன் ஸ்ரீமான்கள். இராம ரெட்டியார், ப. துரைசாமி பிள்ளை. முத்துகிருஷ்ண முதலியார். வெண்ட்வோர்த் ஸ்ரீமான் மு. வீராசாமி கவண்டர்.

## நூல் வெளியாக நிதி உதவிச் செய்தவர்கள்

அம்சிண்டோ

ஸ்ரீ. எம். எம். கவுண்டர்

மால்வார்ன்

ஸ்ரீ. ஏ. பி. நாயுடு

பயின்டவுன்

ஸ்ரீ. ஆர். எம். நாயுடு

மேரிட்ஸ்பர்க்

ஸ்ரீமான்கள்,
ஜோ. சுப்பையா பிள்ளை
பி. என். நாயுடு
எஸ். டி. செட்டியார்
எஸ். ஆர். நாயுடு
ஆர். நமச்சிவாய படையாச்சி
சி. நல்லையா நாயுடு
ஆர். எம. முதலியார்
ஏ. டி. முதலி
ஆர். எம். முதலி, சன்
வி. கிரிச்டி
முதலி சேர்வெஸ் ஸ்டேசன்
ஸ்ரீமதி வி. சி. நாயுடு அண்சன்ஸ்
கே. ஜீ. நாயுடு
போபி நல்லையா
வி. என். படையாச்சி
சி. வி. முதலியார்
எம். எஸ். நாயுடு
சொக்கலிங்க பத்தர்

ஆவிக்

ஸ்ரீ. எம். சின்னசாமி முதலியார்

எஸ்கோர்ட்

ஸ்ரீமான்கள
வி. டி. பிள்ளை
எஸ். எம். ரெட்டி

லேடிஸ்மித்

ஸ்ரீமான்கள்
வி. பி. செட்டியார்
சி. எஸ். கவுண்டர்
எஸ். என். பிள்ளை
பி. ஜி. பிளளை
எம். என். பிள்ளை
ஏ. ரெட்டியார்
ஜீ. ஜீ. செட்டி
ஆர். எஸ். பிள்ளை
எம். எஸ். ஆச்சாரி
சண்முக முதலியார்

கோலின்சோ

ஸ்ரீ வி. ஜீ. நாயுடு

டண்ணெசர்

ஸ்ரீமானகள்
வி. ஆர். கவுண்டர்
ஏ. பி பிள்ளை
கே. சுப்பையா
லோகநாதன்
முத்தியால் மேஸ்திரி
டி. இ. நாய்க்கர்
ஏ. எல்லரி

நிவ்காசல்

ஸ்ரீமான்கள்
சி. வி. அப்பு
நாராயணசாமி நாயுடு
ஸ்ரீமதி ஏ. ஆர். செட்டி
பச்சையப்ப கவுண்டரும்,
குமாரர்களும்
ஸ்ரீமதி தனம்மாள்
பொன்சாமி சகோதரர்கள்

ஆர்.ஏ. கவுண்டர் சகோதரர்கள்
கே. பி. நாய்க்கர்
முனிசாமி நாயுடு
டி. எம். படையாச்சி

## அய்டல்பார்க்

ஸ்ரீமான்கள்
ஏ. எஸ். படையாச்சி
இராமசாமி நாயடு
நல்லப்ப கவுண்டர்

## பிரிட்டோரியா

ஸ்ரீமான்கள்
பி. சிங்
சி. டி. பிள்ளை
கோ. முத்து செட்டியார்
பி. சுவாமிநாதன்
வை. அப்பாசாமி நாயகர்
ஜி. ஆர். பிள்ளை
எஸ். எஸ். செட்டியார்
எம். வி. படையாச்சி
வி. வி. ஆர். நாயடு
அ. சொக்கலிங்க முதலியார்
சொ. அருணாசல பண்டாரம்
பொ. வேலாயுதம் செட்டியார்
மு. வித்தியாநந்த நாயுடு
நா. திருவேஙகட படையாச்சி
ஆர். சுப்பிரமணி முதலி
எம். சி. பிள்ளை
கு. அம்பலவாண படையாச்சி
ஏ. வீரப்பன் படையாச்சி
மு. முனிசாமி
எம். வி. பிள்ளை
சி. பி. பிள்ளை
ஏ. நடேசன்
வி. பரசுராம கவுண்டர்
வை. அ. சண்முக நாயகர்
வி. எஸ். மாணிக்கம் பிள்ளை
எஸ். கோவிந்தசாமி

## பெனோனி

ஸ்ரீமான்கள்
சி. முதலியாரும் குமாரரும்
கே. பி. நாயடு
எஸ். எஸ். நாய்க்கர்
வி. டி. நாயடு
ஆர். சன்கா
என். பர்பு
பி. சிங்
எம். முதலி
ஸ்ரீமதி எஸ். ஏ. பிள்ளை
என். முதலி

## போக்ஸ்பர்க்

ஸ்ரீமான்கள்
சி. நடேச முதலி
டி. விபுஷண நாயகர்
டி. எம். கவண்டர்
டி. ஜி. கவண்டர்
ஆர். ஏஸ. முதலி

## ஜோர்மஸ்டன்

ஸ்ரீமான்களா.
எல். பி. மாராஜ் பண்டிட்
சி. எம். முதலி
டி. அப்பாவு செட்டியார்
எம். கவண்டர்
எம். ஜக்ராம்
பி. ஏ. சிங்
எம். ஏ. படையாச்சி
நயினி மேஸ்திரி
பி. சி. கவண்டர்
கே. ராசு நாயடு
எம். கோப்பால் '

எல். கவண்டர்
வி. ஆர். படையாச்சி
பி. டி. கவண்டர்
மூன்று சிங்
கிஸ்டா நாயடு

## ஜோனஸ்பர்க்

ஸ்ரீமான்கள்
ஆர். எஸ். சி. பிள்ளை
ஜி. வாண்டியர் சகோதரர்கள்
வி. எல். பத்தர்
ஆதிமூல படையாச்சி
எஸ் ஆர். நாயடு
டி. பக்கிரி படையாச்சி
ஏ. கோவிந்த செட்டி
கே. தம்பி
டி. பாவாடை நாயடு
எச் டி. சிங்
வி. எஸ. நாய்க்கர்
வி. என். படையாச்சி
சி. டி. படையாச்சி
வி. எஸ். முதலியார்
ஏ. பாலசுப்பிரமணி முதலியார்
எ. ஜி. நாயுடு
என். ஜி. பிள்ளை
ஜி. வாசுதேவ நாயுடு
என். சுப்பிரமணி பிள்ளை
வி. இராமசாமி படையாச்சி
எம். பாலசுப்பிரமணி
பக்கிரி முதலியார்
என். எஸ். நாயுடு
பி. கோவிந்தசாமி நாயுடு
எம். ஆர். நாயடு
எம். சுப்பிரமணி முதலியார்

## கிளிவ்லேண்ட்

கே. எம். நாயடு

## கிம்பர்லி

ஸ்ரீமான்கள்.
என். கே. பிள்ளை
டி. வி. ஆர். பிள்ளை
ஜி. என். நாயடு
ஆர். சாமி
எஸ். ஏ. ராயர்
மாரிமுத்துசாமி
டி. கந்தசாமி பிள்ளை
டி. கோவிந்தசாமி நாயுடு
ஏ. சோவிந்தராஜ் படையாச்சி
எம். நாராயணசாமி நாயடு
எஸ். எம். சுப்பம்மாள்
கே. சி. கோவிந்தசாமி நாயுடு
எஸ். மாரிமுத்து படையாட்சி
டி. ஜே. பிள்ளை
என். சொக்கலிங்க முதலியார்

## யுட்னிக்

ஸ்ரீ. கே. எஸ். பிள்ளை

## கிளாக்கர்ஸ்டோர்ப்

ஸ்ரீ.மா. ஆறுமுக வாண்டையார்

## புளுமாப்

ஸ்ரீ. வை. ரா. சபாபதி பிள்ளை

## விரீனிகிங்

ஸ்ரீமான்கள்.
தம்பி ஜீ. நாயடு
ஆர். சி. மேஸ்திரி

## கிரடாக்

ஸ்ரீமான்கள்.
எஸ். எஸ். உடையார்
வி. கிருஷ்ணே

## மோல்டிநோ

ஸ்ரீ. என். எஸ். பிள்ளை

## போர்ட் எலிசபேத்

ஸ்ரீமான்கள்.
வி. வேலாயுதம்
எம். எஸ். நாகன்
ரோயப்பன்
வாண்டியார் சகோதரர்கள்
சி. நடேசன் படையாச்சி
வி. பி. நயனர்
எ. எஸ். செட்டி
எம். துரைசாமி
ஸ்ரீமதி பாவாடை படையாச்சி
டிகாம் தாஸ்
எஸ். முருகேஸ் பிள்ளை
ஸ்ரீமதி ,, ,,
ஆர். டி. பிள்ளை
ஸ்ரீமதி ,,
எ. ஆர். செட்டி
எஸ். கே. நாயடு
ஜி. ஆதிமூல படையாச்சி
எஸ். எ. பி. சுந்தரம்
வி. ரத்தனம்
ஸ்ரீமதி பொன்னுசாமி செட்டி
எ. மாரிமுத்து
வள்ளியம்மாள், கோப்பால்
ஜி. துரைசாமி
காவேரி படையாச்சி

## ஈஸ்ட்லண்டன்

ஸ்ரீமான்கள்.
கு. பொன்னுசாமி படையாச்சி
ஆர். வி. செட்டியார
கிருஷ்ணசாமி
குமாரசாமி படையாச்சி
வி. பி. முதலியார்
ஜே. வி. நாயடு
பிள்ளை சகோதரர்கள்
எ. எஸ். பிள்ளை
உலியம்ஸ்
சிங்காரம் சேதுராயர்
நா. வேலு படையாச்சி
சி. முதலியார்
எஸ். எம் பிள்ளை
ஆர். கோவிந்தசாமி
பி. பி. நாகன்
ஜோர்ஜ் நாயடு

## டண்டி

ஸ்ரீமான்கள்.
வி. ஜி. நாயடு
வி. பி. பிளளை
எம். என். பிள்ளை
டோமி
நத்து
கே. உடையார்
பி. ஆர். சிங்
ஜே. ஜே. சிங்.
வி. வி. நாயடு
நடேச முதலியார்

## இனெண்டா

ஸ்ரீமான்களள.
எம். சுப்புராய கவண்டர்
சகோதரர்கள்
சி. பக்கிரி கவண்டர் சகோதரர்
சோலகவண்டரும்குமாரர்களும்
கோவிந்தசாமி கவண்டர்
எ. கே. பிள்ளை

## சேட்ஸ்வோர்த்

ஸ்ரீமான்கள்.
எம். பெருமாள்
மு. குப்புசாமி தம்பிரான்
பெருமாள் ரெட்டியார்
டி. எம். முதலி சகோதரர்கள்
பார்த்தசாரதி கவண்ட

ஜெ. ரங்கசாமி நாயகர்
வி. ஆர். கவண்டர்
பி. முனிசாமி ரெட்டியார்
எ. சுப்பய்யா நாயடுசகோதரர்கள்
கே. ஜி. முருகன்
சு. அ. வெஙகட்சாமி நாயடு
எம். முருக தம்பிரான்
எல். எஸ். நாய்க்
எஸ். கிஷ்ட நாயடு
கே. டி. நாயடு

## போர்ட் செப்ஸ்டன்

ஸ்ரீமான்கள்
பரசுராம பிள்ளை
வி. அப்பல்ராசு
ஆர். முத்துகிருஷ்ண முதலியார்
சி. எம. முதலியார்
எம். கே. ரெட்டியார்
கண்ணய்யா நாயடு
இ. பி. முதலியார்
எஸ். ஆர். நாயடு
எஸ். நாயடு
பழனி கவண்டர்

## அம்சிண்டோ

ஸ்ரீமான்கள்
கே. என். ரெட்டியார்
இராம ரெட்டியார்
எம். சின்னப்ப கவண்டர்
சி. சி. கவண்டர்
எம். சின்னப்ப கவண்டர்
சி. எம். நாய்க்கர்
எம். டி. நாய்க்கர்
எம். சாமி பத்தர்
எம். ஜி. நாய்க்கர்
ஜி. முனிசாமி கவண்டர்
பி. முதலியார்

## எஸ்பிரான்சா

ஸ்ரீ. எம். காப்பய்யா முதலியார்

## அம்கோமாஸ்

ஸ்ரீமான்கள்.
ஸ்ரீமதி. ஆர். சி. நாயடு
எஸ். ஆர். படையாச்சி
பி. குப்புசாமி முதலியார்

## எயிரன்ஸ்

ஸ்ரீ. பி. எம். ரெட்டியார்

## மவுண்டேஜ்கோம்ப்

ஸ்ரீமான்கள்.
சி. மாரிமுத்து சேதுராயா
எம். வடிவேல் சேதுராயர்
எம். பெருமாள் கவணடர்
கே. எம். சாருகாசர்

## ஸ்டாங்கர்

ஸ்ரீமான்கள்.
நாராயண படையாச்சி
எ. பி. நாயடு
இராமச்சந்திர முதலியார்
வி. என். படையாச்சி சகோதரர்
முனிசாமி கவண்டர்
எம். மாணிக்க முதலியார்
எம். எம். முதலியார்
எம். நாய்க்கர்
பி. இ. பிள்ளை

## சாக்காஸ் கிரால்

ஸ்ரீ. பி. கே. முதலியார்

## அம்ஷ்லாலி

ஸ்ரீ. கே. எஸ். முதலியார்

## மியர்பேங்க்

ஸ்ரீ. ச. நடேச உடையார்

### நியுவ்கிளாஸ்கோ

ஸ்ரீமான்கள்.
டாம் முருகன் சகோதரர்கள்
எ. முனிசாமி சகோதரர்கள்
எம். எஸ். நாயடு
எம். நலலப்ப நாயடு
ஜீ. முனிசாமி கவண்டர்
ஆர். எல்லப்ப கவண்டர்
எம். வி. கவண்டர்
கே. பி. பிள்ளை
எம். அண்ணமலை கவண்டர்

### ஓவர்போர்ட்

ஸ்ரீமான்கள.
கே. நாணு நாயர்
எம். சி. முதலியார்
ஆர். எஸ். படையாச்சி
வி. ஆர். செட்டியார்
எஸ். எம். பிள்ளை
முனிசாமி மேஸ்திரி
எம். எஸ். முதலியார்
என். வி. எஸ். செட்டியார்
ஆர். எஸ். பி. செட்டியார்
இ. ஆர். முதலியார்
பி. எம். உடையார்
ஸ்ரீமதி முத்துலட்சுமி நாயடு
கா. கயிலாசம் முதலியார்
பி. ஜீ. முதலியார்
சி. பெனி
தாயம்மாள் நாய்க்கர்
எம். எம். பிள்ளை
வி. எம். மேஸ்திரி
என். முருகய்யா மேஸ்திரி
எஸ். முனிசாமி மேஸ்திரி
பிராங்க முத்துசாமி
இராமசாமி நாயடு

ஸ்ரீமதி. ரத்ன முதலியாரும்
குமாரர்களும்
மா. பூவலிங்கம் பிள்ளை
ஆர். குரூப்

### டர்பன்

ஸ்ரீமான்கள்
வி. எம் மேஸ்திரி
பி. எஸ். பெருமாள்
பம்பாய் பஜார்
அப்பாசாமி மேஸ்திரி
ஸ்ரீமதி அப்பாசாமி மேஸ்திரி
எஸ். எம். நாயடு
எ. கே. பிலிப்
பி. ஜி. நாய்க்கர்
பிரிமியர் டெயிலர்
கே கே பத்தர்
வி. கணபதி பத்தர்
கோ. சுப்பிரமணிய பத்தர்
ஆர். எம். நாயடு
எம். வி. ஜீ. நாயடு
எ. வி. முதலியார்
பி. கிருஷ்ணசாமி நாயடு
பிரிட்டேனியா டெயிலர்ஸ்
டி. வி. நாயடு
எம். கே. நாய்க்கர்
கோவிந்தன்மேஸ்திரி சகோதரர்
எம். கெங்கன்
எ. மாணிக்கம்
ஆர். ஜீ. நாயடு
ஆர். இ. ரெட்டி
எஸ் கே. நாயடு
குப்பி மாரி
எஸ். டி. முதலியார்
ஆர். ஆர். நாயடு
எம். சி. பத்தர்
வி. எஸ். அய்யர்.

வ. மாணிக்கம் பிள்ளை
எஸ். பக்கிரி நாடார்
என். மாணிக்கம் பிள்ளை
எஸ். ஜீ. பிள்ளை
பி. சின்ன சாமி
வி. டி. பிள்ளை
வி. எம். எம். ஆச்சாரி
ஆர். கே. நாயுடு
பி. எம் முதலி
கா. குருசாட முதலியார்
பக்கிரி சய்மன்
ப. நடேச முதலியார்

டர்பன்நோர்த்

ஸ்ரீமானகள்.
போப் நாயுடு
எஸ். நரசிம்மலு மேஸ்திரி
சகோதரர்கள
வி நாராயணசாமி கவுண்டர்
வி. கிருஷ்ணசாமி சகோதரர்
எல். என். கண்டர்
டி. எம். ரெட்டி
கந்தசாமி ஆச்சாரி

பிராயர்டீன்

ஸ்ரீமான்கள்.
கே. மதுரைமுத்து
எம். ஆர். முதலி

பில்லேர்

கே. வி. கவுண்டர்

டோங்காட்

எம். ஜி. நாயுடு
கோபால் நாயுடு சர்தார்
எஸ். டி. நாயுடு

நியுவ்லெண்ட்ஸ்

ஸ்ரீ ஆர். எம். கவுண்டர்

ஓய்பேங்க்

ஸ்ரீ என். சி. முதலி

மேவில்

ஸ்ரீமான்கள்.
ஆர். என். நாயுடு
வி. கே. நாயுடு
ஆர். எல். நாயுடு
எம். எஸ். நாயுடு
எம். கே. கவுண்டர்

கிரீன்வுட்பார்த்

குருசாமி தாத்தய்யா
எம். டி. பிள்ளை

ரெட்கிளிப் வெருளம்

ஸ்ரீமான்கள்.
பி. சி. முனிசாமி சகோதரர்கள்
டி. வி. முதலி
ஆர். சண்முகம்
டி. பாப்படு
எ. பெருமாள
கே. எ. முனிசாமி
வி. சுப்பன்
எ. பரசுராமன்
ஸ்ரீமதி மங்கம்மாள்
ஒ. வெள்ளைசாமி
இராகவஜீ ரகுநாத்
இராமசாமி
எஸ். என். நாயுடு
ஆர். என். நாயுடு
எ. பி. நாயுடு
எல்லன்
எ. பி. முதலி

வெண்ட்வோர்த்

ஸ்ரீமான்கள்.
சி. வெங்கிடபதி நாயகர்

மு. வீராசாமி கவுண்டர்
பி. முனிசாமி நாயகர்
பெ. நடேச நாயகர்
ஆர். எஸ். நாயடு
மு. வடிவேல் கவுண்டா
எஸ். எம் கவுண்டர்
வி. பெரியதம்பி நாயகர்

## கிளோர்வுட்

ஸ்ரீமான்கள்.
வி. சி. நாயடு
எம். மாரிமுத்து
எம். சி. நாய்ககர்
எஸ். பிள்ளை
எஸ். கவுண்டரும் குமாரர்களும்
எ. சி. கவுண்டர்
பி. சி. பிள்ளை
எம். தர்மலிங்கம்
டி. ஜி. கவுண்டர்
சி. குப்புசாமி படையாச்சி
எஸ். எ. நாயடு
அ. சந்நாசி பீட்டர்
மு. மாணிக்க படையாச்சி
நாசிம்மலு கவுண்டர்
எம். ஜீ. நாயடு
ஆர். பக்கிரியா பிள்ளை
ச. சுப்பு கவுண்டர்
டி. கே. நாயடு
எம். கிஷ்டப்ப நாயடு
சி. வி. நாயடு
பி. எம். ஆரி (முனிசாமி)
டி. எம். சின்னசுவாமி நாயடு
ஜேகோப்ஸ் ஸ்ரீமுருகக் கடவுள் ஆலய ஸ்தானிகர் எம். சுப்பிரமணி கவுண்டர்
அக்கிராசனர் இராமய்யா நாயடு
காரியதரிசி எஸ். ஜீ. மாணி
பொக்கிஷதார்
பாபய்யா நாயடு

## கிராமஸ் டவுன்

சீனிவாசன் வேலு
பி. என். பிள்ளை
ஜி. என். காலன்
என். எச். செட்டி